# கல்கி

KALKI
7.5.2000
ரூ. 5.00

"கோலிவுட் ஸ்கூல்;
பாலிவுட் காலேஜ்!"

— ராணிமுகர்ஜி பேட்டி

பாதுகாப்பான முதலீடு - நிலையான வருமானம்

# பவர்ஃபைனான்ஸ்

## தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

### முதலீடுகளுக்கு திருத்தியமைக்கப்பட்ட வட்டி விகிதங்கள் (15-4-2000 முதல்)

| காலம் | முறையான வட்டி வழங்கும் திட்டம் (RIPS) | | திரள் வட்டி வழங்கும் திட்டம் (CIPS) - I | |
|---|---|---|---|---|
| | வழங்கப்பட உள்ள ஆண்டு வட்டி விகிதம் | | முதிர்வுத் தொகை ரூ. 5,000/-த்திற்கு | ஒரு ஆண்டிற்கு பெறக்கூடிய வருவாய் விகிதம் |
| | மாதத்திற்கு | காலாண்டிற்கு | | |
| 12 மாதங்கள் & 1 நாள் | – | 11.10% | ரூ. 5,580/- | 11.57% |
| 25 மாதங்கள் | – | 11.61% | ரூ. 6,346/- | 12.92% |
| 36 மாதங்கள் | 12.50% | 12.63% | ரூ. 7,261/- | 15.07% |
| 48 மாதங்கள் | 12.50% | 12.63% | ரூ. 8,222/- | 16.11% |
| 60 மாதங்கள் | 12.50% | 12.63% | ரூ. 9,311/- | 17.24% |

### திரள் வட்டி வழங்கும் திட்டம் (CIPS) - II

| காலம் | குறைந்த அளவு டெபாசிட் ரூ. | முதிர்வுத் தொகை ரூ. | ஒரு ஆண்டிற்கு பெறக் கூடிய வட்டி விகிதம் |
|---|---|---|---|
| 60 மாதங்கள் | 537/- | 1,000/- | 17.24% |

**டெல்லியில் டெபாசிட் திரட்டும் முகாம்**

**இடம் :** "டெல்லி தமிழ் சங்கம்"
தமிழ் சங்கம் மார்க், செக்டார் 5, ஆர்.கே. புரம்,
புதுடெல்லி - 110 022.
**தொலைபேசி :** 6193964, 6193966
**நாள் :** 18-5-2000 முதல் 21-5-2000 வரை




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**
(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)
பதிவு அலுவலகம் : எண் 84, டிடிகே. சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894 மின் அஞ்சல் : powerfin@md3.vsnl.net.in
Visit us at: www.tnpowerfinance.com / www.tninfrafinance.com

28-9-99 தேதியிட்ட எகனாமிக் டைம்ஸ் இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது

# முதல்ல சிரிங்க!



''என்னது... தலைவர் தாறுமாறா அறிக்கை விடறாரா?''

''ஆமா... இந்திய கிரிக்கெட் வெற்றிக்கு ஒத்துழைத்த குரோனியேவுக்கு பத்மபூஷண் தரணுமாம்!''

— தஞ்சை தாமு



''பச்சரிசி வேணுமா... புழுங்கலரிசி வேணுமா?''

''உயர் ரக கடத்தல் அரிசியா போடுப்பா...''

— தஞ்சை தாமு



''உங்க படத்தோட வீடியோ உரிமையை குடுங்க சார்''

''முடியாது.''

''அப்ப... திருட்டு வீடியோ உரிமையையாவது தாங்க!''

— அஜார். தேனாம்பேட்டை



''நீ சம்பளம் கொடுக்காமலே எப்படி அந்த வேலைக்காரி உன் வீட்டில வேலை செய்யறா...?''

''அதான் வீட்ல தினமும் ரெண்டு மணி நேரம் இன்டர்நெட்டை யூஸ் பண்ணிக்கறாளே!''

— மிஸ்டர் எக்ஸ்



''எதுக்காக இப்படி வீடு முழுக்க தர்பூஸ் வாங்கிப் போட்டிருக்கே?''

''நூறு தர்பூஸ் வாங்கினால் ஒரு புடவை இலவசம்னு சொன்னான்!''

— மிஸ்டர் எக்ஸ்

"குடும்ப அரசியலை நான் எதிர்க்கிறேன். இன்னாருடைய குடும்பத்தைச் சேர்ந்தவர் என்ற ஒரே தகுதியினால், ஒருவரை தலைவராக்குவதை நான் ஆட்சேபிக்கிறேன். தலைவர் என்பவர் இந்தச் சமுதாயத்தால் உருவாக்கப்பட வேண்டும்!" என்கிறார் அம்பேத்கரின் பேரனான பிரகாஷ் அம்பேத்கர் எம்.பி.

இந்தியக் குடியரசுக் கட்சி சென்னையில் நடத்திய அரசியல் சாசன மறு ஆய்வு கண்டன மாநாட்டில் கலந்து கொள்ளுவதற்காக வந்திருந்த அவர் கல்கிக்கு அளித்த பிரத்யேகப் பேட்டி:

**"அண்ணல் அம்பேத்கர் பற்றி உங்கள் மனத்தில் ஆழமாகப் பதிந்திருக்கும் சம்பவம் ஒன்றைக் கூறுங்களேன்"**

"அம்பேத்கர், அரசியல் சாசன வரைவுப் பணியை முடித்தபின், ஒருநாள் அதில் பென்சிலால், பல இடங்களில் குறியிட்டு வைத்தாராம். அரசியல் சாசன சட்டத்தில் உள்ள அம்சங்களில் எவையெவை, எப்போது மாற்றத்துக்கு உள்ளாகும் என்று குறிக்கப்பட்டவை அவை. அம்பேத்கரின் நூல் நிலையத்தில், நூலகராகப் பணியாற்றியவரான ரெகே என்ற பெண்மணி குறிப்பிட்டச் சம்பவம் இது. 'இன்னமும் அந்தப் பிரதி இருக்கிறது; அவர் குறிப்பிட்ட மாற்றங்களும் நடந்திருக்கின்றன' என்று சில ஆண்டுகளுக்கு முன் ரெகே கூறியபோது, அவரது தீர்க்கதரிசனம் குறித்து நான் வியந்து போனேன்! நான் அவரது பேரன் என்றாலும்கூட, அவரை நான் பார்த்ததே இல்லை என்பதை மாபெரும் துரதிர்ஷ்டமாகக் கருதுகிறேன். அம்பேத்கரின் (இரண்டாவது) மனைவியான, எனது பாட்டி இன்னும் உயிருடன் இருக்கிறார். அவர் அவ்வப்போது அம்பேத்கர் பற்றிக் கூறியதுண்டு.

**"நீங்கள் அரசியலுக்கு வந்தது?"**

"நான் இளம் வயது முதல், இந்திய அரசியலைக் கவனித்து வருகிறேன். என்றாலும், அரசியலில் ஈடுபடும் எண்ணம் இருந்ததில்லை. ஆனால் 1974 வாக்கில் மகாராஷ்டிராவில், மராத்வாடா பல்கலைக் கழகத்துக்கு அம்பேத்கரின் பெயரைச் சூட்டுவது, பெரும் பிரச்னையாக்கப்பட்டது. அம்பேத்கர் இயக்கம் தங்கள் கோரிக்கையை வலியுறுத்திப் போராட்டத்தில் ஈடுபட்டபோது அரசு, அதை அடியோடு ஒடுக்க கடுமையாக நடவடிக்கை எடுத்தது. இதனால், தலித் இயக்கமே சலசலத்துப் போனது. இயக்கத்தைத் தொடர்ந்து நடத்த முடியாதோ என்கிற சூழ்நிலை ஏற்பட்டது. அரசியல் கட்சிகள், இந்தப் பிரச்னையை சுய லாப



# — பிரகாஷ் அம்பேத்கர் பேட்டி

நோக்கத்தோடு அணுகினார்கள். எனவே உயர்நீதிமன்றத்தில் வழக்கறிஞராகப் பணியாற்றிக் கொண்டிருந்த நான் இதற்குப் பிறகும் பொதுவாழ்வில் ஈடுபடாமல் இருக்கக் கூடாது என்று முடிவு செய்து அரசியலில் குதித்தேன்."

**"நாடு முழுக்க தலித் மக்கள் சிறு சிறு அரசியல், சமூக அமைப்புகளாகச் செயல்பட்டு வருகின்றார்கள். இவர்களையெல்**

லாம் ஒருங்கிணைத்து, தேசிய அளவில் ஒரு இயக்கமாக்கினால், நிறைய சாதிக்கலாமில்லையா?''

"இந்தியா முழுவதும் பரவிக்கிடக்கிற தலித் மக்களுக்கு பிரச்னைகள் வெவ்வேறானவை. எனவே, இவர்களை ஒரே இயக்கமாக இணைப்பது இயலாது. ஆனால் பொதுவான பிரச்னைகளில் அனைவரும் ஒருங்கிணைந்து பாடுபட முடியும்.''

"ஐம்பதாண்டு கால சுதந்தரத்தில், இந்தியாவில் தலித் மக்கள் உண்மையிலேயே முன்னேறி இருப்பதாக நீங்கள் நினைக்கிறீர்களா?''

"ஐம்பதாண்டுகளுக்கு முன் இருந்த ஒரு தலித்தின் வாழ்க்கையோடு, இன்றுள்ள ஒரு தலித்தின் வாழ்க்கையை ஒப்பிட்டால், நிச்சயம் முன்னேற்றம் இருக்கிறது. குறிப்பாக பொருளாதார ரீதியில். அது போலவே, தலித் மக்களுக்கு எதிரான கொடுமைகளை எடுத்துக் கொண்டாலும், அவை இன்றும் தொடர்ந்து கொண்டிருக்கின்றன என்றாலும் அவை குறைந்திருக்கின்றன.''

"அரசியல் சாசன மறு ஆய்வுக்கு நீங்கள் கண்டனம் தெரிவித்திருக்கிறீர்கள். ஏற்கனவே சுமார் எண்பது முறை திருத்தப்பட்டு விட்டது நம் அரசியல் சாசனம். காலத்துக்கு ஏற்ப எதுவும் மாறுவதுதான் இயற்கை. அதன்படி பார்த்தால், ஐம்பதாண்டாகி விட்ட சூழ்நிலையில் அரசியல் சாசனத்தை மறு ஆய்வு செய்வதில் என்ன தவறு?

"அரசியல் சாசனத்தின் அடிப்படை அம்சங்களை மாற்றாமல், சமுதாயத்தின் நலனுக்காக ஆங்காங்கே சில மாற்றங்களைச் செய்வதில் தவறில்லை. அதைத்தான் இதுவரை செய்து கொண்டிருந்தார்கள். ஆனால், பா.ஜ.க. செய்யவிருப்பது அது போன்றது இல்லை. அரசியல் சாசனத்தின் அடிப்படை அம்சங்களையே மாற்ற வேண்டும் என்று நினைக்கிறார்கள். இதனால் மக்களில் பலருக்கு, தங்கள் பாதுகாப்பு பற்றிய அச்ச உணர்வு ஏற்பட்டுள்ளது. சுயநல நோக்கோடு செய்ய நினைக்கும் இந்த மறு ஆய்வுக்குத்தான் பல தரப்பிலிருந்தும் எதிர்ப்பு எழுந்துள்ளது. இது இயற்கைதான்!''

"பா.ஜ.க பாராளுமன்றத்தில் கூட்டணி ஆட்சிதான் நடத்துகிறது. அப்படியும்கூட அரசியல் சாசனத்தில் திருத்தம் கொண்டு வரும் அளவுக்கு பலம் கிடையாது. இப்போது செய்யப் போவது வெறும் மறு ஆய்வுதானே! அரசியல் சாசனத் திருத்தம் இல்லையே! அதற்கு ஏன் இத்தனை எதிர்ப்பு?''

"ஐம்பதாண்டுகளில், இந்த அரசியல் சட்டத்தால் எந்தப் பயனும் ஏற்படவில்லை. எனவே, இதை மாற்ற வேண்டும் என்ற எண்ணத்தை மக்கள் மனத்தில் ஏற்படுத்த அவர்கள் முனைந்திருக்கிறார்கள். இன்னொன்று, தங்கள் கூட்டணிக்கு இருக்கும் பிரச்னைகளை மூடி மறைத்து, மக்கள் கவனத்தைத் திசை திருப்பி, அதிகாரத்தைத் தக்க வைத்துக் கொள்ளும் தந்திரமாகவே இதனைச் செய்கிறார்கள். அரசியல் சாசனத்தைத் திருத்த போதிய பலமில்லை என்று தெரிந்தும் அது பற்றிப் பேசுவானேன்? மக்களைத் திசை திருப்பும் வேலைதானே இது?''

# பா.ஜ.க.வின் தந்திரம்!

"நாட்டில் இன்று தலித் மக்களுக்காக உண்மையில் பாடுபடுபவர் என்று எந்த அரசியல் தலைவரையாவது சுட்டிக் காட்ட முடியுமா?''

"அப்படிப் பொதுவாகச் சுட்டிக் காட்ட முடியாது. ஆனால் நாடெங்கும் பல்வேறு மட்டங்களிலும் பல பேர் ஒடுக்கப்பட்ட மக்களின் மேம்பாட்டுக்காக உண்மையாக

உழைத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். அவர்கள் பணி, குடத்துக்குள் வைத்த விளக்கு போல வெளியே தெரியவில்லை அவ்வளவுதான்!"

**"இந்திய அரசியல் சாசனத்தை உருவாக்கிய அம்பேத்கரே, பின்னர் ஒரு சமயம் அரசியல் சட்டத்தை எரிக்க வேண்டும் என்று சொல்லி இருக்கிறாரே! ஏன் இந்த முரண்பாடு?"**

"முரண்பாடு அல்ல அது. அரசியல் சாசன எரிப்பு பற்றி அவர் கூறியதைத் தனியே சுட்டிக்காட்டி இப்படித்தான் பல ரும் கூறி வருகிறார்கள். அவர் எந்தச் சூழ்நிலையில் இப்படிக் குறிப்பிட்டார் தெரியுமா? அரசியல் சாசனம் உருவாக்கியதை கோவிலுக்கு நிகராக ஒப்பிட்டார். அந்தக் கோவிலுக்குள் இறைவனை பிரதிஷ்டை செய்ய நான் விரும்பினேன். ஆனால், சாத்தான் புகுந்து விட்டது. அந்தச் சாத்தனை விரட்டி விட்டு, இறைவனை அங்கே கொண்டு வர வேண்டும் என்பதே நமது லட்சியம். சாத்தானை விரட்ட முடியாத சூழ்நிலை ஏற்பட்டால், கோவிலையே இடிக்கவும் நான் தயங்க மாட்டேன் என்று கூறியபோதுதான், எந்த நோக்கத்துக்காக, அது உருவாக்கப்பட்டதோ, அது நிறைவேறாமல் போகுமானால் அரசியல் சட்டத்தை எரிக்கும் முதல் நபராக நான் இருப்பேன் என்றார். இதை அவர் சொன்னது ஹைதராபாத்தில்."

**"இந்தியாவில் தலித் மக்களின் எதிர்காலம் எப்படி இருக்கும் என நினைக்கிறீர்கள்?"**

"ஒளிமயமாக இருக்கும். மற்றவர்கள் கொடுத்துப் பெறும் நிலை மாறி இவர்கள் கொடுக்கும் நிலை ஏற்படும். தென்னிந்தியாவில், தாழ்த்தப்பட்டவர்களுக்கான சமூக இயக்கங்கள் பல இருக்கின்றன. வடக்கே அப்படி இல்லை. அங்கும் ஒடுக்கப்பட்ட மக்கள் ஒன்று திரண்டு கொண்டிருக்கிறார்கள். அம்பேத்கர் ஜெயந்தி கொண்டாட்டம் என்பது கனவாக இருந்த ஹரியானாவில் இன்று நிலைமை மாறி விட்டது. ராஜஸ்தானில் இந்த மாற்றம் துவங்கிவிட்டது. நாடெங்கும் இது எதிரொலிக்கும்."

**"அப்படியெனில், ஒரு தலித், இந்த நாட்டின் பிரதமராவது சாத்தியம்தானே?"**

"தலித் தனி நபர் பிரதமராவதால், சமுதாயத்தில் மாற்றம் ஏதும் பெரிதாய் நிகழ்ந்து விடப் போவதில்லை. அவர்களும் முன்னேறி, இந்தச் சமுதாயத்தில் முழுமையான அங்கமாக வேண்டும். அதுவே மிக முக்கியம்."

**"அம்பேத்கரின் வாழ்க்கை வரலாறு திரைப்படமாய் எடுக்கப்பட்டுள்ளதே! அதைப் பார்த்தீர்களா? எப்படி இருக்கிறது?"**

"மம்முட்டி மிக அற்புதமாக நடித்திருக்கிறார். பாராட்டுக்குரிய நடிப்பு! மற்றபடி படம் ரிலீஸ் ஆகிறவரை, படம் பற்றிய எனது கருத்துக்களை நான் தெரிவிக்க விரும்பவில்லை."

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**
படம்: **ஸ்ரீஹரி**

## மூன்று வில்லன்கள்...!



• படத்தில்...

முரளி நடித்து 'குறும்புக்காரன்' என்று ஒரு படம் வந்தது ஞாபகமிருக்கிறதா? அதற்குப் பிறகு சினிமாவிலிருந்து முழுவதுமாக டி.வி.பக்கம் சாய்ந்துவிட்ட அமிர்ஜான், 'சின்ன சின்னக் கண்ணிலே' என்று ஒரு திரைப்படத்தை தற்போது இயக்குகிறார். படத்தைத் தயாரிப்பது ராஜ் டி.வி. நிறுவனம்!

புதிதாக வந்து சரியாக ஓடாதப் படங்களை இருபது முப்பது லட்சத்துக்கு வாங்கி சன் டி.வி. ஒளிபரப்ப, தனியாக உட்கார்ந்து யோசித்தது ராஜ் டி.வி. நாமே லோ–பட்ஜெட்டில் சினிமா தயாரித்து வெளியிட்டு, தியேட்டர்களில் நன்றாக ஓடினால் சில வருடங்கள் கழித்தும், ஓடவில்லை என்றால் டி.வி.யிலும் போட்டாலென்ன? என்ற யோசனையை முன் வைக்க, ரெடியாகிவிட்டது படம். இந்தப் படத்தில் ஹீரோவே இல்லை என்பதுதான் புதுமையாம். மூன்று வில்லன் கேரக்டர்களாம்– நாசர், பிரகாஷ்ராஜ், தலைவாசல் விஜய் மூவரும் வில்லன் பாத்திரங்களை ஏற்றிருக்கிறார்கள்.

– கடனா

# மெகா... மெகா... தொடர்!

"இந்த வீட்டுக்கு எங்க யூனிட்ல ஒரு பெயர் வெச்சிருக்கோம். 'மொஸ்கிடோ ஹவுஸ்'! ஆறு மணிக்கு இங்கே பார்க்கணுமே, கொசுத் தொல்லை தாங்க முடியாது!"- எத்தனை மனிதர்கள் மெகா தொடரை இயக்கும் டைரக்டர் நட்ராஜ் இப்படிச் சொன்னதும், மொத்த யூனிட்டும் சிரித்தது. அவர் சொன்ன இடம் வளசரவாக்கம் சிம்மம் ஹவுஸ்.

எத்தனை மனிதர்கள்! தூர்தர்ஷனில் ஒளிபரப்பாகிக் கொண்டிருக்கும் தினசரி தொடர். சுமார் முன்னூற்று ஐம்பது எபிசோட்களில் முதல்பாகம் முடிந்தது. அதன்பின் ஆரம்பித்த இரண்டாம் பாகமும், அதே பெயரில், ஒளிபரப்பாகிக் கொண்டிருக்கிறது. இது முடிய முன்னூறு எபிசோட் ஆகும். லட்சியப்பிடிப்பு மிக்க ஒரு பத்திரிகை அதிபரின் குடும்பக் கதை இது.

வெள்ளை பாண்ட், பிரவுன் சட்டையில் பரத்கல்யாண். அவரது சட்டைக்கு மேட்ச்சான கலரில் புடைவையிலிருந்தார் கவிதா ராஜன். கண்ணாடி முன் நின்று கொண்டு பொட்டை சரிபார்த்து இடது பக்கம், வலது பக்கம் திரும்பி புடைவையைச் சரிசெய்து கொண்டிருக்கிறபோது, பரத்கல்யாண் வீட்டுக்குள் நுழைந்து எதையோ தேடிக் கொண்டிருக்கிறார்.

"டிபன் செய்யட்டுமா?" என்று கேட்கிறார் மனைவி.

"ம். தினமும் என்னைக் கேட்டுக் கொண்டா டிபன் செய்கிறாய்?"

"சரி! ஏதாவது செய்து வைக்கிறேன். ஈவினிங் சாப்பிட வந்திடுவீங்க இல்லையா?"

"தெரியாது!"

"சாயங்காலம் வரும் போது பூ வாங்கிட்டு வாரீங்களா?"

"முடியாது. வேணும்னா பூக்காரி வரும்போது நீயே வாங்கிக்க."

"கவனிச்சீங்களா? என் ஹேர் ஸ்டைல் மாறி இருக்கு. புடைவை மாறி இருக்கு..."

"எது மாறி என்ன பிரயோஜனம்? உன் ஆட்டிடியூட் மாறலையே!"

"இப்படி டயலாக் வளர்ந்து கொண்டே



• ...மனிதர்கள்!



• எத்தனை...



''கா(ண)மடி, க்ரைம் கலந்த சப்ஜெக்ட் ஒண்ணை சீரியலா எடுக்கப் போறீங்களாமே! என்ன பேர் வைக்கிறதா உத்தேசம்?''

''சிரிக்கா விட்டால் சுட்டுவிடுவேன்!''

– ஜூனியர் சக்தி

---

போனாலும், பிட், பிட்டாத்தான் படம் பிடித்தார்கள்.

**அ**மராவதி படத்தில் ஹீரோவாய் நடிக்கும்படி டைரக்டர் செல்வா கேட்ட போது மறுத்துவிட்ட பரத்கல்யாண், அப்புறம் பாட்டாளி, என்னம்மா கண்ணு என்று ஒருசில படங்களில் தலைகாட்டி விட்டு, இப்போது டி.வி. தொடர்களில் பிஸி. இவருக்கு ஜோடியாக நடிக்கிற கவிதா ராஜன், ஒரு பேஜர் கம்பெனியில் சூப்பர்வைசர். வேலை பார்த்துக்கொண்டே நடிப்பதால், ஒரு சமயத்தில் ஒரு தொடரில் மட்டுமே நடிக்க ஒப்புக் கொள்கிறாராம்!

அடுத்த காட்சியில் நடிப்பதற்காக, வெயிட் பண்ணும் நேரத்தில் யாரிடமோ செல்லில் பேசிய யுவதி ஷில்பா, மாடலிங் அழகி. பழைய ஜெ.ஜெ. டி.வியில் தொகுப்பாளியாக அறிமுகமானவர். ஹிட்லிஸ்ட், பிட் லிஸ்ட் என்று ஒரு ரவுண்டு வந்தார். இப்போது டி.வி. தொடர்களில் நடித்துக் கொண்டிருந்தாலும், இவரது லட்சியம் சினிமாதான். டி.வி. தொடர் அனுபவம், சினிமாவில் நன்றாக நடித்துப் பெயர் வாங்க உதவும் என்று நம்புகிறார். ''டான்ஸ் தானே இன்று ஹீரோயின்களுக்கு முக்கியம். எனவே டான்ஸ் கற்றுக் கொள்கிறேன். நிறைய மாடலிங் வாய்ப்புகள் வருகின்றன. நல்ல காலேஜ் சப்ஜெக்ட் கிடைத்தால், சினிமாவில் நல்ல பிரேக் கிடைக்கும்'' என்று நம்பிக்கையோடு பேசுகிறார்.

''தூர்தர்ஷனில், அதுவும் குடும்பத் தலைவிகள் கூட ஓய்வாகத் தூங்கும் நேரமாய்ப் பார்த்து உங்கள் தொடர் ஒளிபரப்பாகிறதே! உங்களுக்கு ரொம்பத்தான் துணிச்சல்'' என்று தயாரிப்பாளர் மாணிக்கம் நாராயணனிடம் சொன்னால், அழுத்தமான குரலில் பேசினார். ''கதை– இதுதான் எங்களுடைய பெரிய பலம். இன்று மெகா சீரியல் என்றாலே கதையை ஜவ்வு மாதிரி இழுக்கிறார்கள். அப்படிச் செய்வதில்லை நாங்கள். அப்புறம், தினமும் இது வரை நடந்தது என்று சில நிமிடங்களை ஓட்டுகிறார்கள். நாங்கள் அப்படிச் செய்வதில்லை. நூற்று ஐம்பது எபிசோட்களுக்குப் பின், ஒரு தடவையும் முன்னூறாவது எபிசோடில் ஒரு தடவையும்தான் இதுவரை நடந்த கதையைச் சுருக்கமாய்க் காட்டினோம். லாஜிக் உதைக்கக் கூடாது என்பதில் எச்சரிக்கையுடன் இருக்கிறோம்.'' என்கிறார். குடும்ப சென்டிமென்ட் என்ற பெயரில் கேரக்டர்கள் சோகம் பிழியப் பிழிய அழுவது டி.வி. தொடர்களில் சகஜம். ஆனால், கேரக்டர்கள் அழக் கூடாது. பார்க்கிறவர்கள் மனம் மட்டும் கனத்துப் போக வேண்டும். அதுதான் எங்கள் தொடரின் வெற்றி ரகசியம்'' என்கிறார் இத்தொடரைத் தயாரிக்கும் செவன்த் சேனலின் மாலா மணியன்.

**பி**ற்பகல் இரண்டே முக்கால் மணி முதல், மூணேகால் வரை தூர்தர்ஷனில், எத்தனை மனிதர்கள் தொடர் ஒளிபரப்பாவதால், தினமும் படப்பிடிப்பின்போது, இரண்டு மணிக்கு லஞ்ச் இடைவேளை. யூனிட்டில் எல்லோரும் சாப்பிட்டுவிட்டு, டி.வியில் தொடரைப் பார்த்துவிட்டு, மறுபடி ஷூட்டிங்கைத் தொடர்கிறார்கள்.

ரஜினியின் நண்பரான டைரக்டர் நட்ராஜிடம். சினிமாவுக்கும், டி.வி. சீரியலுக்கும் குறைந்த பட்சம் ஆறு வித்தியாசங்கள் சொல்லுங்களேன் என்றபோது, தாடியைத் தடவியபடி சிறிது நேரம் யோசித்தவர், சொன்ன வித்தியாசப் பட்டியல்:

1. சினிமா ஒரு விஷுவல் மீடியம். டி.வி. சீரியல் என்பது ஒரு டயலாக் மீடியம்.

2. சினிமாவை விட டெலிவிஷன் தொடருக்கு வீச்சு அதிகம்.

3. முதலீட்டைப் பொறுத்தவரை சினிமாவில் ரிஸ்க் அதிகம். டி.வியின் கதை கையில காசு; வாயில தோசை.

4. சினிமாவை எடுத்து ரிலீஸ் பண்ணிவிட்டால் ஜனங்களின் வரவேற்புக்கேற்ப மாற்றங்கள் செய்ய முடியாது. இதில் சாத்தியம்.

5. டி.வி. சீரியலில் தயாரிப்பாளர், டைரக்டர், ஹீரோ டாமினேஷன் கிடையாது.

6. சினிமாவுக்கு ஆயுசு அதிகம். ஆனால் டி.வி. தொடர்களுக்கு, மறுஒளிபரப்பு வாய்ப்புகள் மிக அரிதுதான்!

ஸ்கிரிப்ட்: **கௌதம்ராம்**



# ஈட்! ஹேமங்! ஸ்லீப் கிரிக்கெட்

"அவரின் ஒருசில ஆட்டங்களைத்தான் நான் பார்த்தேன்; அவரது ஸ்டைல் நன்றாக இருக்கிறது. மிகவும் அருமை. என்னைக் கவர்ந்த பேட்டிங் திறமை அவரிடம் இருக்கிறது"

– இப்படிஓஹோவென்று புகழ்ந்திருப்பது வேறு யாரு மல்ல; சச்சின் டெண்டுல்கர்தான். தமிழக ரஞ்சி கிரிக்கெட் வீரர் ஹேமங் பதானியைத்தான் இப்படிப் புகழ்ந்து தள்ளி யிருக்கிறார்.

சென்னை புரசைவாக்கத்தில் உள்ள அவரது இல்லத்தில் பதானியைச் சந்தித்தோம்.

"சந்தோஷமா இருக்கு. அதே நேரத்துல ஆச்சர்யமாகவும் இருக்கு. சச்சின் இப்படிச் சொல்வார்னு நான் எதிர்பார்க் கலை" என்று வானம் பார்த்துச் சிரித்துக் கொண்டே பேகம் ஹேமங் பதானி, 'அலைபாயுதே' மாதவன் மாதிரி களையாய் இருக்கிறார்.

"மும்பையில ஆடி முடிச்ச அன்னைக்கு ஈவினிங் சச்சி னைப் பார்த்தேன். "நீங்க நல்லா ஆடறீங்க; உங்க ஸ்டைலை அப்படியே ஃபாலோ பண்ணுங்க; உங்ககிட்ட பேட்டிங் திறமை இருக்கு; இதை அப்படியே டெவலப் பண்ணுனீங் கன்னா எதிர்காலத்துல நல்லா வருவீங்க'ன்னு சொன்னார். என்னாலயே நம்ப முடியலை; ரொம்ப மகிழ்ச்சியா இருந்தது. அவர் சொன்னதுக்குப் பிறகு இப்ப நல்லா பண்ணணும்ங்கற பொறுப்பு வந்திருக்கு" என்கிறார் ஹேமங்.

இவரின் அப்பா கிரிக்கெட் ப்ளேயர். லீக் மேட்சுகளில் ஆடிக் கொண்டிருந்தாராம். அப்படியே ஹேமங்கையும், அப்பாவின் கிரிக்கெட் ஜுரம் பற்றிக் கொள்ள, சிறு வயதிலேயே பேட்டைத் தூக்கிக்கொண்டு இறங்கி விட்டார் களத்தில்...! மயி லாப்பூர் விவேகானந்தா கல்லூரியில் படித்தபோது கல்லூரி அணிக்கு ஹேமங்தான் கேப்டன். பின்னர் படிப்படியாகத் திறமை காட்டி ரஞ்சி அணியில் இடம் பிடித்திருக்கிறார். இப்போது ஈட் கிரிக்கெட், ஸ்லீப் கிரிக் கெட்டாகி இருக்கிறது இவருக்கு!

"உங்கள் அணியின் (ரஞ்சி) கேப்டன் ராபின் சிங் எப்படி? என்றால் டப்பென்று பதில் வருகிறது. "அவர் ரொம்ப ஜாலி டைப்!" என்று. "அதே நேரத்துல நிறைய உதவும் மனப்பான்மை உண்டு. சீனியர், ஜூனியர் மனோ பாவம் அவர்ட்ட கிடையாது. நல்லா என்கரேஜ் பண்ணு வாரு. ஆட்ட நுணுக்கங்களைச் சொல்லித் தருவாரு. ஹார்டு வொர்க்கர்" என்று சர்ட்டிபிகேட் தரும் ஹேமங் கின் பூர்வீகம் குஜராத். பிறந்து வளர்ந்ததெல்லாம் சென் னையில்தானாம்.

"நான் கிரிக்கெட் ப்ளேயரா ஆகறதுக்கு அம்மா, நிறைய ஹெல்ப் பண்ணியிருக்காங்க" என்று அம்மா புராணம் பாட ஆரம்பிக்கிறார் ஹேமங்!

"வசிஷ்டர் வாயாலேயே பிரம்மரிஷி பட்டம் வாங்கி விட்டீர்கள். ரமேஷ், ஸ்ரீராம் மாதிரி இந்திய அணியில் இனி உங்களைச் சந்திக்கலாமா? என்றால் உள்ளம் பூரித்து புன்ன கைக்கிறார்.

"ஒவ்வொரு ப்ளேயருக்கும் இந்திய அணியில் ஆடணுங் கற ஆசை இருக்கும். அந்த ஆசை எனக்கு மட்டும் இல் லேன்னா எப்படி? அந்த வாய்ப்பைத்தான் எதிர்பார்க்கிறேன்" என்று சொல்லிவிட்டு குழந்தை மாதிரி சிரிக்கும் ஹேமங்கிற்கு வாழ்த்துச் சொல்லி விட்டு வந்தோம்.

— ஏக்நாத்.செ.

படங்கள் : ஜரிஸ்

**வெ**ங்கிப்புரப்பு வெங்கட் சாயி லக்ஷ்மண்!- அதாவது வி.வி.எஸ். லக்ஷ்மண்.

இந்திய அணிக்காக ஆடிய டெஸ்ட் போட்டிகளிலும் ஒரு தினப் போட்டிகளிலும் ரசிகர்களை முகம் சுளிக்க வைத்தாலும் ரஞ்சிப் போட்டிகளில் அவ்வப்போது இவர் கலக்குவது உண்டு.

கர்நாடகத்துக்கு எதிராக இவ்வாண்டு நடந்த ரஞ்சிக் கோப்பை போட்டியில் லக்ஷ்மண் அடித்த 353 ரன்கள் மூலம் 66வருட ரஞ்சிக்கோப்பை வரலாற்றில் புதிய சாதனை செய்திருக்கிறார்.

இதன்மூலம் ரஞ்சி வரலாற்றில் முந்நூறுக்கும் அதிகமான ரன்களை இரண்டு முறை எடுத்த முதல் வீரர் என்ற பெருமையைப் பெற்றிருக்கிறார்.

ஐம்பத்தியொரு வருடங்களுக்கு முன்பு 1948-49ல் மகாராஷ்டிராவில் நடந்த ரஞ்சிக் கோப்பையில் பி.பி. நிம்பல்கர் என்ற வீரர் அடித்த 443 ரன்தான் ரஞ்சி வரலாற்றில் அதிகபட்ச ரன். இச்சாதனை இன்றுவரை முறியடிக்



# ரஞ்சி சாதனை!

கப்படவில்லை. 1990-91ம் ஆண்டில் சஞ்சய் மஞ்ச்ரேக்கர் ஹைதராபாத்துக்கு எதிராக அடித்த 377 ரன்கள்தான் இரண்டாவது அதிகபட்ச ஸ்கோர். இந்த வரிசையில் லட்சுமண் இருப்பது ஐந்தாவது இடத்தில்!

லக்ஷ்மணை முதுகில் தட்டிக் கொடுத்து வாழ்த்து சொல்லியிருக்கிறார் அசாருதீன்.

இதெல்லாம் சரிதான்- இந்திய டீமுக்கு வரும்போது மட்டும் எப்படிங்கண்ணா சொதப்ப முடியுது?

— அப்பு


• டாக்டர் காடியா, பாபாவுடன்

# டாக்டருக்கு டாக்டர்!

மாண்டவர் ஒருவர் மீண்டே வந்திருக்கிறார்!

இந்த மாதிரி அனுபவங்களைப் பற்றி நாம் எப்போதோ கேள்விப்படுவது உண்டு தான். முக்கால்வாசி 'கப்ஸா'வாக இருக்கும்; கால்வாசி உண்மையாக இருந்தாலும் எல்லாம் கேள்வி ஞானமாக இருக்குமேயன்றி அப்படிப்பட்ட மனிதர்களைக் கண்ணாரக் கண்டிருக்க மாட்டோம்!

ஆனால் அப்படியொருவரைக் காண முடிந்தது!

சமீபத்தில் தாணாவுக்கு வந்த டாக்டர் காடியாவும் அவர் மனைவி நந்தாவும் தற்சமயம் லண்டன்வாசிகள். ஒரு காலத்தில் ஜாம் நகரிலுள்ள அரசு மருத்துவமனையில் இவர் பணிபுரிந்திருக்கிறார்.

ஆனால் இவர் இறந்தது கிழக்காப்பிரிக்காவிலுள்ள தான்ஜேனியாவில்! 'மேலே' போய், கீழே வந்த கதையை, எல்லோரும் கேட்டுக் கொண்டதன் பயனாக, சுவாரஸ்யமாக அசைபோட்டார்.

ஒரு கார் விபத்தில் அடிபட்டு சின்னாபின்னமானவர், இறக்கும் தருவாயில், 'பாபா' என்ற அலறலுடன் சாய்ந்து விட்டார். அடுத்த நிமிடம் இரத்த வெள்ளத்தில்! மூச்சு நின்று விட்டது. உடலை வெளியே எடுக்கக்கூட முடியாத அளவுக்கு சுற்றி ஒரே களேபரம்.

டாக்டரின் ஆன்மா புட்டபர்த்திக்குப் பயணித்தது போலிருந்ததாம்; அப்புறம் ஆழ்ந்த உறக்கம் போலாகிவிட்டதாம். ரொம்ப நேரத்துக்குப் பிறகு திடீரென்று சாயிபாபா, எதிரே நின்று கொண்டு, "உம்... உட்காராதே... எழுந்திரு... சீக்கிரம்... இல்லா விட்டால் எலும்புகள் நொறுங்கி விடும்" என்று ஆணையிடுவது போலிருந்ததாம்.

அப்போது கூட்டத்திலிருந்து, ஸ்வாஹிலி மொழி பேசிக் கொண்டு இருவர் வெளிப்பட்டனர்! கையில் டாக்டர்கள் வைத்துக் கொண்டிருக்கும் பையுடன் அவர்கள் காரை நோக்கி நடந்து வந்தனராம். வழி விடுங்கள் என்று கத்திக் கொண்டே, பரபரவென்று சுற்றியிருந்த அல்லோலங்களை எல்லாம் அப்புறப்படுத்தி, டாக்டரை மிக நாசூக்காக வெளியே எடுத்தனராம். டாக்டர் மனைவியின் காதில் ஒருவர், "கவலைப் படாதீர்கள். உங்கள் கணவர் பிழைத்து விடுவார்" எனக் கிசுகிசுத்தாராம். சொன்னபடியே பிழைத்து விட்டார்!

பல வருடங்களுக்குப் பின், இந்தியா வந்த போது, புட்டபர்த்தி சென்றார், காடியா. சுவாமி இவரை ஒயிட் ஃபீல்டில் சந்தித்து, 'கட்டைகளைத் தூக்கி எறி; கீழே உட்கார்' எனக் கட்டளையிட்டாராம்.

விபத்துக்குப்பின் கீழே உட்காரவே தடுமாறிக் கொண்டிருந்தாராதலால், டாக்டர் தயங்கியிருக்கிறார். பக்கத்திலிருந்த மனைவி வேறு, 'அவர் ஏதோ சொல்கிறார் என்று நீங்கள் எதையாவது செய்து வைக்காதீர்கள்; ஒன்றுக்கொன்று ஏதாவது ஆகிவிட்டால்...'' என குஜராத்தியில் கவலையுடன் அறிவுறுத்தியிருக்கிறார்.

சுவாமி அவரைப் பார்த்து சிரித்தவாறே, ''அன்று டான்ஜேனியாவில் ஸ்வாஹிலி மொழி பேசிக் கொண்டு இரண்டு டாக்டர்கள் வந்தார்களே... நினைவிருக்கிறதா?'' என்றிருக்கிறார். அவ்வளவுதான்! இருவரும் சாஷ்டாங்கமாக பாபாவின் காலடியில் விழுந்தே விட்டார்கள்!

"நீ நிறைவேற்ற வேண்டியவை நிறைய இருக்கின்றன. இனி இறைபணியில் உன் சேவையைத் துவங்கு'' எனக் கூறியிருக்கிறார் பாபா. பிறகு மறு பேச்சு ஏது? இறைபணியில் இறங்கியிருக்கிறார் டாக்டர் காடியா.

— ஜெயஸ்ரீராஜ்

# அருண்சரண்யா

சுற்றுப்புறம் பற்றிக் கவலைப்படாமல் பறவையின் கழுத்தை மட்டுமே இலக்காகக் கொண்டு அர்ஜுனன் எறிந்த அம்பு உயரே சென்று பறவையை வீழ்த்தியது போல் ராஜ்குமாரும் மற்ற விவரங்களைப் பேசாமல் நேரடியாக விஷயத்துக்கு வந்தார்.

"சத்யாவையும், அவளோடு எங்கள் பத்திரிகையில் வேலை செய்யும் ஷபனாவையும் முசோரிக்குக் கட்டாயப்படுத்தி ஓய்வு எடுக்க அனுப்பியதாக முன்பு சொல்லியிருக்கேன் இல்லையா? அங்கேதான் சத்யா, உங்கப்பாவை – அதுதான் சந்திர மோகனை சந்தித்தாள்.

காமெடி ஆஃப் எர்ரர்ஸ் என்று சொல்வாங்களே அதுபோல் அங்கே நிறைய நடந்தது. அங்கே நடந்த மலர்க் கண்காட்சிக்கு விஜயம் செய்த சத்யா, அங்கிருந்த தாவரங்களையும், மலர்களையும் பற்றி சந்துரு விரிவாக எடுத்துச் சொன்னதைக் கேட்டு அசந்துட்டா. பூக்களை நேசிக்கத் தெரிந்த மென்மையான மனசுன்னு அதை தப்புக் கணக்குப் போட்டுட்டா. அங்கிருந்த ஐந்து நாட்களில் இருவருமே அடிக்கடி சந்திக்க நேர, ஒருவரிடம் மற்றவர் மனதைப் பறிகொடுத்தாங்க. எனக்குத் தெரிந்து உங்கம்மா ஒரு தப்பான முடிவை எடுத்தது அப்போது மட்டும்தான்.

எல்லாத்துக்கும் க்ளைமாக்ஸாக தான் பெரிதும் வணங்கும் குருஜி ஒருவரின் ஆசிரமத்திற்கு உங்க அம்மாவையும், ஷபனாவையும் அழைச்சிக்கிட்டுப் போனார் சந்துரு.

ராஜ்குமார் விளக்கிக் கொண்டே போக, சுவாதியின் கண்ணெதிரில் அந்தக் காட்சி தெரிந்தது.

"அற்புதமான மலைப்பாங்கான இடம். இங்கே மடத்தைக் கட்டியிருப்பது ரொம்ப புத்திசாலித்தனம். அந்தக் காலத்திலே எல்லா விஷயங்களுமே இயற்கையோடு இணைந்துதான் இருந்தன இல்லையா?" என்று சத்யா கேட்க, சந்துரு மிகப் பெருமையோடு தலையசைத்தான்.

"என் தாத்தாவுக்குத் தாத்தா காலத்திலிருந்தே இந்த மடத்தின் குருஜிக்களை தெய்வமாக நினைத்து வணங்குவது வழக்கம். அதுவும் இப்போது மடத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றிருக்கிறாரே, அவர் நடமாடும் தெய்வமேதான். நீங்கதான் இப்போ பார்க்கப் போறீங்களே."

சத்யா ஷபனா காதில் எதையோ சொல்ல அவள் முகம் சிவந்தது.

"உங்கள் சிநேகிதி என்ன சொன்னார்?"

"அதெல்லாம் பெண்களுக்குள்ளே" என்று சிரித்து சமாளித்தாள் சத்யா.

"ஏண்டி சத்யா, இரண்டு பேரும் காதலர்கள் மாதிரியா நடந்துக்கறீங்க? இப்படி மடம், குருஜின்னு கிழங்களாட்டம் பேசிக்கிறீங்களே அல்லது ஒருவேளை நான் உடன் இருப்பதாலே இப்படியெல்லாம் நாடகம் ஆடறீங்களா? நான் வேணா நாம தங்கியிருக்கிற கெஸ்ட் ஹவுசுக்குத் திரும்பிப் போயிடட்டுமா?" என்று அவள் கூறியதையா சந்துருவிடம் சொல்ல முடியும்?

தொலைவிலிருந்து பார்த்தபோது தெரிந்த எளிமைக்கும், உள்ளே நுழைந்தவுடன் தென்பட்ட பிரம்மாண்டத்திற்கும் எத்தனை வித்தியாசம்? மடத்தின் தோற்றத்தைப் பார்த்து சத்தியா அசந்து போய் விட்டாள் (மதத்தைக் காரணம் காட்டி ஷபனா வாசலிலேயே தங்கி விட்டாள்).

படேபகவான் குருஜி (பக்தர்கள் அவருக்குச் சூட்டிய திருநாமம் அது) சரளமாக ஆங்கிலம் பேசினார். எதிரே வணங்கி நிற்கும் பக்தர்களின் தாய்மொழியை ஊகித்துக் கொண்டு அந்த மொழியிலும் ஓரிரு வாக்கியங்கள் பேசி அவர்களை





ஆனந்தப்படுத்தினார். வெளிநாட்டுக்காரர் ஒருவரிடம் ஜெர்மன் மொழியில் கூட அவர் பேசியது கண்டு சத்யா பிரமித்துப் போனாள்.

"பார்த்தியா எங்க குருஜியின் மகிமையை?" என்பது போல் சந்துரு ஒருவித கர்வத்துடன் அவளைப் பார்த்து சைகை காண்பித்தான்.

அனைத்திற்கும் க்ளைமாக்ஸாக சத்யா அவர் முன் நமஸ்காரம் செய்ய முயன்றபோது, "நீங்க ரெண்டு பேரும் சேர்ந்தே நமஸ்கரிக்கலாமே. எப்படியும் கொஞ்ச நாளில் இப்படி ஜோடியாக நமஸ்கரிக்கப் போகிறவர்கள்தானே" என்று கூறிவிட, சத்யா திகைத்துப் போனாள். சந்துருவுக்கு ஆனந்தத்தில் கண்களில் நீர் நிறைந்து விட்டது. இருவருமாக நமஸ்கரித்தார்கள்.

பிறகு அவர் சத்யாவைப் பார்த்து, "மகளே, பல மொழிகளில் நான் பேசியதை நீ கேட்டிருப்பாய். எல்லாவற்றிலுமே சிறந்த மொழி எது தெரியுமா? மௌனம்தான். பகவத்கீதையில் கிருஷ்ண பரமாத்மா கூட, 'மொழிகளில் நான் மௌனமாக இருப்பேன்'னு கூறியிருக்கிறார். மௌனத் திரைப் படங்கள் வழக்கொழிந்து போய் டாக்கிக்கள் -



அதாவது வசனம் கொண்ட படங்கள் - அறிமுகமானபோது சார்லி சாப்ளின் என்ன சொன்னார் தெரியுமா? 'ஒரு உலக மொழி திரைப் படத்தைப் பொறுத்தவரை முடிவுக்கு வந்து விட்டதே என்று வருத்தமாக இருக்கிறது' என்றாராம்."

இப்படிப் பகவத்கீதையிலிருந்து சார்லி சாப்ளினுக்குச் சென்று, பிறகு சரித்திரம் (ஊமைத்துரை), புவியியல் (பூமி மௌனமாக இருக்கும் வரைதான் சாந்தம். அது நடுங்கினால் பூகம்பம், கோபப் பட்டால் எரிமலை), இப்படிப் பல் வேறு சப்ஜெக்ட்களில் அவர் மௌனம் குறித்து ஒரு நீண்ட உரையை ஆற்றியபோது சத்யா மட்டுமல்ல, அங்கு வந்திருந்த பல வெளிநாட்டுக்காரர்களும் கூட மெய்மறந்து போனார்கள். இறுதி

15

யாக, "மௌனத்தின் அருமையை இப்படிப் பேச்சால்தான் உணர்ந்து கொள்ள வேண்டும் என்று நினைப்பதே ஒரு துர்ப் பாக்கியம். சில நிமிடங்களாவது இப்போது நாம் அமைதியாக மௌனம் காப்போம். பிரார்த்தனை செய்வோம். மௌனத்தின் வல்லமையை உணர்வோம்" என்று அவர் கூற, அடுத்த நொடி சுமார் நூறு பேர் அமர்ந் திருந்த அந்தத் தியான மண்டபம், ஏதோ ஆளரவே இல்லாத சஹாரா பாலைவனம் போல ஒரு துளி சப்தமின்றி மௌனம் காத்தது. மூச்சுவிடும் சப்தம் கூடக் கேட்க வில்லை. அந்தக் கூட்டத்தில் சில குழந் தைகளும் சலனமின்றி இருந்ததைக் கண்ட போது சத்யாவின் பிரமிப்பு எல்லை தாண் டியது. அப்போதே மனதுக்குள் ஒரு பிள்ளை யார் சுழி போட்டுக் கொண்டாள். 'மலையில் ஒரு மகான்' என்ற தலைப்பில் இவரைப் பற்றி ஒரு நீண்ட கட்டுரை எழுதி, 'தின நண்பன்' இதழில் பிரசுரிக்க வேண்டு மென்று.

ஆசிரமத்தை விட்டு வெளியேறும்போது இந்த யோசனையை அவள் கூற, சந்துரு புளகாங்கிதமடைந்தான். "என்ன ஓர் அற்புத மான தீர்மானம். உன்னை மணந்துக்கப் போற நான் ரொம்ப அதிர்ஷ்டசாலி சத்யா. குருஜியின் ஆசியும் நமக்குக் கிடைத்து விட்டது. கொஞ்சம் இரு உன் திட்டத்தைப் பற்றி அவரிடம் சொல்லி சம்மதம் வாங்கி வரேன்" என்றபடி உள்ளே ஓடினான்.

அடுத்த சில நிமிடங்களில் சத்யா உள்ளே அழைக்கப்பட்டாள். குருஜியின் உபதேசங் கள் அடங்கிய மூன்று நூல்களை அவரது சீடர்கள் அவளிடம் நீட்டினார்கள். ஆசிரமம், குருஜி ஆகியோரின் புகைப்பட செட் ஒன்று அவளிடம் கொடுக்கப்பட்டது. சுவாமிஜியின் வாழ்க்கை வரலாறு மற்றும் அவர் நடத்திய அதிசயங்கள் பற்றி சீடர்கள் விவரித்தனர்.

"குருஜி முதலிலே இதற்கெல்லாம் சம் மதிக்கல்லே. ஆனால் 'இந்த ஆசிரமம் மற்றும் இந்துமதத்தின் பெருமை பர வணும்'னு கெஞ்சியதும் ஒத்துக்கிட்டார்" என்றான் சந்துரு ஒரு குழந்தையின் குதூ கலத்துடன்.

அங்கிருந்த 'விசிட்டர்ஸ் புக்' அவளிடம் நீட்டப்பட்டது. "இனிய அனுபவம்" என்று சுருக்கமாக எழுதித் தன் கையெழுத்தையும், முகவரியையும் அதில் பதித்து விட்டு முன் பக்கங்களைத் திருப்பினாள். அதில் அந்த ஆசிரமத்துக்கு வந்து சென்ற சில பக்தர் களின் அனுபவங்களும், குருஜியின் ஆசி யால் அவர்களுக்கு ஏற்பட்ட அற்புத அனு பவங்களும் மிகச் சுவையாக வர்ணிக் கப்பட்டிருந்தன. 'பத்திரிகை வாசகர்களை இவை நிச்சயம் கவரும்' என்று கணக்கிட்ட படி அவர்களில் மூவரின் பெயர்களையும், முகவரிகளையும் தன் டைரியில் குறித்துக் கொண்டாள்.



"அவருக்கு பட்ட காலிலேயே படுதா... எப்படி?"

"நிதி நிறுவனத்துல கட்டுன டெபாசிட்டும் கிடைக்கலே... இடைத் தேர்தல்ல கட்டுன டெபாசிட்டும் கிடைக் கலே..."

– தஞ்சை தாமு

டில்லிக்குச் செல்லும் பஸ் காத்திருந் தது. அங்கு சென்றுதான் சென்னைக்குப் போக வேண்டும். ஷபனா ஏற்கெனவே பஸ்ஸில் ஏறிவிட்டிருந்தாள்.

இந்தக் குறுகிய காலத்தில் தான் காதலில் சிக்கிக் கொண்டது சத்யாவுக்கே ஆச்சரிய மாக இருந்தது. "ஏதோ கனவிலே நடக்கிற மாதிரி இருக்குங்க" என்றாள் சற்றே வெட்கத்துடன்.

"ஆமாம் சத்யா. ஆசிரம அனுபவம் என்பது எல்லோருக்குமே அப்படித்தான்" என்றான் சந்துரு. சத்யாவைச் சற்றே ஏமாற் றம் கவ்வியது. "நான் குறிப்பிட்டது நமக்கு நடுவே மலர்ந்திருக்கும் அன்பைப் பற்றி" என்றாள்.

"எனக்கும் ஆச்சரியமாகத்தான் இருக் கிறது, நான் உன்னைக் காதலிப்பதும், அதற்கு குருஜி ஆசி வழங்கியதும்."

"இவன் குருஜியின் பேச்சை விடவே மாட்டானோ?" என்ற சலிப்பு கொஞ்சம் தோன்றினாலும், "நம் பண்பாட்டிலும்,



**ஹே, சீதேய்!**

**பாக்யம் ராமசாமியின் அப்புசாமி, சீதா பாட்டிக் கதைகளில் சில ராஜ் டி.வி.யில் தொடராக வரப் போகின்றன. அப்புசாமி யாக வெண்ணிற ஆடை மூர்த்தியும், சீதா பாட்டியாக சச்சுவும் நடிக்கிறார்கள். தொடருக்குத் தலைப்பென்ன தெரியுமா? 'ஹே, சீதேய்...!' – அப்புசாமி, பாட்டியை இப்படி அழைப்பதால் அதையே தலைப் பாக வைத்து விட்டோம் என்கிறார்கள்.**

**– ஏக்**

கலாச்சாரத்திலும்தான் இவருக்கு எத்தனை ஈடுபாடு" என்ற பாஸிடிவான பாராட்டும் அவன் மனத்தில் எழுந்தது.

"அடுத்த மாதமே நம்ம கல்யாணத்தை வச்சுக்கலாமா சத்யா... உறவுன்னு பெரிசா சொல்லிக்க எனக்கு யாருமில்லை. ஒரு பஸ் விபத்திலே என் பெற்றோர், தம்பி, சித்தப்பா ஒரே சமயத்திலே இறந்துட்டாங்க."

"எனக்கும் சொல்லிக் கொள்ளும்படி யான உறவு எங்க அம்மா மட்டும்தான்."

"அப்போ கல்யாணத்துக்கு அப்புறம் அவங்களையும் அழைச்சிக்கிட்டு இங்கே வந்துடுவே இல்லையா?"

"பின்னே?" என்றபோதுதான் சத்யாவின் மனத்தில் அந்த வலி உண்டானது. அப்படி யானால், 'தின நண்பனோ'டு தனக்குள் தொடர்பும் இனி விடுபட வேண்டியது தானா?'

"அதனாலென்ன? இங்கேயே ஆக்கபூர்வ மாகத் தன் திறமையைக் காட்டிக் கொள் ளும்படி எதிலாவது ஈடுபடுத்திக் கொள்ள லாமே" என்று சமாதானப்படுத்திக் கொண்டாள்.

பஸ்ஸில் டிரைவர் ஏறியதற்கு அறிகுறி யாக ஹாரன் ஒலி கேட்க, சத்யா கையசைத்து விட்டு பஸ் ஏறினாள்.

"**யா**ர் இந்த குருஜி?" என்று பலரும் கேட்கத் தொடங்கினார்கள். உள்ளூர் சாமி யார்களால் குணம் பெற முடியாத உடல் மற்றும் மனநோய் கொண்டவர்கள் முசோரிக்குப் படையெடுக்கத் தொடங் கினார்கள். "படேபகவான் குருஜியின் ஆசிரமத்துக்கு எப்படிப் போகணும்?" என்ற விவரம் கேட்டு தின நண்பனுக்கு தினமும் ஐந்தாறு தொலைபேசி விசாரணைகளாவது வந்தவண்ணம் இருந்தன.

"சத்யா உன்னுடைய 'மலையில் ஒரு மகான்' கட்டுரை சூப்பர் சக்ஸஸ்தான் போ. நீ ஓர் அற்புதமான பத்திரிகை ஜாம்ப வான்றதை நிரூபிச்சுட்டே" என்று பாராட் டினார் ராஜ்குமார். தொடர்ந்து வருத்தப் பட்டார். "இன்னும் ரெண்டு வாரங்களிலே தின நண்பன் தன்னுடைய இதயத்தையே இழந்துடப் போகிறது."

**அ**டுத்த இரண்டு வாரங்களில் சந்திர மோகன் – சத்யா திருமணம் சென்னையில் நடந்தது.

புதியதொரு சிக்கல் முளைத்தது. சத்யாவின் அம்மாவுக்கு ஆஸ்துமா தொல்லை அதிகமாக, முசோரி போன்ற மலைவாசஸ்தலங்களுக்குப் போனால் அது அதிகமாகிவிடும் என்ற நிலை.

"இன்னும் மூணு மாதங்களில் என் பெரி யம்மா பெண் குடும்பத்தோடு சென்னைக்கு வந்து செட்டிலாகப் போறா. அவ எங்கம் மாவை கவனிச்சுப்பா. அதனாலே நாலு மாதம் கழித்து நான் முசோரிக்கு வரவா?" என்று சத்யா கேட்க, அரைமனத் துடன் சம்மதித்த சந்துரு அடுத்த நாள் தான் மட்டும் முசோரிக்குப் பயணமானான்.

**நா**ன்கு நாட்கள்தான் ஆகியிருக்கும். தின நண்பன் அலுவலகத்துக்குள் வேகமாக நுழைந்தாள் அந்தப் பெண். கையில் ஏதோ பழைய பேப்பர். அங்கிருந்த ஒருவரிடம் விசாரித்து விட்டு நேராக சத்யாவிடம் வந் தாள். "இதை எழுதியது நீங்கதானா?" என்று அவள் காட்டிய இடத்தில், 'மலையில் ஒரு மகான்'. ஆமோதிக்கும் விதமாக சத்யா தலையாட்டியதும் "அடிப்பாவி. புலியைப் போய் பசுன்னு வர்ணிச்சிருக்கியே. புதுசு புதுசா பல பேர் அவனது வலையில் விழ நீ காரணமாயிட்டயே" என்று அவளை உலுக்கினாள் வாணி.

(தொடர்ந்து பறக்கும்)










2000 மே 7
விக்ரம சித்திரை 25
மலர் : 58
இதழ் : 41

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## வைகோவின் வார்த்தைத் தாக்குதல்!

இலங்கைப் பிரச்னை ஆரம்பித்த நாள் முதல் கண்டிராத மிகப் பெரிய பின்னடைவை அந்நாட்டு ராணுவம் கண்டிருக்கிறது. யாழ்ப்பாணத்தைப் புலிகள் நெருங்கி விட்டார்கள். வட ஜாஃப்னா தீபகர்ப்பம் நாட்டின் இதர பகுதிகளிலிருந்து துண்டிக்கப்பட்டிருக்கிறது. இன்னும் எத்தனை நாள் அது தாக்குப்பிடிக்கும் என்பது கேள்விக்குறிதான்.

புலிகளின் இந்த வெற்றியை இலங்கைத் தமிழர்களுள் ஒரு பகுதியினர் வரவேற்றுக் கொண்டாடுகிறார்கள். சிங்களவர்கள் அதிர்ந்து போயிருக்கிறார்கள். ஆனால், இரு தரப்பினருமே இதுநாள்வரை அனுபவித்து வந்த துன்பங்கள் மாறாமல், குறையாமல் தொடர்கின்றன.

சிங்கள அரசின் தமிழ் விரோதப் போக்கால் இடம்பெயர்ந்து, வேறு நாடுகளில் பிழைப்பு தேடிப் போனவர்களைப் போலவே, புலிகளுக்கும் ராணுவத்துக்குமிடையேயான யுத்தத்தின் போது வீடிழந்து, வாசலிழந்து அகதிகளாக வெளியேறியவர்களும் ஏராளம்தான். உரிமைகளைப் பெறுவதற்காகத் தொடங்கிய போராட்டம், இன்று புலிகள் நடத்தும் கொரில்லா யுத்தமாக மாறிவிட்டதால், இலங்கைவாசிகளின் துன்பம் சகிக்க முடியாததாகியிருக்கிறது. அந்நாட்டிலேயே வசித்து வருவோர் ரணகளமாகி விட்ட பூமியில் அல்லாடுகிறார்கள். இடம்பெயர்ந்து




போனவர்கள் அகதிகளாகி அவஸ்தைப்படுகிறார்கள்.

பிரச்னைக்கு ஒரு நிரந்தரத் தீர்வு, அதன் விளைவான நிஜ அமைதி, அதன் தொடர்ச்சியான வளர்ச்சி என்று நிலைமை முன்னேறாதா என, புலிகள் நீங்கலாக எல்லா தரப்பினருமே ஏங்குகிறார்கள்.

இனப் போராட்டம் ஒரு முடிவுக்கு வரவேண்டுமானால் இரு தரப்பினரும் சந்தித்து அமைதிக்கான முயற்சிகள் மேற்கொண்டாலன்றி நடக்காது.

இலங்கை அதிபர் சந்திரிகா பேச்சு வார்த்தைக்கு அழைத்தாலும் புலிகள் வரத் தயாராயில்லை என்னும் போது இலங்கையில் துன்பமும் துயரமும் எவ்வாறு குறையும்? நார்வே நாட்டைச் சேர்ந்த ஒரு நடுநிலைத் தூதுக் குழுவின் அமைதி முயற்சிகள் கூட புறக்கணிக்கப்பட்டு வருகின்றன.

பேச்சு வார்த்தையைப் புறக்கணிக்கவும் ராணுவத்தைத் தொடர்ந்து எதிர்த்து வெற்றி காணவும் புலிகளால் முடிகிறது - இதற்கான பொருள் பலம், ஆயுத பலம் எப்படிக் கிடைக்கிறது?

உலகம் முழுவதிலுமுள்ள தீவிரவாத அமைப்புகளின் வலைப் பின்னல், விடுதலைப் புலிகளுக்குத் தாராளமாக உதவி வருவதும் அயல்நாட்டில் வாழும் இலங்கை நாட்டவரிடம் புலிகள் கட்டாய வரி வசூல் செய்வதும் ஊரறிந்த ரகசியங்கள். விடுதலைப் புலிகள் உபயோகிக்கும் மிக நவீன ஆயுதங்களின் குவியலைப் பார்க்கும் போது, பணம் சம்பாதிக்க அவர்கள் கையாளும் முறைகளின் நேர்மை குறித்தும் சந்தேகம் எழுகிறது.

கொரில்லா யுத்த முறையைக் கையாளும் கூட்டத்தைக் கட்டுப்படுத்துவதோ அழிப்பதோ மிகவும் கடினம். போதாக்குறைக்கு, எதிர்க்கட்சியினரின் முழுமையான ஆதரவையும் பெற முடியாமல் அவஸ்தைப்படுகிறார் சந்திரிகா குமாரதுங்கா.




இதையெல்லாம் விட அதிகமாக இலங்கை அரசுக்குக் கவலையும் தொல்லையும் தரக்கூடியது, வைகோ போன்ற இந்தியத் தமிழர்களின் ஈழ ஆதரவுப் பேச்சுதான்!

சுவிட்சர்லாந்து நாட்டில் நடந்த ஒரு புலிகள் ஆதரவுக் கூட்டத்தில் 'தமிழ் ஈழம் வாழ்க' என்ற கோஷத்துடன் உரையாற்றியிருக்கிறார் வைகோ. சந்திரிகா குமாரதுங்காவைப் பற்றிக் குறிப்பிடுகையில், 'அவர் ஒவ்வொரு முறையும் அதிர்ஷ்டசாலியாக இருந்தாக வேண்டும்; ஆனால் ஒரே ஒருமுறை அதிர்ஷ்டம் நம் பக்கமிருந்தால் போதுமானது' என்று அவர் பேசியது மிகவும் கீழ்த்தரமான, பொறுப்பற்ற செயல்.

'மார்க்கரெட் தாட்சரைப் பற்றி ஐ.ஆர்.ஏ. (தீவிரவாத) அமைப்பு சொன்னதைத்தான் சொன்னேன்' என்று தமது செய்கைக்கு அவர் சப்பைக்கட்டு கட்டுவது மேலும் கேவலம்.

மத்திய அரசில் இடம்பெறும் தமிழக கட்சியான ம.தி.மு.கவின் தலைவர் இவ்வாறு பொறுப்பில்லாமல் சர்வதேச அரங்கில் பேசுவது மன்னிக்க முடியாத செயல். தாம் ஆதரித்து வரும் மத்திய மாநில அரசுகளுக்குப் பெரிய தர்மசங்கடம் ஏற்படுத்தியுள்ளார் வைகோ.

வைகோவின் ஜெனிவா உரை குறித்து அதிர்ச்சி தெரிவித்துள்ளார் இலங்கை அயலுறவுத் துறை அமைச்சர் லக்ஷ்மண் கதிர்காமர். 'இத்தகைய கூட்டங்கள் உங்கள் நாட்டிலே நடக்க அனுமதிக்காதீர்கள்' என்று சுவிட்சர்லாந்து அரசையும் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

போர்க் கருவிகளின் திறம் அதிகரிக்க அதிகரிக்க, யுத்தம் என்பது மிகக் கொடூரமாக மாறி வருகிறது. அதிலும் கொரில்லா யுத்தம் என்பது எதிர்பாராத நேரத்தில் தாக்கும் அதர்ம யுத்தம்! இதையெல்லாம் காட்டிலும் கொடூரம் உண்டு எனில், அது வைகோ போன்ற தலைவர்களின் வார்த்தைத் தாக்குதல்கள்.

தேசிய கொள்கையை அவை மீறுகின்றன என்பது மட்டுமல்ல, உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டு, சேதத்தையும் அதிகப்படுத்தி, அமைதியையும் எட்டாக்கனி ஆக்குகின்றன. ○


• எம்.ஜி.ஆர்.

# எழுகிறது புது சர்ச்சை

**எம்**.ஜி.ஆரையும், இந்தி நடிகர் ராஜ்கபூரையும் வைத்து கிராபிக்ஸ் மூலம் சினிமா தயாரிக்கப் போவதாக பென்டா மீடியா நிறுவனம் அறிவிக்க, செய்தியைப் படித்ததும் முதலில் டென்ஷனானது ராஜ்கபூர் குடும்பத்தினர்தான்.

“இது பெரிய விஷயம். இதற்கு முன் நிறைய பேர் விளம்பரங்களுக்காக ராஜ் கபூரை நடிக்க வைக்க எங்களை அணுகியிருக்கிறார்கள். ராஜ்கபூர் எதையாவது “என்டார்ஸ்” பண்ணுவதுபோல் படம் எடுக்கலாமா? எனப் பலமுறைக் கேட்டிருக்கிறார்கள். நாங்கள் அவர்களுக்கெல்லாம் ஸ்டிரிக்டாக மறுப்பைத் தெரிவித்திருக்கிறோம். இப்படி கிராஃபிக்ஸ் முறையில் படம் எடுப்பது பற்றி எங்கள் குடும்பத்தினரிடம் யாரும் அனுமதி வாங்கவில்லை'' என்கிறார் ராஜ்கபூரின் மகனும், கரிஷ்மா கபூரின் தந்தையுமான ரந்திர் கபூர்.


• ராஜ்கபூர்


• நம்பியார்

“எம்.ஜி.ஆரும், ராஜ்கபூரும் வெவ்வேறு விதமான பாணியைக் கொண்டிருந்தார்கள். இருவரையும் வைத்து எந்த மாதிரி படம் பண்ணப் போகிறார்கள் என்ற விஷயமும் தெரியவில்லை. இந்த விஷயம் குறித்து என் குடும்பத்தாரிடம் பேசுவேன்'' என்கிறார் அவர்.

**எம்**.ஜி.ஆர். பேச்சு மற்றும் செவித்திறன் குறையுடையோர் பள்ளியின் முதல்வர் லதா ராஜேந்திரனிடம் கேட்டோம்:

“எம்.ஜி.ஆர். தம் கதாபாத்திரங்கள் மூலம் நல்ல கருத்துக்களை வலியுறுத்தி வந்தார். பெண்கள் அவலநிலை, தாயின் பெருமை என்பது மாதிரி அவர் மீண்டும் திரைவானில் வரப் போகிறார் என்பது இனிமையான விஷயம்தான். ஆனால், மக்களின் மனத்தில் நீங்காத இடம் பெற்றிருக்கிற அவரின் நடிப்பை எவ்விதக் கலப்பும் இல்லாமல் அப்படியே சித்திரித்தால் நன்றாக இருக்கும்” என்கிறார்.

“செய்தித்தாளில் இந்தச் செய்தியைப் படித்ததும் என் மனம் கொதித்தது. எம்.ஜி.ஆராக இருந்தாலும் சரி, ராஜ் கபூராக இருந்தாலும் சரி, நம்மை விட்டு மறைந்து விட்ட சினிமா கலைஞர்களை திரையில் மீண்டும் பாத்திரங்களாக நடிக்க வைப்பது பெரிய ஆபத்தில் போய் முடியும்'' என்கிறார் எம்.ஜி.ஆரின் நண்பரும் நடிகருமான எம்.என். நம்பியார்.

''கம்ப்யூட்டரும் தொழில்நுட்பமும் வளர்ந்து விட்டது என்பதற்காக, இப்படியெல்லாம் செய்ய நினைப்பது சினிமா தர்மத்தையே பாதிக்கும். குளோனிங் முறையில் ஒரே மாதிரி மனிதர்களை உருவாக்க முடியும் என்ற நிலை அச்சுறுத்துவதால், மனிதகுலத்திற்கு ஆபத்தானது என அமெரிக்கா அதற்குத் தடைவிதித்தது.

## கிராஃபிக்ஸில் எம்.ஜி.ஆர்., ராஜ்கபூர்!

கிட்டத்தட்ட இதுவும் அது போலத்தான். அமரர்களாகிவிட்ட சினிமா கலைஞர்களின் வாழ்க்கை வரலாற்றை படமாகத் தயாரிக்கிறபோது வேண்டுமானால், தவிர்க்க முடியாத இடங்களில் இது போன்ற தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தலாம். ஆனால் ஒரு கதையை உருவாக்கி, அதில் மீண்டும் நடிக்க வைப்பது, அது நல்ல கேரக்டராக இருந்தாலும் கூட அது சரியல்ல. அவர்களின் இமேஜையும், மக்கள் மத்தியில் அவர்களுக்கு இருக்கும் மரியாதையையும் பாதித்துவிடும். படம் வெளிவந்து மக்கள் பார்க்கிறபோது அதை ஒரு நகைச்சுவையாகத்தான் எடுத்துக் கொள்வார்களே தவிர, உண்மையான ஈடுபாட்டுடன் பார்க்க முடியது. இது செயற்கையாக உருவாக்கப்பட்டதுதானே என்ற உறுத்தல் இருந்து கொண்டேயிருக்கும். வியாபார நோக்கத்தோடு செய்யப்படும் இதுபோன்ற முயற்சிகளுக்கு அவர்களது வாரிசுகள் எந்த வகையிலும் துணைபோகக் கூடாது. எதிர்காலத்தில் இது போன்ற முயற்சிகளை 'அவதூறாக'க் கருதி அரசாங்கமே இதற்குத் தடை விதிக்க வேண்டும்!'' என்கிறார்.

**"கம்ப்யூட்டரும் தொழில்நுட்பமும் வளர்ந்து விட்டது என்பதற்காக, இப்படியெல்லாம் செய்ய நினைப்பது சினிமா தர்மத்தையே பாதிக்கும்."**

"இதை ஏன் டெக்னாலஜியின் முன்னேற்றமாகப் பார்க்கக் கூடாது?" என்று கேட்கிறார் நடிகர் நாசர்.

"ஒரு 'ஃபன்'னுக்காக தயாரிக்கப்படற படம் இது. தொழில்நுட்ப வ்ளர்ச்சியால இப்படிப் பண்றாங்க. இதால யாரோட இமேஜூம் பாதிக்காது. இது வரவேற்கப்பட வேண்டிய விஷயம்தானே தவிர இதை வேறு கோணத்தில் பார்க்க வேண்டாம்'' என்றவரிடம், 'ஒரு படத்துல ஒரு நடிகையோ, நடிகரோ கால்ஷீட் பிரச்னை செய்தால் இதுமாதிரி கிராஃபிக்ஸில் பண்ணி எடுக்க இது வழிசெய்து கொடுக்கலாமே' என்றால், "அப்படியெல்லாம் யாரும் செய்ய முடியாது. அது சட்டச் சிக்கல்லதான் முடியும். இதை வேறு கண்ணோட்டத்தில் பார்க்க வேண்டிய அவசியமில்லை'' என்கிறார்.

• நாசர்



• லதா ராஜேந்திரன்

பென்டமீடியா நிறுவன மேனேஜிங் டைரக்டர் சந்திரசேகரிடம் இது பற்றிக் கேட்டால், "இது ஜாலிக்காக எடுக்கப்படுகிற படம்தான். யாருடைய கௌரவமும் பாதிக்கப்படாமல் எடுக்கப் போகிறோம்'' என்கிறார்.

"எம்ஜி.ஆர். மற்றும் ராஜ்கபூர் வாரிசுகளிடம் இதுவரை அனுமதி பெறப்படவில்லை. அவர்களிடம் கதையைச் சொல்லி அனுமதி பெறுவோம்'' என்கிறார்.

— நமது நிருபர்கள்

## – சோ.பா.வுக்கு துரைமுருகன் பதில்

எதிர்கட்சித் தலைவர் சோ. பாலகிருஷ்ணன் சட்டப் பேரவையில் எடுத்து வைத்த குற்றச்சாட்டுகளில் உண்மை இல்லை என்று பேரவைத் தலைவர் தீர்ப்பு கூறிய பிறகும், அந்தக் குற்றச்சாட்டுகளை அவர் வலியுறுத்தி வருகிறார். அந்த வகையில் 'கல்கி'க்கு அளித்த பேட்டியிலும் அவற்றைத் தெரிவித்திருக்கிறார். விளக்கமளிக்க வேண்டியது ஜனநாயக ரீதியில் எனது கடமை என்ற வகையில் சில விஷயங்களைத் தெளிவாக்க விரும்புகிறேன்.

அவர் என் மீது குற்றச்சாட்டு சொன்னவுடன் அவரை மிரட்டுகிற வகையில் முதல்வர் அவர் மீது குற்றச்சாட்டு ஒன்றை பேரவைத் தலைவரிடம் கொடுத்ததாக அடிக்கடி சொல்லி வருகிறார். இது கடைந்தெடுத்த பொய். சோ. பாலகிருஷ்ணன் மீது எந்தக் குற்றச்சாட்டையும் முதல்வர் பேரவைத் தலைவரிடம் கொடுக்கவில்லை. என்னதான் நடந்தது? சோ.பா. என் மீது புகார் கூறியதும் எனக்கு ஆச்சரியம். 'இவர் எதற்காக நம் மீது குற்றச்சாட்டு கூறுகிறார்; பலமுறை அவரது பரிந்துரைகளை ஏற்று அவருடைய தொகுதிக்குப் பல திட்டங்களுக்கு (சட்டப்படி) அனுமதி கொடுத்திருக்கிறேனே' என்று வியந்து கொஞ்சம் யோசித்துப் பார்த்தேன். காரணம் புரிந்தது. அவரே பேட்டியில் சொல்லியுள்ள அந்த வைகை பாசன வேலை குறித்த டெண்டரை அவர் சொன்ன நிறுவனத்துக்குக் கொடுக்காதது தான் சோ.பா.வின் கோபத்துக்குக் காரணம் என்று பளிச்சென்று புரிந்தது. அந்த வேலை குறித்த டெண்டரை பரிசிலிக்கும் சமயத்தில் அதிகத் தொகைக்குக் கேட்டிருந்த அந்த நிறுவனத்துக்கு கொடுக்கும்படி சிபாரிசு செய்தார் சோ.பா. 'அதற்கு வாய்ப்பே இல்லை' என்று நான் மறுத்துவிட்டேன். உடனே முதல்வரிடம், உயர்ந்த பட்ச டெண்டரை ஏற்கச் சொல்லி கடிதம் கொடுத்தார். சோ.பா கொடுத்த கடிதத்தை முதல்வர் எனக்கு அனுப்பி வைத்தார். நான் சோ.பா.வின் சிபாரிசை ஏற்க முடியாது என்பதை விளக்கிச் சொன்னேன். முதல்வரும் என் விளக்கத்தை சரி என்று ஏற்றுக்கொண்டு விட்டார். இது சம்பந்தமாக சோ.பா என் மீது கடும் கோபமாக இருக்கிறார் என்று பின்னர் நண்பர்கள் மூலமும் கேள்விப்பட்டேன்.

சட்டப் பேரவையில் சோ.பா குற்றச்சாட்டுக்களை அடுக்கியதும் "என் மீது இருக்கும் கோபம் காரணமாகத்தான் எதிர்கட்சித் தலைவர் அபாண்டமாகச் சொல்கிறார்" என்று முதல்வருக்கு நான் ஒரு கடிதம் எழுதினேன்.

என்னுடைய கடிதத்துடன், முதல்வருக்கு சோ.பா முன்பு எழுதிய சிபாரிசு கடிதத்தையும் இணைத்திருந்தேன். என் கடிதத்தை அதன் இணைப்புடன் சேர்த்து, பேரவைத் தலைவரிடம் கொடுப்பதுதான் முறை என்று அவரிடம் கொடுத்தார் முதல்வர். பேரவைத் தலைவரின் தீர்ப்புக்காக அந்தக் கடிதங்களைக் கொடுத்திருப்பதாக முதல்வர் வெளிப்படையாகவே அவையில் சொன்னார். எனவே வேண்டுமென்றோ, மிரட்டும்விதமாகவோ, முதல்வர் சோ.பா மீது எந்தக் குற்றச்சாட்டையும் பேரவைத் தலைவரிடம் கொடுக்கவில்லை என்பது தெளிவாகப் புரியும்.

## சலசலப்புக்கு

இப்போது சோ.பா சிபாரிசு செய்த டெண்டர் பற்றிப் பார்ப்போம். அவர் சிபாரிசு செய்த நிறுவனம், பல தர்ம காரியங்களைச் செய்திருப்பதால் அவர்களுக்குக் கொடுப்பதுதான் முறை என்கிறார் சோ.பா. தர்ம காரியம் செய்தது என்பதற்காக 70 லட்சம் அதிகம் கேட்ட நிறுவனத்திற்கு டெண்




## தயாராகிவரும்

சங்க இலக்கியத்தில் 'நெல்' என்கிற வார்த்தை எத்தனை இடங்களில் வருகிறது...? என்று கேட்டால் எத்தனை பேருக்குத் தெரியும்?

ம்ஹூம் என்று தலையை ஆட்டுபவர்கள்தான் அதிகமாக

• விழாவில்...

டர் கொடுத்தால் அது எப்படிச் சரியாகும்? அது முறைகேடில்லையா? அந்த வேலைக்கு ஒரு கோடியே, முப்பத்தி மூன்று லட்சத்திற்கு டெண்டர் கேட்கப்பட்டுள்ள நிலையில் இதைவிட 70 லட்ச ரூபாய் அதிகம் கேட்ட நிறுவனத்திற்கு, சோ.பா சிபாரிசு செய்தார் என்பதற்காகக் கொடுத்து விட முடியுமா? இப்படி ஒருமுறை கேட்டை செய்ய சிபாரிசு செய்த சோ.பா.வின் செயல்தான் சந்தேகத்துக்குரியதாகி இருக்கிறது. இவர் சொன்னபடி செய்திருந்தால், உச்சநீதிமன்ற நீதிபதியின் விசாரணையைச் சந்திக்க வேண்டிய நிலை எனக்கல்லவா வந்திருக்கும். நான் மனச்சாட்சி + விதிகளின்



# அஞ்ச மாட்டேன்!

படி நடந்து கொண்டதால் சிக்கலிலிருந்து தப்பினேன்.

அதேபோல பிளாக் லிஸ்ட் செய்யப்பட்ட காண்ட்ராக்டருக்கு ஒப்பந்தம் வழங்கப்பட்டதாகக் கூறுவதும் தவறு! உலக வங்கி பணி ஆதலால், அவர்கள் நன்றாக விசாரித்த பின்தான் ஒப்பந்தம் கொடுப்பார்கள். பிளாக் லிஸ்ட் செய்யப்பட்டிருந்தால் அவருக்கு ஒப்பந்தம் வழங்க உலக வங்கி ஒப்புக் கொண்டிருக்காது.

பேரவைத் தலைவரும் முதல்வரும் என்னைப் பாதுகாக்க நினைக்கிறார்கள் என்று சோ.பா சொல்கிறார். ஒரு பிரச்னை பேரவையிலே எழுப்பப்படுமானால் அது பற்றிய பேரவைத் தலைவரின் தீர்ப்புதான் இறுதியானது. 'இது குறித்து நீதிமன்றத்திற்குச் செல்ல விரும்பினால் முறைப்படி அனுமதி பெற்று சோ.பா செல்லலாம்' என்று முதல்வர் சொல்லியிருக்கிறார். ஆனால் சோ.பா.வோ ஏடுகளின் மூலமாகவே குற்றச்சாட்டுக்களை சொல்லிக்கொண்டிருக்கிறார்.

சோ.பா.வுக்கு சிங்கிள் டெண்டர், நியமன டெண்டர் போன்றவற்றைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. ஏதோ காழ்ப்புணர்ச்சியில் மனம் போனபடி சொல்கிறார். 'பொதுப்பணித் துறை அமைச்சர் இப்படிச் செய்தார்; அப்படிச் செய்தார்' என்று முறைகேடுகள் பற்றி குறிப்பிட்டுச் சொல்லட்டும். தவறுகள் இருந்தால் திருத்திக் கொள்ளத் தயாராக இருக்கிறோம். அதை விட்டு, விட்டு ஆயிரக் கணக்கான பொறியாளர்கள் பணியாற்றும் இந்தத் துறையில், கீழ்நிலையில் விதிப்படி செய்யப்படும் சில பணிகளைக்கூட, அமைச்சரோடு தொடர்புபடுத்தி களங்கப்படுத்த நினைப்பது எப்படி நியாயமாக இருக்கும்! இந்தச் சலசலப்புக்கு நான் அஞ்ச மாட்டேன்!

(கையொப்பம்) 22/4/...

## களஞ்சியம்!

இருப்பார்கள். இதற்கு ஒரு வழி செய்கிறது 'அம்பலம்' இணைய இதழ்!

'களஞ்சியம்' என்ற ஒரு பகுதியை ஆரம்பிக்க இருக்கிறது. இதில் 'நெல்' என்ற வார்த்தை, சங்க இலக்கியங்களில் எத்தனை இடங்களில் வருகிறது என்று கேட்டால், நொடியில் பதில் ரெடி! ஒரு வார்த்தை, ஒரு அடி, ஒரு சொற்றொடர் எங்கே பயன்பட்டது என்று அதில் கேள்வி கேட்டு பெற முடியும். ஆராய்ச்சியாளர்களுக்கு உதவக்கூடிய இது போன்ற பல தகவல்கள் இதில் கிடைக்கும். இன்னும் இரண்டு வருடத்தில் இந்த 'களஞ்சியம்' முழு அளவில் தயாராகி விடும்.

– 'அம்பலம்' இணைய இதழ் ஆண்டு மலர் வெளியீட்டு விழாவில் சுஜாதா.

— லிங்

# "கோலிவுட் ஸ்கூல்; பாலிவுட் காலேஜ்!"

## ராணி முகர்ஜி பேட்டி

**சி**லருக்கு வாழ்க்கையை ஒரு தங்கத் தாம்பாளத்தில் வைத்து, 'இந்தா அனுபவி' என்று அளிக்கிறான் ஆண்டவன். அப்படிப் பட்ட அதிர்ஷ்டசாலிகளில் ஒருவர் ராணி முகர்ஜி!

நட்சத்திர 'பந்தா' எதுவுமில்லாமல், 'ஃப்ரெண்ட்லியாகப் பழகும் இனிமையில் உண்மையிலேயே இவர் ஒரு ராணிதான்!

அடுத்த வீட்டுப் பெண் தோற்றம்தானென்றாலும், கண்களின் மினுமினுப்பிலும், பளீர் சிரிப்பிலும் கஜோல் தனம் (கனிவாயிற்றே?) எட்டிப் பார்க்கிறது. அபிஷேக் பச்சனுடன் இவர் நடித்துக்கொண்டிருந்த படத்தின் ஷூட்டிங், மும்பை ஸெயிண்ட் ஆண்ட்ரூஸ் காலேஜில் நடந்துகொண்டிருந்தது. கல்லூரியின் நீண்ட காரிடோர்களைக் கடந்து, இவர் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த வெட்ட வெளி வாகனத்தின் (வழக்கம்போல் ட்ராயிங் ரூம் கம் ட்ரெஸ்ஸிங் ரூம் கம் பாத்ரூம் கொண்டதுதான்) கதவைத் தட்டியதும், அவர் உள்ளத்தைத் திறந்தார்.




"சினிமா என் குழந்தைப் பருவக் கனவெல்லாமில்லை; ப்ளஸ் டூ முடித்ததும், குடும்ப நண்பரான சலீம் கக்தர், 'ராஜா கி ஆயி ஹை பராத்' தில் நடிக்க வாய்ப்பளித்தது எதிர்பாராத நிகழ்வுதான். நான் சினிமா குடும்பத்தைச் சேர்ந்தவள்தான் என்றாலும், எனக்கு அது பற்றி அதிக ஞானமில்லை" என ஆரம்பித்தார், உண்மை விளம்பியாக!

முதல் படம் ஸூப்பர் 'ஃப்ளாப்'. ஆனால் தான் என்ன? சூட்டோடு சூடாக வந்த 'குலாம்' மூலம், ரசிகர்களை குலாம் (அடிமை) ஆக்கி விட்டாரே?

**க**மலுடன் இணைந்து நடித்த அனுபவத்தைக் கேட்காமலிருக்க முடியுமா? இதற்கென தமிழ் வசனங்களை இந்தியில் எழுதி, கமவிடம் உச்சரிப்பைப் பயின்று, மெனக்கெட்டு தமிழில் பேசி இருக்கிறாரே?

"கமலிடம் ஒரு டெக்னிகல் ப்ரில்லியன்ஸ் உண்டு; அவருடன் இணைந்தாலே, ஒரு அற்புதமான படைப்பில் நாமும் பங்கு வகிக்கப்



போகிறோம் என்ற நம்பிக்கை துளிர்விடுகிறது. தனித்தன்மையுடன் ஒளிர்விடும் வித்தியாசமான படைப்புகளைத்தானே அவர் தருகிறார்? நடிப்பு விஷயத்தில் எங்களுக்குப் பூரண சுதந்திரமளித்தார்'' என சந்தோஷிக்கிறார்.

கோலிவுட்டை ஸ்கூலுக்கும், பாலிவுட்டை காலேஜுக்கும் கச்சிதமாக ஒப்பிடுகிறார் – ''அங்கே ஒழுங்கே பிரதானம், இங்கே கண்டிப்பும் கறாரும் கம்மி.'' ஹே- ராமில், கமல் – ராணி காதல் காட்சிகளைக் கண்டு ராணியின் பெற்றோரே அதிர்ச்சியடைந்ததாக வந்த செய்தியை நினைவு கூர்ந்து, ரொமாண்டிக் ஸீன்கள் கொஞ்சம் வல்காரிட்டியைத் தொட்டனவா?' என்றால், ''அதெல்லாமில்லை'' என மறுக்கிறார் – ''அவை கலை நயமிக்க, கதையுடன் இணைந்த இயல்பான காட்சிகள்; நம் இல்லங்களிலெல்லாம் திருமணமானவர்கள் முத்தம் கொடுப்பதே அசாதாரணமாயிருக்க, இந்தப் படத்தைப் பார்த்து அவர்கள் 'ஷாக்'காவது இயற்கைதானே? இருந்துவிட்டுப் போகட்டும்... ஆனால் இத்தனையும் மீறி படம் தோல்வி அடைந்ததற்கான காரணம்? கேட்டால், ''நான் ஃபிலிம் அனலிஸ்ட் இல்லை, நடிப்பதே என் தொழில், செய்யும் தொழிலை, ஆத்மார்த்தமாகச் செய்ய வேண்டுமென்பதே என் நோக்கம். முடிவை வைத்து, 'இந்தப் படம் செய்வது ஆஹா ஓஹோ என்றிருந்தது; அந்தப் படம் சரியில்லை என்றெல்லாம் என்னால் பேச முடியாது; 'ஹலோ பிரதர்' பெரிய வெற்றியில்லைதான், ஆனால் சல்மானுடன் நடித்த அனுபவம் மகிழ்ச்சிகரமாயிருக்கிறது.

இப்படியே மரத்தைச் சுற்றிக் கொண்டிருக்கப் போகிறரா அல்லது வித்தியாசமாகவும் எதையாவது எதிர்பார்க்கலாமா என்ற கவலையில் எத்தனை ரசிகர்கள் வாடுகிறார்கள்? அதை இலேசாக 'டச்' பண்ணினால், ''முதலில் நான் இதுவரை ஒரு மரத்தைக் கூடச் சுற்றவில்லை; அடுத்து, 22 வயது இளநங்கைக்கு ரொமான்டிக் ரோல்களைத் தவிர வேறு எதைக் கொடுக்கிறார்கள்?

''ஒரு படத்தில் என் பாத்திரம் பளிச்சிடுமா எனப் பார்த்து, படங்களை ஒப்புக் கொள்வதில்லை; படம் நிற்குமா? என்பதையே அனுமானித்து முடிவெடுக்கிறேன். ஆனால் எதிர்காலத்தில் வேறுவிதமான பாத்திரங்களை நிச்சயம் ஏற்று நடிப்பேன்; 'பிச்சு' வரக் காத்திருக்கிறேன். அதில் பாபி தியோலுடன் நான் செய்யும் ரோல் வித்தியாசமானது' என்கிறார் உறுதியாக.

'ரியல் லைஃப் ஹீரோ' என்று யாராவது...?'

''ஓ'' இருக்கிறாரே' என்றதும், வாசகர்கள் சார்பில் 'குப்'பென்று வியர்த்து, 'யார்' என்றோம்; 'என் அப்பா' என்றதும் 'சப்'பென்றாகி விட்டது.

கூட இருந்த நண்பிகள் 'கிக்கிக்க, 'பாருங்கள்... இவர்கள் என்னை ஒரு நடிகையாகவே நினைக்கமாட்டேனென்கிறார்கள். நான் இன்டர்வியூவெல்லாம் கொடுப்பது இவர்களுக்கு வேடிக்கையாயிருக்கிறது' எனச் சிணுங்கிவிட்டு, மீண்டும் அப்பாவிடம் திரும்பினார். 'அவர்தான் எனக்கு ரோல் மாடல், இன்ஸ்பிரேஷன் எல்லாம்; அவரைக் காப்பியடிக்கத் தான் எப்போதும் முயற்சிப்பேன்; அவர் இதே துறையைச் சேர்ந்தவர் என்பதால், நான் சினிமாவுக்கு வருவதை அவ்வளவாக விரும்பவில்லை.'

'ஒடிஸி'யை ஹாபியாக வைத்திருக்கும் இவர், ''சினிமாவுக்கு வந்திராவிட்டால், பேசாமல் கல்யாணம் பண்ணிக்கொண்டு குழந்தை குட்டிகளைப் பெற்றுக் கொண்டிருப்பேன்'' என்கிறார் அப்பட்டமாக.

பேசிக் கொண்டிருந்ததில் நேரம் ஓடிவிட, இளம் டைரக்டர் தானே தன் 'டெப்யூ' பிலிமின் ஹீரோயினை அழைக்க வர, அவரை நமக்கு 'வெரி ப்ராமிஸிங்' என அறிமுகப்படுத்திய கையோடு விடைபெறுகிறார்.

''ஹாங்... தமிழர்களை என் படங்களை... அது இந்தியாக இருந்தாலும்... பார்க்கச் சொல்லுங்கள்'' என சிட்டாய்ப் பறக்கிறார், பல இளம் நெஞ்சங்களில் கோலோச்சிக் கொண்டிருக்கும் இந்த ராணி!

மும்பையிலிருந்து: **ஜெயஸ்ரீ ராஜ்**

# திருவரசு புத்தக நிலையம் வழங்கும் புதிய புத்தகங்கள்

## இலக்கியம், கட்டுரை, அறிவியல்

| | | விலை ரூ. பை |
|---|---|---|
| கல்கி நினைவுகள் (கல்கி நூற்றாண்டில் வெளிவந்த மிகச் சிறந்த கல்கி நினைவு நூல்) | பகீரதன் | 160.00 |
| புறநானூறு புதிய தளிர்கள் (புறநானூறு 50 பாடல்களுக்கு விரிவான விளக்கவுரை 1999ஆம் ஆண்டின் சிறந்த நூல் என இலக்கியச் சிந்தனை தேர்ந்தெடுத்து இந்நூலுக்கு ரூ. 5000 பரிசளித்துள்ளது) | கு. ராஜவேலு எம்.ஏ. | 190.00 |
| சூரியச் சுற்றுலா (இலக்கியப் பீடம் வழங்கிய ரூ 10,000/– பரிசு பெற்ற அறிவியல் நூல்) | நெல்லை சு. முத்து | 40.00 |
| கவிஞர் ஷேக்ஸ்பியர் | வி. தட்சிணாமூர்த்தி | 30.00 |
| செட்டிநாடும் செந்தமிழும் (செட்டிநாட்டின் வரலாறும் செந்தமிழ் வளர்ச்சியின் வரலாறும்) | சோமலெ | 180.00 |
| நகரத்தார் வரலாறு | அ. சேஷாத்ரி சர்மா | 60.00 |
| மங்கையர் சிறக்க மணியான யோசனைகள் | அமுதாகணேசன் | 50.00 |
| உடல் நலம் காக்க உயர்ந்த வழிகள் | அமுதா கணேசன் | 50.00 |
| உலகத் தத்துவ ஞானியர் | வை. தட்சிணாமூர்த்தி | 30.00 |
| இலக்கியம் வாழ்க்கைக்கு என்ன சொல்கிறது? | கே.கே. ராமலிங்கம் | 30.00 |

## ஆன்மிகம்

| | | |
|---|---|---|
| திருப்புகழ் முழுவதும் (திருமுருக கிருபானந்த வாரியார் முன்னுரையுடன் கூடிய நூல்) | | 150.00 |
| பெண்களுக்கு ஒரு வழிகாட்டி | கே. என் ராமச்சந்திரன் | 30.00 |
| பகவத்கீதை (பாரதியார் விளக்கவுரை) | சுப்ரமணிய பாரதியார் | 30.00 |
| இனிய தெய்வீக வாழ்க்கைக்கு சிந்தனைத் துளிகள் | கே.கே. ராமலிங்கம் | 30.00 |
| நாயன்மார்கள் வரலாற்றில் பல்வகைச் செய்திகள் (பெரிய புராண ஆய்வு நூல்) | ம. சிவகுருநாத பிள்ளை | 60.00 |
| அருணகிரிநாதர் வாழ்வும் வாக்கும் | திருவரசு | 18.00 |

## நாவல், கதைகள்

| | | |
|---|---|---|
| சோழ ராணி – 1 (வரலாற்று நாவல்) | ராஜகுரு | 50.00 |
| சோழ ராணி – 2 (வரலாற்று நாவல்) | ராஜகுரு | 55.00 |
| என் பெயர் ரங்கநாயகி (நாவல்) | இந்திரா சௌந்தர்ராஜன் | 65.00 |
| நந்தவன மலர்கள் (நாவல்) | வாசவன் | 30.00 |
| கோபுர தீபம் (நாவல்) | பி.வி.ஆர். | 36.00 |
| ஆகாச வீடுகள் (நாவல்) | வாஸந்தி | 60.00 |
| உஷ் (நாவல்) | இந்திரா சௌந்தர்ராஜன் | 40.00 |
| 51 ஆன்மிகக் குட்டிக் கதைகள் – 1 | ஜானகி மணாளன் | 18.00 |
| ஓவியத் தளிரே உனக்குச் சில பாடல்கள் | அ. வெற்றிவேலன் | 15.00 |
| நன்னெறி புகட்டும் நான்கு நாடகங்கள் | ஜானகி மணாளன் | 25.00 |
| மகாபாரதக் குட்டிக் கதைகள்–I–IV (ஒரு செட்) | ஆர். பொன்னம்மாள் | 100.00 |

- தேவையான புத்தகங்களை VPP மூலம் பெற கடிதம் எழுதுங்கள். VPP தபால் செலவு தனி.
- புத்தக வியாபாரிகள் – நூல் நிலையங்களுக்கு தக்க கழிவு உண்டு – கடிதம் எழுதுங்கள்.
- திருவரசு புத்தக நிலையம் வெளியீடுகள் – புத்தக விலைப் பட்டியலுக்கு கடிதம் எழுதுங்கள்.

விவரங்களுக்கு



**திருவரசு புத்தக நிலையம்**

(பாண்டி பஜார் அருகில் உள்ள தலைமை தபால் நிலையம் எதிரில்)

13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை – 600 017



# வற்றல் குழம்பும் வராத மருமகளும்

சீதா ரவி

**எ**ப்போதும் எல்லாவற்றிலும் அவசரம்தான் கேதாரநாதனுக்கு! ஆனால் இந்த அவசரத்தை மன்னிப்பது கஷ்டமாயிருந்தது. எந்தக் குறையும் வைக்காமல் செத்துப் போனார் என்பதாலேயே நாற்பத்தெட்டு வயதில் மரணம் நியாயமாகி விடுமா?

காலம் ஆற்றிய ரணங்கள், எதிர்பாராத சலனங்களால் கிளறப்படுவதும் பின் அழுது ஓய்ந்த கைக் குழந்தையாகத் தானே அடங்கிப் போவதும் இந்த ஏழு வருடங்களில் பழக்கமாகிவிட்டாலும் வலிக்காமலில்லை.

“சுந்தரி!”.... குளியலறையிலிருந்து டவல் கேட்டு அழைக்கும் குரல் இன்னமும் தூக்கத்தை முரட்டுத்தனமாகக் கலைக்கிறது. புத்தகங்களை அடுக்கும்போது ஏதேனுமொரு பக்கம் விரிந்து கொடுத்து நினைவுகளை தூசி தட்டித் துலங்க வைத்து விடுகிறது. திருநீறு சம்புடத்தைத் திறக்கும்போது எழும் மணம் நிலைகுலையச் செய்கிறது.

‘சரி! சரிச..! போதும்! ஊம் வா! வா!’ என்று பேய் மனத்தைப் பிடித்து இழுத்து வருவதற்குள் விழிக்கடையோரம் வரை நிறைந்து போகிறது.

இதையெல்லாம் கூடச் சுலபமாய் மறைத்து விட முடிகிறது. கார்த்திகேயனைப் பார்க்கும்போது உண்டாகிற உணர்ச்சிக் கலவையைத் தான் வகைப்படுத்த முடியவில்லை.

அனைத்திலும் அவன் அப்பாவைப் போலவே இருந்தான் - அந்தப் புயலான அவசரம் உள்பட. படிய வாரிய தலையும் பெரிய கண்களும் திருத்தமான மூக்கும் நீண்ட கைகளும் சிரிக்கும்போது சுருங்கும் இமையோரங்களும் அள்ளிச் சாப்பிடும் வேகமும் இடற இடற ஓடும் நடையும்... அவரைப் போலவே அவசரமாக நாற்பத்தெட்டாவது வயதில்... விபரீத கற்பனைதான் - தெரிகிறது. அதற்காக அது திரும்பத் திரும்ப

வராமலிருப்பதில்லை.

இதற்காகவேனும் கேதார் செத்துப் போகாமலிருந்திருக்கலாம். இதற்காகவும் கார்த்திக்கிடம் திருமணப் பேச்சை ஆரம்பிப்பதற்காகவும்.

'இதோ பார், உனக்கு இந்த ஏப்ரல் வந்தா இருபத்தெட்டு முடியப் போறது. பெண் பார்க்கலாம்னு இருக்கேன்...'

'கார்த்திக் வாட் டு யு ஸே டு கெட்டிங் மாரீட்...?'

'ஜாதகம் ஒண்ணு வந்திருக்குப்பா. பார்க்கட்டுமா? இல்லை, நீ... யாரையாவது மனசுல வைச்சுண்டிருக்கியா?'

– அம்மாவானவள் எப்படியும் கேட்கலாம். ஆனால், கேட்கிற நேரத்தில் அப்பாவானவர் அருகில் இருந்தால் அந்தப் பேச்சுக்கு கிடைக்கக்கூடிய பரிமாணமே வேறு.

அதற்காக கேதார் மரணத்திலிருந்து இரண்டு நாள் விடுப்பெடுத்துக் கொண்டு வந்து விட்டுப் போக முடியுமா என்ன? சுந்தரிக்குத் தெரியாமலில்லை.



**எ**திர்பார்த்தது போலவே கார்த்திக் முதலில் மௌனமாயிருந்தான். கட்டை விரல் நகத்தை ஆராய்ந்தான். அவன் அப்பாவின் 'மானரிஸம்'.

"கார்த்திக்!"

"......................"

"என்னப்பா பதிலே சொல்ல மாட்டேங்கறே...?"

"உனக்கு எது சரின்னு தோணுதோ செய்யேன்மா!"

– கட்டை விரலிலிருந்து நீங்கிய பார்வை கொஞ்சம் சங்கோசம் பூசிக் கொண்டிருக்கிறதோ?....

தோளில் கை பதிந்து இலேசாக அழுத்தியது.

"லைப்ரரிக்குப் போறேன். உனக்கு ஏதாவது புத்தகம் எடுத்திட்டு வரட்டுமா?"

"நான் கேட்டதுக்குப் பதில் சொல்லுப்பா..."

"சொல்லிட்டேனேம்மா.... நான் கிளம்பறேன். ஏழரைக்கு லைப்ரரி க்ளோஸ் பண்ணிடுவான்."

அவன் கார் கதவைத் திறக்கையில் திரும்பவும் கேதாரின் ஞாபகம். அந்த அசைவு! அத்தனை உயரத்தையும் அரை நொடிக்குள் மடித்துச் சுருட்டி ஒரு சித்திரக்குள்ள வாகனத்துக்குள் அடக்கும் லாகவம்!

'உனக்கு எது சரின்னு தோணுதோ செய்யேன்மா!' - வார்த்தை வார்த்தையாக அந்தப் பதிலை எடைபோட்டு மீண்டும் அந்தக் கணத்தை வாழ்ந்து மகிழ்ந்தாள் சுந்தரி. பெருமிதச் சுமை வந்து நெஞ்சை நிறைத்தது. பிரசவ ஆஸ்பத்திரியில் பொட்டலமாய்த் துணியில் சுற்றி அவனைக் கையில் தந்தார்களே, அந்தக் கணம் தொடங்கி ஞாபக அடுக்குகள் விரிந்தன.

சான்ட்ரோ காரின் முன் இருக்கையில் அவனருகே இருபத்து நாலு வயதில் ஒருத்தியை இருத்திப் பார்க்கும் கற்பனையில் மனம் முட்டி நின்றது.

எப்படியிருப்பாள்...?

ஐந்தடி மூன்றங்குலமாவது உயரம் வேண்டும். சிவப்பாயில்லாவிட்டால் பாதகமில்லை. எல்லா நிறங்களும் நல்லவையே. கார்த்திக் கூட சிவப்பழகு கிரீம் விளம்பரங்களைப் பார்த்துக் கேலியாகச் சிரிப்பவன்தான்.

'ஏன்டீ! இப்படி கறுப்பா ஒரு பொண்ணைப் பெத்திருக்கியே. கல்யாணத்துக்குக் கஷ்டப்படப் போறே...' - அம்மா தன் நாத்தனாரிடம் கேட்ட ஆதங்க உரை சுந்தரிக்கு நினைவிருக்கிறது.

தேடாமலே முதல் வரனாகக் கேதார் கிடைக்கவில்லையா? தாம்பத்யத்தின் மகிழ்ச்சியைத் தோலின் நிறமா நிர்ணயிக்கிறது?

புரிந்து கொள்ள வேண்டும். அதுவல்லவா முக்கியம்! ஊஹூம், அது கூட இல்லை. புரிந்து கொள்ளும் முயற்சி இருந்தாலே போதாதோ? அதுதான், அவ்வளவுதான் தேவை ஒரு திருமணத்தின் வெற்றிக்கு... கேதாரைத் தானும் தன்னை அவரும் புரிந்து கொண்டதுபோல்:

தெளிவுரை, பொழிப்புரை, பதம் பிரித்தல், என்று கூறுபோடாத முழுமையான உயிர்க் கவிதையாக வாழ்க்கை! அதை அப்படியே பிதுரார்ஜித சொத்து போல் மகனுக்கு எழுதி வைக்க முடிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?

மாறாக, திட்டமிட்டுக் கல்யாணம் செய்யும்

பொறுப்பு ஏற்பட்டிருக்கிறது – கோனார் நோட்ஸை வைத்துக் கொண்டு கவிதையை உருவாக்குவது போல.

கார்த்திக் படித்தவன். எம்.பி.ஏ.! நிறைய படித்துக் கொண்டிருப்பவன் – ஆங்கிலத்திலும் தமிழிலும். மாதந்தோறும் கணிசமான தொகைக்குப் புத்தகங்கள் வாங்குகிறான். அழகு சாதனங்களுக்காக மட்டுமே ஷாப்பிங் போகிற பெண்ணாக இருந்தால் சரிப்படாது.

கிடைப்பாளா...? 'ஐந்தடி மூன்றங்குலம், புத்தக ஆர்வம் உள்ள, இருபத்து நான்கு வயது, படித்த பெண்...'

மணமகன் தேவை பகுதியில் இதுவரை யாருமே புத்தக ஆர்வத்தைக் குறிப்பிட்டு மாப்பிள்ளை கேட்டதாகத் தெரியவில்லை. அழகு, உயரம், படிப்பு குறிப்பிட்டு அமெரிக்கா மாப்பிள்ளைக்கு முதலிடம் என்கிறார்கள்.

மாய்ந்து மாய்ந்து மணமகளின் அழகையும் பதவிசையும் வர்ணிப்போர் கூட கூந்தலின் நீளத்தைக் குறித்து மூச்சுவிடுவதில்லை!

காதோடு வெட்டிய ஆண்பிள்ளைத்தனமான சிகை அலங்காரம் ஒத்துவராது. தோளளவாவது இருந்தால்தான் தேவலாம். விரித்து விடவோ, வெறுமே கட்டி வைக்கவோ அல்லது பின்னித் தொங்க விட்டுக் கொள்ளவோ சௌகரியம்.

சுந்தரி தன் தலைப் பின்னலைத் தொட்டுப் பார்த்துக் கொண்டாள்.

“ஆமாம் ஜானு! அவனைக் கேட்டுட்டேன். பொறுப்பை எங்கிட்டேயே விட்டுட்டானா, அதான் நாலு பேர் காதுல போட்டு வைச்சா நல்ல பொண்ணா கிடைக்குமேன்னு சொன்னேன்.”

“வயசு இருபத்து நாலு. இருபத்தஞ்சு இருக்கலாம். இதே ஊரா இருந்தா நல்லது தானே – இல்லாவிட்டாலும் பரவாயில்லே...”

“இதுக்காகத் தேடிண்டு போக வேண்டாம் மாமா. கண்ணுல, காதுல பட்டாச் சொல்லுங்கோ...”

– விதவிதமாகத் தேடலில் இறங்கினாள் சுந்தரி.

கேட்டவர்களும் தங்கள் வீட்டுப் பிள்ளைக்கே கல்யாணமென்பது போல் மகிழ்ந்தார்கள். 'அவசியம் சொல்றேன்' 'அவனுக்கென்ன! ராஜா மாதிரி இருக்கான்', 'காத்திண்டிருப்பா பொண்ணு கொடுக்க...',

– விடைகள் கிடைத்த வேகத்தில் மருமகள் வரவில்லை. ஆனால் கற்பனைகளின் சுகம் நீடித்து வருடியது.

பக்கத்துத் தெரு பாகீரதியைப் போல் தான்

சட்டாம்பிள்ளை மாமியாராயிருக்கலாகாது.

மருமகள் ஒரு சிநேகிதி - முதலில் மகனுக்கு. அடுத்த இடம்தான் தனக்கு. அதுவும் அவள் விழைந்தால்தான். இல்லாவிட்டால் ஒதுங்கி வாழத் தெரியாதா என்ன... ஆனால் கார்த்திக் ஒதுங்க விட மாட்டான். மனசறிந்து இதமாகப் பேசுபவன். நண்பர்களுடன் மூன்று முறை சினிமா பார்த்தால் ஒருமுறை அம்மாவோடு கச்சேரிக்குப் போவது என்று விரதமாகவே கடைப்பிடிப்பவன். அவனைத் தெரியாதா...? அப்பாவின் அச்சில் வார்க்கப்பட்ட இளைய படிவம். அவனுக்குப் பிடித்த மாதிரி பெண் தேடுவதைக் காட்டிலும் என்ன மகிழ்ச்சி இருக்க முடியும்?

தேடுதல் மும்முரத்திலும் கனவு சௌக்கியத்திலும் கேதாரின் நினைவுகள் கூட மங்கியிருந்தன. நினைவுச் சாரலின் ஈரத்தை உணர்ந்து எட்டு நாட்களாகி விட்டன என்பதைக் கணக்கிட்ட போது கொஞ்சம் குற்ற



"கண் தெரியாதவன் போல நடிச்சு பிச்சை எடுக்கறியே! வெட்கமா இல்லே!"

"நீங்க ஏமாந்து பிச்சை போட வேண்டாம் சார். என் நடிப்பைப் பாராட்டி சன்மானம் குடுங்க. அது போதும்."

– பர்வதவர்த்தினி

உணர்வு கூட வந்தது. சுந்தரி தனக்குள் சிரித்துக் கொண்டாள்.

'எல்லாம் உங்க பிள்ளையோட கைங்கர்யம். அவனைப் பொருத்தமான ஒருத்தியிடம் ஒப்படைத்தால் அதோடு ஆயிற்று வேலை...!' - சமாதானம் தனக்கா கேதாருக்கா? தெரியவில்லை!

கூடவே கவலையும் வருகிறது.

ஜாதகப் பொருத்தம் ஜோதிடர் கையிலிருக்கிறது. இதர பொருத்தங்களின் ஒட்டு மொத்த பொறுப்பும் உன்னுடையது என்னும் போது மிரட்சி ஏற்படுகிறது. சண்டி மாடாகச் சீண்டும் பயத்தை விரட்டி விரட்டித் தள்ளினாள் சுந்தரி.

ஐந்தடி மூன்றங்குலம், தோள் தொடும் கூந்தல், கையில் புத்தகம், உடையில் அளவான நவீனம், இல்லப் பொறுப்புகளிலும் ஆர்வம், மணக்கும் சமையல், மனம் கவரும் மெல்லுணர்வுகள், சராசரியைக் காட்டிலும் சற்றே உயர்த்தி - ஆனால் மிரட்டும் புத்திசாலித்தனமெல்லாம் இல்லாமல், தரையில் கால் பாவியவளாக... தன்னை மாதிரி!

'எத்தனை கர்வம் உனக்கு?' - அந்தராத்மா விழிப்புடன் குட்டியது. 'எப்படித் தெரியும் உன் தேர்வுதான் உகந்ததென்று?'

'ஏன் தெரியாது? இருபத்தெட்டு வருஷமாகப் பழக்கம் - தாயாய் பிள்ளையாய் வளர்த்த கதையெல்லாம் இருக்கட்டும். இப்போதும் கூட, சரியாக முப்பது நாட்களுக்கொரு முறை அவன் டூத் பிரஷ்ஷை மாற்றியாக வேண்டும். குளித்துவிட்டு வரும்போது கால் ஸ்பூன் சர்க்கரையுடன் அரை கோப்பை தேநீர் தயாராய் இருக்க வேண்டும். ரொம்ப தவிர்க்க முடியாது போனாலன்றி, மாலை அவன் வீடு திரும்பும் போது காத்திருக்க வேண்டும். வருஷத்தில் ஆறு சட்டை வாங்கினால் அதில் இரண்டேனும் நீல நிறத்தில் இருக்க வேண்டும். ஞாயிறு காலை பாரதியார் பாட்டு - பாம்பே ஜெயஸ்ரீ அல்லது ராஜகுமார் பாரதி - கட்டாயம் கேட்க வேண்டும். கேட்ட பின் சிடி பிளேயரை ஆஃப் செய்து, அதற்குரிய துணியால் மூடியாக வேண்டும். எல்லாவற்றிலும் கச்சிதம் கலந்த எளிமை. அவ்வளவுதானே அவன் எதிர்பார்ப்பது! உணவில் கூடத்தான் - ஒரு வற்றல் குழம்பு இருந்தால் போதும் அவனுக்கு. கூட்ட அப்பளமும் ஒரே ஒரு கறியும். அவ்வளவுதான்!

வற்றல் குழம்பு வைக்கத் தெரிந்த பெண் கிடைக்காமலா போய் விடுவாள். ஒரு மாதம் - ஒரே மாதம் - பேசிப் பேசி எடுத்துச் சொல்லி அவளை இடத்தில் பொருத்தி விடலாம்.

**ஊ**ற்றுச் சுனையாகக் கொப்பளித்த நம்பிக்கையில் அன்றைக்கு வற்றல்குழம்பு மிக நன்றாகவே அமைந்தது. குழம்பிலிருந்து அளவாகப் பிரிந்து வந்த எண்ணெய் பளபளவென்று அதன் மேலே மிதந்து நின்றது. வெங்காயமும் வடகமும் கரைந்து கூழாகாமல் பக்குவமாக இருந்தன.

தண்ணீரை தம்ளரில் ஊற்றி, சுடச்சுட இருந்த சாதத்தில் ஒரு ஸ்பூன் நெய்யும் ஒரு ஸ்பூன் நல்லெண்ணெய்யும் வார்த்தாள் சுந்தரி.

குழம்பை இலேசாகக் கலக்கி ஒரு கரண்டி எடுத்துப் பரிமாறப் போனபோது அகன்ற கைகளை நீட்டி மறித்தான் கார்த்திகேயன்.

"வர வர வற்றல் குழம்பே பிடிக்கறதில்லை. வேற ஏதாவது இருக்கா?" என்றான். ○

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2000

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!

**முதல் பரிசு** – ரூ. 5000
**இரண்டாம் பரிசு** – ரூ. 3000
**மூன்றாம் பரிசு** – ரூ. 2000



தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2000'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15.**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 6 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

**— ஆசிரியர்**

'இண்டியாஸ் மோஸ்ட் வாண்டட்' டி.வி. சீரியலை எடுத்து, நிறைய கொலைகாரர்களைப் பிடித்துக் கொடுத்துக்கொண்டிருந்த இலியாஸ், தம் மனைவியைக் கொன்றதாகக் கைது செய்யப்பட்டு, தாமே அந்த ஸீரியலின் அடுத்த கதாநாயகன் ஆனாரே...

அதுபோல, சினிமாக்களைத் தயாரித்துக் கொண்டிருந்தவர்கள் குடும்பத்திலேயே, தற்சமயம், 'ஃபிலிம்' ஓடுகிறது!

பாலிவுட்டின் பிரபல 'ஆனந்த்' குடும்பத்தில், விஜய் ஆனந்த், தேவ் ஆனந்த், கேதன் ஆனந்த், விவேக் ஆனந்த் என்று எல்லோர் பெயரிலும் கொட்டிக் கிடக்கும் ஆனந்தம், இன்று, இவர்கள் மனசில் தம்மாத் தூண்டு கூட ஒட்டிக் கிடக்கவில்லை! காரணம், இவர்களது குடும்பத்தில் நிகழ்ந்த ஒரு கொலை!

மறைந்த தயாரிப்பாளர் கம் இயக்குனர் சேதன் ஆனந்தின் (விஜய், தேவ் ஆகியோரின் சகோதரர்) பிள்ளைகள், கேதன் ஆனந்தும் விவேக் ஆனந்தும், ஜீஹுவிலுள்ள 'ருயா பார்க்' பங்களாவில் வசித்து வந்தனர். சென்ற மாத இறுதியில் ஒருநாள் இரவு, இந்த பங்களாவின் முதல் மாடிக் கழிவறையில், ப்ரியா ராஜ்வன்ஷ் (57) என்ற நடிகை பிணமாகியிருந்தார். மாலா செளத்ரி என்ற பணிப்பெண் தான் முதலில் உடலைக் கண்டு ஓலமிட்டவள், "நான் பால் வாங்க மார்க்கெட்டுக்குப் போய் வந்து திரும்பினால்... இப்படி ஒரு பயங்கரம்" என்பதாக அவள் வாக்குமூலம் அமைந்தது.

போலீஸ் பிடியில்...

"ஒரு பார்ட்டிக்கு செல்லத் தயாராயிருந்தோம். ப்ரியாவுக்கென்று வெயிட் பண்ணிக்கொண்டிருந்தோம்..." எனப் புலம்பினார் கீழேயிருந்த கேதன் ஆனந்த். இது 'தற்கொலை' என்று முதலில் முடிவாகியது- ப்ரியா தனிமையில் வாடினார் என்ற காரணத்தால்.

ப்ரியாவுக்குச் சொந்தமான வீடு, ஜீஹுவில் "ஐரிஷ் பார்க்"கில் இருக்க, இங்கே வந்து மரிக்க வேண்டிய அவசியமென்ன? இரவு எட்டு மணிக்கு மேல் பால் வாங்க, யார் மார்க்கெட்டுக்குப் போவார்கள்? – இந்தக் கேள்விகளுக்குச் சரியான விடை கிடைக்காததால், போலீசாருக்குச் சந்தேகம் ஏற்பட, மாலாவைத் துருவிக் கொண்டிருந்தார்கள். இடையில், போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்டில், கழுத்து நெறிக்கப்பட்டதால் மரணம் சம்பவித்ததாகத் தெரியவந்து, க்ரைம் பிராஞ்ச் உஷாரானது.

இரண்டாவது போஸ்ட் மார்ட்டம் மூலம் இது கொலை என்பது ஊர்ஜிதமாக, மாலா உலுக்கப்பட்டதில், அவள் 'உண்மையைக்' கக்கி விட்டாள். கேதனும் விவேக்கும்தான், ப்ரியாவைத் தீர்த்துக் கட்ட மாலாவையும், அவள் தூரத்து உறவினரான அசோக் ஸ்வாமியையும் – (அரவிந்த் ஸ்வாமியைப் போல் ஸ்டைலாக பெயர் வைத்திருப்பதில் குறைச்சலில்லை) – தூண்டிவிட்டு, ரூ 4000 கொடுத்ததாக (ச்சே... அவ்வளவு சீப்பா?) உளறிவிட்டாள்.


• ப்ரியா ராஜ்வன்ஷ்

அசோக் முதலில், சேலத்திலிருந்து ஏதோ

விஷ மூலிகைச் செடியைக் கொண்டு வந்து கொடுத்திருக்கிறான். அதை அரைத்து, கஷாயம் எடுத்து, வயிற்றுவலி மருந்து என 'ப்ரியா'வுக்குப் புகட்டி, ஒரேயடியாக ஓயவைப்பதுதான் முதல் திட்டம். அது கை வராமல், (வயிற்றுவலி வராமல்?) போகவே, ப்ரியா பாத்ரூமிற்குள் சென்றதும், பின்னாடியே நுழைந்த மாலாவும் அசோக்கும், அவள் தலையில் ஒரு போடு போட்டு, துப்பட்டாவால் அவள் கழுத்தை நெருக்கிக் கொன்றிருக்கிறார்கள்.

ப்ரியா யார்? அவளைக் கேதனும் விவேக்கும் எதற்காகக் கொல்ல வேண்டும் என நினைக்கத் தோன்றுகிறதல்லவா? அங்கேதான் இவர்களின் ரீல் கதையைக் காட்டிலும், சுவாரஸ்யமாகப் போகிறது ரியல் கதை!

இவர்களுடைய அப்பா சேதன் ஆனந்த், அந்தக் காலத்தில் "ஹகீகத்" என்றொரு படம் எடுத்தார். அதில் கதாநாயகியாக நடித்த ப்ரியா, அந்த ஒரே படத்துடன் சினிமாவுக்கு முழுக்குப் போட்டு விட்டு, சேதனின் வாழ்க்கைக் கதாநாயகி ஆகிவிட்டார். முதல் மனைவியைப் பிரிந்து வாழ்ந்த சேதன், ப்ரியாவைப் பிரியாமல் வாழ்ந்தாலும், கடைசி வரையில் அவரைத் திருமணம் செய்து கொள்ளவே இல்லை. ஆனால் 10 கோடிகள் பெறுமான மூன்ன ரூயாபார்க் பங்களாவை, ப்ரியாவுக்கும், தம் இரு மகள்களுக்கும் உயிலில் சமமாக எழுதி வைத்துவிட்டார்.

ப்ரியாவுக்கும், சேதனின் இரண்டு மகன்களுக்கும் போக்குவரத்து இருந்து வந்திருக்கிறது. தினமும் இங்கே டின்னருக்கும் லன்ஞ்சுக்கும் வருவாராம் ப்ரியா. நடுவில், அவர் டீவிக்காக எடுக்க நினைத்த ஸீரியலுக்குப் பணம் தேவைப்படவே, தம் பங்கைக் கொடுக்குமாறு கேட்டிருக்கிறார்; அவ்வளவுதான்.. கதை முடிந்து விட்டது!

# கலைக் குடும்பத்தில் ஒரு கொலை!

மாலா, அசோக்குடன் கேதன், விவேக் இருவருமே கைது செய்யப்பட்டு லாக்கப்பில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். பெயில் நிராகரிக்கப்பட்டுள்ளது. ஆனால் வீட்டுச் சாப்பாட்டுக்கு அனுமதியுண்டு!

அவர்கள் தரப்பு வக்கீல், மானஷிண்டே, "இந்த பங்களா இவர்களுக்குச் சொந்தமானதே இல்லை. இதன் உரிமையாளர் மித்தல்" என்று ஒரு குண்டை அனாயாசமாக வீசி விட்டு, 'இதில் மூவருக்கும் பங்குண்டு என்பதே பேத்தல்; இதற்கென ஒரு கொலை என்பது கட்டுக் கதை" என்கிறார் கூலாக!

விஜய் ஆனந்தோ, "ப்ரியாதான் பங்களாவை உடனடியாக விற்க வேண்டும் என அடம்பிடித்தார்; 'மார்க்கெட் டல்' என்பதால் கேதனும், விவேக்கும் அதை ஒத்திப் போட்டிருக்கிறார்கள். கேதனுக்கு செம்பூரிலும், விவேக்கிற்கு யாரி ரோட்டிலும் சொந்த வீடுகள் இருக்கின்றன; கேதனின் மனைவி இறந்து விட்டார். விவேக்கின் மனைவி அவரைப் பிரிந்து சிம்லாவில் வாழ்கிறார். (குடும்பத்துக்கே மனைவி ராசி இல்லையோ?) இந்த வீட்டை விற்பதால் உண்மையில் யார் லாபமடையப் போகிறார்கள் என நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள்' என்கிறார் சூசகமாக. 'எங்கள் குடும்பத்துக்கு அவப்பெயர் உண்டாக்கவே இப்படிச் செய்திருக்கிறார்கள்' எனப் புலம்புகிறார்.

கொலையுண்ட அன்று மதியம் மூன்று மணிக்கு, தம் ஃப்ளாட்டில் யாருடனோ ப்ரியா சண்டை போட்டாராம்; அன்று ஒரு ஸ்க்ரிப்ட் ரைட்டரையும் சந்தித்தாராம். இவர்கள் என்ன சொல்வார்களோ...? உண்மை வெளிவர நாளாகலாம்; அதற்குள் இந்தக் கதையே சினிமாவாகலாம்; தேவ் ஆனந்த் தாமே ஹீரோவாக நடிக்காத பட்சத்தில், படம் வெற்றியும் பெறலாம்!

— ஜெ.ஆர்.

# அழகாபுத்தூர்

சோழ நாட்டுத் திருத்தலங்கள் ஒவ்வொன்றிலும் நாம் தேடினால் ஒரு அரிய விஷயத்தைக் காண முடியும். கோவிலின் அமைப்பில் ஒரு சிறப்பு இருக்கும். அல்லது நவக்ரகங்களின் அமைப்பில் ஒரு விசேஷம் இருக்கும். ஸ்ரீ வாஞ்சியத்தில் ராகு கேது இரண்டும் பிணைந்திருப்பது போல சிற்பம் காணப்படுகிறது. குடந்தை சாரங்கபாணி கோவிலின் பிராகாரத்தில் நான்கு விதமான தோற்றங்களில் நரசிம்ம மூர்த்தி காட்சி தருகிறார். குடந்தை சக்கரபாணி கோவிலிலோ வில்வம், துளசி குங்குமம் மூன்றுமே அர்ச்சனை செய்யப்படுகிறது. திருஆரூர்க் கோவிலுக்குள்ளே எத்தனை கோவில்கள்! எத்தனை வரலாறுகள். எத்தனை தலபுராணக் கதைகள்! ஒவ்வொரு கோவிலிலும் ஆடல் வல்லானான நடராஜர் வடிவம் ஒவ்வொரு விதமாக இருக்கிறது. எண்டோள் வீசி நின்றாடும் நல்லூர் நடராஜா ஜகத் பிரசித்தம் திருநாகேச்வரத்தில் தேவியர் மூவரையும் ஒன்றாகத் தரிசிக்கிறோம். கங்கை கொண்ட சோழபுரத்து ஞான ஸரஸ்வதி, சண்டேச அனுக்ரஹ மூர்த்தி இவைகளுக்கு இணையான கலைச்செல்வங்களைக் காண முடியாது என்று அறிஞர்கள் சொல்கிறார்கள். ஒரு கோவிலில் மதில் அழகு, இன்னொரு கோவிலில் பலகணி அழகு, இன்னொரு கோவிலில் கொடுங்கை அழகு, திருவிடைமருதூரில் சந்நிதியில் உள்ள பாவை விளக்கைப் பார்த்தால் பிரமித்துப் போவோம். காதில் மட்டும் ஏழு நகைகள் அணிந்திருக்கிறாள் இந்த எழிலரசி!

எங்குமில்லாத சிறப்பு வாய்ந்தக் கோவில் ஒன்றை நாம் இன்று காணப் போகிறோம்.

குடந்தையிலிருந்து ஆறு கிலோமீட்டர் தூரத்தில் உள்ள ஒரு அழகான அமைதியான கிராமம். அழகாபுத்தூர் என்றே பெயர்! மூவரும் பாடிய அருமையான தலம். அரிசிலாற்றங் கரையில் உள்ள கிராம மாகையால் அரி சிற்கரை என்று முன் காலத்தில் பெயர் வழங்கியிருக்கிறது. இந்த ஊரை அழகார்



• பட்டதாரி குருக்கள்

புத்தூராகப் பெயர் மாற்றம் செய்தவர் சுந்தர மூர்த்தி நாயனார். (ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பெயர் மாற்றங்கள் நடந்திருக்கின் றன)

"அலைக்கும் புனல் சேர் அரிசில்
தென்கரை
அழகார் திருப்புத்தூர்
அழகன் நீரே"

# திருமால் முருகன்!



• தக்ஷிணாமூர்த்தி

என்று இந்த ஊரில் குடி கொண்டிருக்கும் ஸ்வர்ணபுரீச்வரரைப் பாடியிருக்கிறார்.



• முருகன் கோவில்

இவரை அழகியர் என்றே அழைக்கிறார்கள். படிக்காசுநாதர் என்று இவருக்குப் பெயர் வந்த விவரம் பெரியபுராணத்தில் இருக்கிறது.

தேவியின் பெயர் அழகாம்பிகை. தீர்த்தம் அரிசிலாறுதான். அழகு மயமான கோவில் இது.

கோபுர வாசல் வழியாக உள்ளே வரும் போது வலது பக்கம் கணபதி வீற்றிருக்கிறார். பழமையான கோவில் என்பது பார்த்த உடனேயே தெரிகிறது. வெட்ட வெளியான பெரிய திருச்சுற்று. துவஜஸ் தம்பம் நந்தி எல்லாம் வெயிலு கந்தவர்களாக விளங்குகிறார்கள். விநாயகரை வணங்கி விட்டு இடதுபக்கம் உள்ள முருகப் பெருமான் கோவிலை அடைகிறோம். என்ன இது? இவர் மாலா அல்லது மருகனா? மயில் வாகனத்தின் மீது பன்னிரண்டு கரங்களுடன் வீற்றிருக்கும் கார்த்திகேயன் சங்கு சக்கரதாரியாய் விளங்குகிறாரே! சற்று கவனித்துப் பார்க்கிறோம். இந்திர மயில் மீது வள்ளி தேவசேனை சகிதம் வீற்றிருப்பவர் முரு

ஆனந்தி

கப் பெருமான்தான். மாமனார் மாப்பிள்ளையைத் தாங்கும் சம்பிரதாயம் இந்திரனால் தொடங்கி வைக்கப்பட்டிருக்கிறது! ஆனால் எப்படிப்பட்ட மருகன்! முதுகில் தாங்கக் கூடிய பெருமையுள்ளவன்தான்.

'முருகன் சிவபெருமானுடைய நெற்றிப் பொறியிலிருந்து தோன்றியவர். அதனால் சிவ ஸ்வரூபமாகவே கருதலாம். ஹர ஸ்வரூபி என்பதில் சந்தேகமில்லை. ப்ரணவ மந்திரத்தின் உட்பொருளை அறியாத பிரும்மதேவனைச் சிறையில் அடைத்து விட்டுத் தாமே சிருஷ்டித் தொழிலைச் செய்தார் பாலசுப்ரமணியர். அதனால் அவரை பிரும்மதேவராகவும் கருத இடமுண்டு.' ஆனால் மகாவிஷ்ணுவாக முருகப் பெருமானைக் குறிப்பிட்டுச் சொல்லியிருக்கும் கதையோ அல்லது ஏதாவது ஒரு சான்றோ இருக்கிறதா? தேட வேண்டியிருந்தது.

எந்த ஐயமானாலும் அதற்கு முத்துஸ்வாமி தீக்ஷிதர் விளக்கம் சொன்னால் ஏற்றுக் கொண்டு விடலாம். அவருடைய கிர்த்தனங்களில் சோதிட சாத்திரத்திலிருந்து அபூர்வமான சிலாரூபங்கள் வரை எத்தனையோ விஷயங்கள் கிடைக்கின்றன.

சாமா ராகத்தில்

"குருகுஹாய பக்தானுக்ரஹாய
குமாராய நமோ நமஸ்தே"

என்ற கிர்த்தனை சற்று அபூர்வமாகவே பாடப்படுகிறது. சமீபத்தில் ஒரு கச்சேரியில் விஜய் சிவா இதைப் பாடக் கேட்டேன். முருகப் பெருமானை திருமாலின் வடிவமாகச் சொல்லப்பட்டிருக்கிறதா என்ற கேள்விக்கு இந்தப் பாடலில் விளக்கம் கிடைத்தது.

**ஹரி ஹர விரிஞ்சி ரூபாய**
*சச்சிதானந்த ஸ்வரூபாய சிவாய*

என்று இரண்டு காலங்களில் அவர் பாடியபோது பாட்டின் இனிமையால் மகிழ்ச்சியா, விடை கிடைத்த மகிழ்ச்சியா என்று புரியாமல் சங்கும் சக்கரமும் ஏந்தி மயில் மீது வீற்றிருக்கும் முருகப் பெருமானை மனக் கண்ணால் கண்டேன்.

முருகன் ஹரியின் ரூபமுடையவர், ஹரனின் ரூபம் உடையவர், விரிஞ்சி (ப்ரும்ம) ஸ்வரூபமானவர் என்று தீக்ஷிதரே சொல்லி விட்டார்!

ஸகல ஆகம மந்திரங்களின் ஸாரமாக



• மேல் இரு கரங்களில் சங்கு சக்கரம்

இருப்பவனும், நல்ல வழிமுறைகளுக்குக் காரணமாக இருப்பவனும், ஸர்வக்ஞனும், குணங்களுக்கு அப்பாற்பட்டவனும், ரூபங்கள் இல்லாதவனும் ஆன இந்த குமாரக் கடவுளை ரூபலாவண்யனாகத் தரிசிக்கும் பேறு அழகாபுத்தூரில் கிடைத்தது.

விஷ்ணு தர்மோத்தரம் போன்ற சாஸ்திர நூல்களில் முருகனை சங்க சக்ர தரனாக வருணித்திருக்கிறதோ என்னமோ எனக்குத் தெரியாது. தீக்ஷிதர் சொல்லியிருப்பதே பிரமாணம்தான்.

அழகாபுத்தூர் குமரக்கடவுள் ரொம்ப வரப்ரஸாதி. கிருத்திகை மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. கன்னிப் பெண்கள் நல்ல கணவனை அடைய வேண்டுமென்று பால் பாயசம் செய்து வேண்டிக் கொள்கிறார்கள். சீக்கிரத்தில் திருமணம் நிச்சயமாகிறது.

முருகனைப் பார்த்து வியந்து கொண்டிருக்கும்போது ஓர் இளம் பெண்ணும் பெற்றோரும் வந்தார்கள். அந்தக் குமரியின் பெயரால் அர்ச்சனை செய்தார்கள். குருக்கள் பிரஸாதங்களை எடுத்துக் கொண்டு வந்து தட்டை அவர்களிடம் கொடுத்துவிட்டு முருகனுக்குச் சாத்திய மாலையை என் கையில் கொடுத்து அந்தப் பெண்ணுக்கு அணிவிக்கச் சொன்

னார். அவருடைய சமயோசிதம் எனக்குத் திருப்தியாக இருந்தது. அந்தக் குமரி தனக்கு மணமாலையே கிடைத்துவிட்டது போல, முகம் சிவந்து புன்னகையுடன் நின்றது இன்னும் நினைவிருக்கிறது.

இந்த முருகன் "பக்தானுக்ரஹன்தான்" சந்தேகமில்லை.

முருகன் வடிவில் லயித்து விட்டோம். அழகம்மையையும், அழகியரையும் தரிசிக்கலாம். படிக்காசுநாதர் என்று இவருக்குப் பெயர் வந்தக் காரணத்தைப் பார்க்கலாம்.



• வள்ளி தெய்வானையுடன்

அறுபத்து மூவரில் ஒருவர், 'புகழ்த் துணை நாயனார். சிவத் தொண்டைத் தவிர வேறு எதுவும் செய்தறியாதவர்.

ஒரு சமயம் வானம் பொய்த்துக் காவேரியில் நீர் வற்றிப் பஞ்சம் ஏற்பட்டது. பகவானுக்கு எப்படியோ ஒரு குடம் தண்ணீர் கொண்டு வந்து அபிஷேகம் செய்து கொண்டிருந்தார் இந்தச் சிவனடியார். உணவே கிடையாது. பல நாட்கள் பட்டினி இருந்தாலும் தன் கைங்கரியத்தைச் செய்து வந்தார். ஒருநாள் ஊற்றெடுத்துத் தண்ணீர் மொண்டு தள்ளாடிக்கொண்டே வந்தார். குடத்தை சிவலிங்கத்தின் மீது தூக்கிப் பிடிக்கக் கூடக் கைகளில் சக்தியில்லை. 'இப்படிச் சோதிக்கிறீரே' என்று நினைத்துக் கொண்டே கலசத்தைத் தூக்கித் தண்ணீரைச் சிவலிங்கத்தின் மீது சாய்த்தார். அவரும் மயங்கிச் சாய்ந்து விட்டார். குடம் சிவலிங்கத்தின் மீது விழுந்து விட்டது. அன்று குடம் பட்ட தழும்பு இன்னும் படிக்காசு நாதர் திருமுடியில் இருப்பதாகக் கூறுகிறார்கள்.

மயங்கி விழுந்த நாயனாரின் கனவில் பகவான் தோன்றினார். "இனிமேல் தினமும் ஒரு பொற்காசு இங்கே வைக்கிறேன். அடியார்களுக்கு அன்னமிடு" என்று சொல்லி மறைந்தார். கண் விழித்த நாயனார் எதிரில் ஒரு பொற்காசு இருந்தது. அது முதல் தினமும் காசு கிடைத்தது. புகழ்த்துணை நாயனார் வறுமை நீங்கி வறியோருக்கு அன்னமிட்டுப் புகழே துணையாக வாழ்ந்து இங்கேயே முக்தியடைந்தார்.

"உண்மையானந்த முனிவர்" பூஜித்த தலம் இது என்று உ.வே.சா.வின் திருத்தலங்கள் வரலாறு நூலில் காணப்படுகிறது.

கோவில் குருக்கள் கார்த்திகேயன், பட்டதாரி இளைஞர். அர்ச்சனைத் தட்டை வாங்கிக் கொள்ளும்போது நமது மனம் நிறைவு அடையும்படி நிறைவாக ஸங்கல்பம் செய்கிறார். கேட்கும்போதே நமக்கு ஸகல ஸௌபாக்கியங்களும் கிடைத்துவிட்டது போல் தோன்றுகிறது. தங்கக் காசு தினமும் கொடுத்த ஈசனாயிற்றே. ஸ்வர்ண புரீச்வரர் என்ற பெயர் தாங்குகிறவராயிற்றே. நமக்கு இகத்திலும் குறை இல்லை. பரத்திலும் குறை வைக்க மாட்டார். படிக்காசு நாதரையும் அழகாம்பிகையையும் தரிசித்து திரிமூர்த்திகளாகவும் விளங்கு இன்ற முருகப் பெருமானையும் தரிசித்து விட்டால் செல்வங்கள் யாவும் பெருகும் என்பதில் சந்தேகமில்லை.

கார்த்திகேய குருக்கள், கோவிலுக்குக் கும்பாபிஷேகம் செய்துவிட துடிப்பாய் இருக்கிறார். படிக்காசு வாங்கிய பிரானுக்குக் காசு வந்து குவியாதா என்ன!

படங்கள்: ஸ்ரீஹரி

அருள்வழி காண! ஓம் நமசிவாய! திரு அருணாசலத்தை நாடு!

# தெய்வீகம் பொங்கும் திருவண்ணாமலையில் மாதாமாதம் பௌர்ணமி கிரிவலத்தில் அன்னதானம் செய்வோம் வாருங்கள்! ஸ்ரீ அருணாசலேஸ்வரரின் அருளைப் பெறுவோம் பாருங்கள்!

பேரன்புடையீர்! வணக்கம். தங்களின் எல்லா விருப்பங்களும் நிறைவேறவும், மங்களம் உண்டாகவும் ஸ்ரீ அருணாசலேஸ்வரரிடம் பிரார்த்தனை செய்கிறோம்.

- உலகத்திலேயே மிகப்பெரிய சுயம்பு சிவலிங்க மூர்த்தியாக விளங்குகின்ற திருவண்ணாமலையில் பௌர்ணமி அன்று சந்திர பகவான் பதினாறு கலைகளுடன் பரிபூரணமாகப் பிரகாசிக்கிறார். அந்த அபூர்வ சக்தி வாய்ந்த கிரணங்களைத் தங்களின் உடலில் ஏற்று கிரிவலம் வரும் நிறைய பக்தர்களுக்கும், பசித்தவர்களுக்கும் மேலும் அங்குள்ள ஆதரவற்ற முதியோர்கள், உடல் ஊனமுற்றோர்கள், கண்பார்வையற்றோர்கள் என அனைவருக்கும் பௌர்ணமி அன்று இரவு அன்னதானம் செய்யப்படுகிறது. இப்புனித திருப்பணியில் பங்குகொண்டு தாங்களும், தங்கள் சந்ததியினரும் எல்லாம்வல்ல ஸ்ரீ உண்ணாமுலை சமேத அண்ணாமலையாரின் அரும்பெரும் தெய்வீக அருளைப் பெற வேண்டுகிறோம்.

தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதை தெரிவித்தால் அதன்படி நாங்கள் அன்னதானம் செய்து பிரசாதத்துடன் ஸ்ரீ அருணாசலேஸ்வரர், ஸ்ரீ உண்ணாமுலையம்மன் படத்தையும் தங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

❖ பிறந்தநாள் ❖ திருமணநாள் ❖ முன்னோர்கள் திதி நாள் ❖ வாழ்க்கையில் உயர்வு ❖ தொழிலில் முன்னேற்றம் பெற ❖ நிரந்தர வேலை பெற ❖ புதிதாக தொழில் தொடங்க ❖ புதிதாக வீடு / மனை பெற ❖ கணவன் மனைவி வாழ்வில் சுகம் பெற ❖ கல்யாண பாக்கியம் பெற ❖ பிள்ளைகள் படிப்பில் நன்கு கவனம் செலுத்தி முன்னேற ❖ பிள்ளை பாக்கியம் பெற ❖ நோயிலிருந்து சுகம் பெற ❖ மன அமைதி பெற ❖ வாகன யோகம் பெற ❖ குடும்ப ஒற்றுமை பெற ❖ உலக ஒற்றுமை பெற ❖ சமுதாய ஒற்றுமை பெற ❖ தேச ஒற்றுமை பெற ❖ நல்ல சிந்தனை பெற ❖ சிந்தனை வளம் பெருக ❖ தெய்வசக்தியுடன் திகழ ❖ உடல் ஆரோக்கியம் பெற ❖ நீண்ட ஆயுள் பெற ❖ எல்லா உயிர்களும் இன்புற்று வாழவும்.

- திருவண்ணாமலையில் அன்னதானத்திற்குத் தங்களுடைய கருணைமிக்க நன்கொடைகளை அவரவர் சக்திக்கு ஏற்ப செலுத்தலாம். நன்கொடைகளை பொருளாக அனுப்ப விரும்புவோர் TVS/ ABT மூலமாக மயிலாப்பூர், சென்னை- 4 க்கு அனுப்பி வைத்து எங்களுக்கு தெரிவித்தால் நாங்கள் உடனே Delivery எடுத்துக் கொள்கிறோம்.

- தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
- ரூ.500/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அன்பளிப்பாக அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அன்பளிப்பாக அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.2000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் நான்கு ஆண்டுகளுக்கு அன்பளிப்பாக அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஆயுள் முழுவதும் அன்பளிப்பாக அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.2000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு காசியில் பூஜிக்கப்பட்ட ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும், ஸ்ரீ அருணாசலேஸ்வரரின் வண்ணப்படமும், சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று திருவண்ணாமலையில் அன்னதானம் செய்து வாழ்நாள் முழுவதும் (Life Long) பிரசாதமும் 'ஆன்மீகம்' மாத இதழும் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்பொழுது சந்ததியினர் முகவரிக்கும் மாற்றம் செய்து தொடர்ந்து பிரசாதம் மற்றும் 'ஆன்மீகம்' மாத இதழ் அன்பளிப்பாக அனுப்பி வைக்கப்படும். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெற வேண்டும் என்ற எண்ணத்துடன் புத்தாண்டு ஜனவரி முதல் ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத்கீதை (தமிழில்) அனுப்பி வைக்கப்படும்.

- நன்கொடை அனுப்புபவர்கள் (Aanmeeka Annadhana Charitable Trust Chennai - 4) என்ற பெயரில் Cheque/D.D/M.O. மூலம் அனுப்பி வைத்து அன்னதான திருப்பணிகளை நடத்தும் இறைபணி சேவைகளாக 'ஆன்மீக அன்னதான அறக்கட்டளை' ஆற்றிவர தங்களது ஒத்துழைப்பை என்றும் அன்புடன் வேண்டுகிறோம்.

நன்கொடைகளுக்கு வருமான வரிவிலக்கு உண்டு.



ஸ்ரீ அருணாசலேஸ்வரர்

Cheque / D.D / M .O அனுப்ப வேண்டிய முகவரி :

## ஆன்மீக அன்னதான அறக்கட்டளை

AANMEEGA ANNADHANA CHARITABLE TRUST (Regd.)

81, Nadu Street, ( Opp. Kapaleeswarar Koil ) Mylapore, Chennai - 600 004. Ph : 459006 / 455302



ஸ்ரீ உண்ணாமுலையம்மன்

ஒரு மஹானின் வயிற்றுக்கு இடும் நல் உணவு ஏழேழு தலைமுறைகளுக்கும் நல்வழி காட்டும்!



# பொன்னியின் செல்வன்

நாற்பத்து மூன்றாம் அத்தியாயம்

## "புலி எங்கே?"

ஆதித்த கரிகாலர் எப்பேர்ப்பட்ட ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டார் என்பதை வந்தியத்தேவன் கவனித்தான். கண்மூடித் திறக்கும் நேரத்தில் குதிரையைச் செலுத்திக் கொண்டு வந்து பன்றியின் மீது தன் கையிலிருந்த வேலைச் செலுத்தினான். வேல் பன்றியின் முதுகுத்தோலின் மீது மேலாகக் குத்தியது. பன்றி உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கிக் கொண்டு திரும்பியது. அந்த வேகத்தில் வந்தியத்தேவன் கையில் பிடித்திருந்த வேலின் பிடி நழுவி விட்டது. பன்றியின் முதுகில் இலேசாகச் சென்றிருந்த வேல் நழுவிக் கீழே விழுந்தது.

பன்றி இப்போது வந்தியத்தேவன் பக்கம் திரும்பி ஓடி வந்தது. அவன் தன் அபாயகரமான நிலையை உணர்ந்தான். பன்றியின் தாக்குதலுக்கு அவனுடைய குதிரையினால் ஈடுகொடுக்க முடியாது. கையில் வேலும் இல்லை. இளவரசரோ இன்னமும் குதிரையின் கீழிருந்து வெளிப்படுவதற்கு முயன்று கொண்டிருக்கிறார். தான் குதிரை மேலிருந்தபடி ஏதாவது ஒரு மரத்தின் மேல் தாவி ஏறிக் கொண்டால்தான் தப்பிப் பிழைக்கலாம். சீச்சீ! எத்தனையோ அபாயங்களுக்குத் தப்பி வந்து கடைசியில் கேவலம் ஒரு காட்டுப் பன்றியினாலேயா கொல்லப்பட வேண்டும்?....

நல்லவேளையாக, அருகாமையிலேயே தாழ்ந்து படர்ந்த மரம் ஒன்று இருந்தது. வந்தியத்தேவன் குதிரை

அமரர் கல்கி

மீதிருந்து பாய்ந்து மரத்தின் கிளை ஒன்றைத் தாவிப் பிடித்துக் கொண்டான். கால் முதல் தோள் வரையில் அவனுடைய பலத்தை முழுதும் பிரயோகித்து எழும்பிக் கிளை மீது ஏறிக் கொண்டான். அதே சமயத்தில் பன்றி அவனுடைய குதிரையை முட்டியது. குதிரை தட்டுத் தடுமாறி விழப் பார்த்துச் சமாளித்துக் கொண்டு அப்பால் ஓடியது.

கரிகாலர் இன்னமும் குதிரையின் அடியில் கிடந்தார். வந்தியத்தேவன் மரக்கிளை மீது இருந்தான். காட்டுப் பன்றி இருவருக்கும் நடுவில் நின்று இப்படியும் அப்படியும் திரும்பிப் பார்த்தது.

ரண்டு எதிரிகளில் யாரைத் தாக்கலாம் என்று அந்தக் காட்டுப் பன்றி யோசனை செய்கிறது என்பதை வந்தியத்தேவன் அறிந்தான். இளவரசர் இன்னும் குதிரைக்கு அடியிலிருந்து விடுவித்துக் கொண்டு வெளிவந்த பாடில்லை. வெளிவந்துவிட்ட போதிலும் பன்றியின் தாக்குதலை அவரால் அச்சமயம் சமாளிக்க முடியுமா என்பது சந்தேகந்தான். அவர் கையில் உடனே பிரயோகிக்கக்கூடிய ஆயுதம் இல்லை. வில்லை வளைத்து அம்பு விடவேண்டும். குதிரைக்கு அடியில் விழுந்து அகப்பட்டுக் கொண்டதில் அவருக்குப் பலமான காயம் பட்டிருந்தாலும் பட்டிருக்கலாம். எப்படியும் இளவரசருக்குச் சிறிது சாவகாசம் ஏற்படுத்திக் கொடுப்பது அவசியம். இவ்வளவையும் மின்னல் மின்னும் நேரத்தில் வந்தியத்தேவன் யோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்தான். தான் ஏறியிருந்த மரக்கிளையைப் பலமாக உலுக்கி ஆட்டிக் கொண்டே ''ஆகா ஊகூ'' என்று பெரிதாகச் சப்தமிட்டான்.

அவனுடைய யுக்தி பலித்தது. பன்றி மூர்க்காவேசத்துடன் அவன் ஏறியிருந்த மரத்தை நோக்கிப் பாய்ந்து வந்தது.

"வரட்டும்; வரட்டும். வந்து மரத்தின் பேரில் முட்டிக் கொள்ளட்டும்'' என்று வந்தியத்தேவன் எண்ணிக் கொண்டிருக்கும்போதே, அவன் ஏறி உட்கார்ந்து உலுக்கிய மரக்கிளை மடமடவென்று முறிந்தது. கடவுளே! இது என்ன ஆபத்து? – கிளையுடன் தரையில் விழுந்தால்? அடுத்த நிமிடமே பன்றியின் கோரப் பற்கள் அவனைச் சின்னாபின்னமாகக் கிழித்து விடும். வேறு கிளை ஒன்றைத் தாவிப் பிடித்துக் கொண்டால்தான் பிழைக்கலாம். அப்படித் தாவிப் பிடிக்க முயன்றான். பிடிக்க முயன்ற கிளை சற்றுத் தூரத்தில் இருந்தபடியால் ஒரு கை மட்டுந்தான் பிடித்தது. பிடித்த கிளை மெல்லியதாயிருந்தபடியால் வளைந்து கொடுத்தது. கைப்பிடி நழுவத் தொடங்கியது. கால்கள் ஊசலாடின! சரி! கீழே விழவேண்டியதுதான். உடனே மரணந்தான்! சந்தேகமில்லை. ஏதோ, கடைசி கடைசியாக ஆதித்த கரிகாலரைக் காப்பாற்ற முடிந்தது அல்லவா? இளையபிராட்டி இதை அறியும்போது மகிழ்ச்சி அடைவாள் அல்லவா? தன்னுடைய மரணத்துக்காக ஒரு துளி கண்ணீர் விடுவாள் அல்லவா?....

ஏதோ ஒரு பயங்கரமான சத்தம் கேட்டது! அதே சமயத்தில் கைப்பிடியும் நழுவி விட்டது! வந்தியத்தேவன் கண்களை இறுகமூடிக் கொண்டான். தடால் என்று கீழே விழுந்தான். விழும்போதே நினைவை இழந்தான்!

வந்தியத்தேவன் நினைவு வந்து கண் விழித்துப் பார்த்தபோது ஆதித்த கரிகாலர் அவன் முகத்தில் தண்ணீர் தெளித்துக் கொண்டிருப்பதைக் கண்டான். சட்டென்று நிமிர்ந்து எழுந்து உட்கார்ந்து, "இளவரசே! பிழைத்திருக்கிறீர்களா?'' என்றான்.

"ஆமாம்; உன்னுடைய தயவினால் இன்னும் பிழைத்திருக்கிறேன்'' என்றார் ஆதித்த கரிகாலர்.

"காட்டுப் பன்றி என்ன ஆயிற்று?'' என்று கேட்டான்.

"அதோ!'' என்று இளவரசர் சுட்டிக் காட்டிய இடத்தில், காட்டுப் பன்றி செத்துக் கிடந்தது.

வந்தியத்தேவன் அதைச் சற்று உற்றுப் பார்த்துவிட்டு, "அரசே! இவ்வளவு சின்ன உருவமுள்ள பிராணி என்ன

பாடுபடுத்தி விட்டது? கந்தமாறன் காட்டுப் பன்றியைக் குறித்துச் சொன்னது அவ்வளவும் உண்மைதான். கடைசியில் அதை எப்படித்தான் கொன்றீர்கள்?'' என்று கேட்டான்.

''நான் கொல்லவில்லை. உன்னுடைய வேலும் நீயுமாகச் சேர்ந்துதான் கொன்றீர்கள்!'' என்றார் இளவரசர்.

வந்தியத்தேவன் அதன் பொருள் விளங்காதவனைப் போல் இளவரசரின் முகத்தைப் பார்த்தான்.



"என்னுடைய வேலைத் தாங்கள் நன்றாக உபயோகப்படுத்தியிருக்கிறீர்கள்! ஆனால் நான் ஒன்றும் செய்யவில்லையே! ஆபத்தான சமயத்தில் தங்களுக்கு உதவி செய்ய முடியாதவனாகி விட்டேனே?'' என்றான்.

''நீ மரக் கிளையைப் பிடித்து உலுக்கிச் சப்தமிட்டாய் அல்லவா? அப்போது நான் குதிரை அடியிலிருந்து வெளிவந்து உன் வேலை எடுத்துக்கொண்டேன். என் மனத்தில் கொந்தளித்துக்கொண்டிருந்த கோபத்தையெல்லாம், பாவம், இந்தப் பன்றியின் பேரில் பிரயோகித்தேன். வேலினால் குத்தப்பட்டதும் அது பயங்கரமாகச் சப்தமிட்டது. என் காதே செவிடாகிவிடும் போலிருந்தது. ஆனால் வேலினால் மட்டும் அது சாகவில்லை. நீ மரக் கிளையிலிருந்து நழுவி அதன் பேரில் விழுந்தாய்; அந்த அதிர்ச்சியினால்தான் செத்தது!'' என்று கரிகாலர் சொல்லி விட்டுச் சிரித்தார். வந்தியத்தேவனும் அதை நினைத்து நினைத்துச் சிரித்தான். உடம்பைத் தடவிப் பார்த்துக்கொண்டு, ''பன்றியின் மேல் விழுந்ததினாலேதான், காயம் படாமல் தப்பினேன் போலிருக்கிறது. மகாவிஷ்ணு வராக அவதாரம் எடுத்து இரணியாட்சனைக் கொன்றார் என்பதை இனி என்னால் நம்ப முடியும்! அப்பா! எவ்வளவு மூர்க்கமான பிராணி?'' என்றான்.

"இந்தச் சிறு காட்டுப் பன்றியைப் பார்த்து விட்டு வராகாவதாரத்தை மதிப்பிடாதே, தம்பி! வடக்கே விந்திய மலையைச் சேர்ந்த காடுகளிலே தலையிலே ஒற்றைக் கொம்பு உள்ள பன்றி ஒன்று இருக்கிறதாம். ஏறக்குறைய யானை அவ்வளவு பெரிதாயிருக்குமாம். அந்த மாதிரி பன்றியாயிருந்து, நீ ஏறியிருந்த மரத்தை முட்டியிருந்தால், மரம் என்ன பாடுபட்டிருக்கும் என்று யோசித்துப் பார்!'' என்றார் இளவரசர்.

''மரம் அடியோடு முறிந்து விழுந்திருக்கும். தாங்கள் எறிந்த வேலும் முறிந்திருக்கும். நம் கதி அதோகதியாகியிருக்கும். சோழ குலத்தின் எதிரிகளுக்கு வேலை மிச்சமாகப் போயிருக்கும்'' என்றான் வந்தியத்தேவன்.

"தம்பி! உண்மையைச் சொல்லு! என் குதிரை தடுமாறி விழுந்தவுடனே நீ வேலை எறிந்தாயே? அந்தக் காட்டுப் பன்றியின் மேல் எறிந்தாயா? என்பேரில் எறிந்தாயா?'' என்று ஆதித்த கரிகாலர் கேட்டார்.

வந்தியத்தேவன் ஆத்திரத்துடன், ''ஐயா! உண்மையாகவே தாங்கள் இந்தக் கேள்வி கேட்கிறீர்களா? அப்படித் தாங்கள் சந்தேகப்

படுவதாயிருந்தால் பன்றியைக் கொன்று என்னைக் காப்பாற்றியிருக்க வேண்டிய அவசியம் இல்லையே?" என்றான்.

"ஆமாம், ஆமாம். உன் பேரில் சந்தேகப்படக்கூடாதுதான். நீ மரக் கிளையை ஆட்டிக்கொண்டு கூச்சல் போட்டிராவிட்டால் எனக்கே அந்தப் பன்றி யமனாக இருந்திருக்கும். ஆனாலும் நீ வேலை எறிந்தபோது ஒருகணம் எனக்கு அத்தகைய சந்தேகம் உண்டாயிற்று. இப்போதெல்லாம் எனக்கு எதைப் பார்த்தாலும், யாரைப் பார்த்தாலும் வீண் சந்தேகம் தோன்றுகிறது. யமன் என்னைத் தொடர்ந்து வந்து கொண்டேயிருக்கிறான் என்ற பிரமையைப் போக்கிக் கொள்ளவே முடியவில்லை. யமன் இந்தப் பன்றியின் உருவத்தில் என்னைக் கொல்ல வந்ததாகவும் எண்ணினேன்...."

"அப்படியானால் மிக நல்லதாய்ப் போயிற்று. அரசே! தங்களைத் தொடர்ந்து வந்த யமன் செத்து ஒழிந்தான். இனி என்ன கவலை? சுந்த மாறனோடு நாம் போட்டியிட்ட பந்தயத்திலும் ஜயித்து விட்டோம். பன்றியை இழுத்துக் கொண்டு போக வேண்டியதுதானே? புறப்படலாம் அல்லவா?" என்றான் வல்லவரையன்.

"புறப்பட வேண்டியதுதான்! ஆனால் அவசரம் என்ன? சற்று இங்கே தங்கிக் களைப்பு ஆறி விட்டுப் போகலாம்" என்றார் இளவரசர்.

"தாங்கள் களைப்படைந்ததாகச் சொல்வதை இப்போதுதான் முதன் முதலாகக் கேட்கிறேன். ஆம், குதிரையின் அடியில் சிக்கி ரொம்பக் கஷ்டப்பட்டுப் போயிருப்பீர்கள்."

"அது ஒன்றுமில்லை. உடலின் களைப்பைக் காட்டிலும் உள்ளத்தின் களைப்புத்தான் அதிகமாயிருக்கிறது. வந்த வழியாகவே அவ்வளவு தூரமும் காட்டு வழியில் திரும்பிப் போக வேண்டுமா? மறுபடியும் அந்த மூடர்களுடன் சேர்ந்தல்லவா பிரயாணம் செய்ய வேண்டி வரும்? அதைக் காட்டிலும் இந்த ஏரியைக் கடந்து போய் விட்டால் என்ன?"

"கடவுளே! இந்தச் சமுத்திரம் போன்ற ஏரியை நீந்திக் கடக்க வேண்டும் என்றா சொல்கிறீர்கள்? பன்றியிடமிருந்து என்னைத் தப்ப வைத்து ஏரியில் மூழ்கடித்துக் கொல்ல வேண்டும் என்று உத்தேசமா?" என்றான் வந்தியத்தேவன்.

"உனக்கு நீந்தத் தெரியாது என்பது நினைவிருக்கிறது. என்னால் கூட இவ்வளவு பெரிய ஏரியை நீந்திக் கடக்க முடியாது. ஒரு படகு கிடைத்தால் காரியம் சுலபமாகி விடும். சற்று முன் ஒரு படகு பார்த்தோமே, அது எங்கேயாவது சமீபத்தில் கரையோரமாகத்தானே தங்கியிருக்கும்? அதைத் தேடிப் பிடித்தால் என்ன?"

"குதிரைகளின் கதி என்ன ஆவது? காட்டு மிருகங்களுக்கு உணவாகட்டும் என்று விட்டு விட்டுப் போய் விடலாமா?" என்றான் வந்தியத்தேவன்.

உடனே ஏதோ ஞாபகம் வந்து திடுக்கிட்டவன் போல் துள்ளிக் குதித்து எழுந்து, "ஐயா! புலி எங்கே?" என்று கேட்டான்.

"நானும் அதை மறந்து விட்டேன். பக்கத்தில் எங்கேயாவது மறைந்திருக்கப் போகிறது. யமன் பன்றி ரூபத்தில் வராமல் ஒருவேளை புலி ரூபத்திலும் என்னைத் தொடரலாம் அல்லவா?" என்றார் இளவரசர்.

இருவரும் சுற்றுமுற்றும் உற்றுப் பார்க்கலானார்கள். சிறிது நேரம் பார்த்த பிறகு வந்தியத்தேவன் "அதோ!" என்று சுட்டிக்காட்டினான்.

ஏரியில் தண்ணீர் கொண்டு வந்து சேர்த்த அந்த வாய்க்கால் வடக்கே போகப் போகக் குறுகலாகிக் கொண்டு சென்றது. அவ்விதம் குறுகலாகியிருந்த இடத்தில் வாய்க்காலின் மீது ஒரு பெரிய மரம் விழுந்து இரு கரைகளையும் தொட்டுக் கொண்டிருந்தது. புலி அந்த மரப் பாலத்தின் மீது மெல்ல ஊர்ந்து சென்று அக்கரையை நெருங்கிக் கொண்டிருந்ததை இரண்டு பேரும் கவனித்தார்கள். இரண்டு பேருடைய மனத்திலும் ஒரே எண்ணம் உதித்தது.

"ஆகா! படகிலே வந்த பெண்கள்!" என்று இருவரும் ஏக காலத்தில் வாய் விட்டுக் கூறினார்கள்.

பின்னர், "இந்த வாய்க்காலை அடுத்துள்ள தீவின் கரையிலேதான் அந்தப் பெண்கள் இறங்கியிருக்க வேண்டும்" என்றான் வல்லவரையன்.

"காயம்பட்ட சிறுத்தை மிக அபாயகரமானது" என்றார் இளவரசர்.

"பன்றியுடன் புலியையும் கொன்று எடுத்துப் போகத்தான் வேண்டும்."

"இந்த வாய்க்காலை எப்படித் தாண்டுவது? குதிரைகள் மரப் பாலத்தின் மேல் போக முடியாதே?"

"தண்ணீர் கொஞ்சமாகத்தான் இருக்கும். இறங்கிப் போகலாம்."

கரிகாலரின் குதிரையும் அதற்குள் எழுந்து வந்தியத்தேவன் குதிரைக்கு அருகே போய் நின்று கொண்டிருந்தது. எஜமானர்கள் அந்தரங்கம் பேசியது போல் அவையும் தங்களுக்குச் சற்று முன் நேர்ந்த அபாயத்தைப் பற்றிப் பேசிக் கொண்டன போலும்.

இருவரும் தத்தம் குதிரை மீது தாவி ஏறினார்கள். வாய்க்காலில் குதிரைகளை இறக்கினார்கள்.

வாய்க்காலில் தண்ணீர் அதிகமாக இல்லைதான். ஆனால் சேறும் உளையும் அதிகமாயிருந்தன. குதிரைகள் தட்டுத் தடுமாறித் தத்தளித்துச் சென்றன.

கோடிக்கரைப் புதை சேற்றுக் குழிகளை நினைத்துக்கொண்டு வந்தியத்தேவன், "இந்தச் சேறு ஒன்றும் பிரமாதமில்லை" என்று தைரியமடைந்தான். அதைப் பற்றிக் கரிகாலருக்குச் சொல்லவும் தொடங்கினான்.

"நண்ப! வெளியிலுள்ள சேற்றைப் பற்றிச் சொல்லப் போய் விட்டாயே? மனிதர்களுடைய உள்ளத்தில் உள்ள சேற்றைக் குறித்து என்ன கருதுகிறாய்? ஒரு தடவை தீய எண்ணமாகிற சேற்றில் இறங்குகிறவர்கள் மீண்டு கரை ஏறுவது எவ்வளவு கடினம் தெரியுமா?" என்று கரிகாலர் கேட்டார். இளவரசரின் உள்ளம் உண்மையில் சேறு போலக் குழம்பியிருக்கிறது என்று வந்தியத்தேவன் எண்ணிக் கொண்டான்.

குதிரைகள் மிகப் பிரயாசையுடன் அக்கரையை அடைந்தன.

காட்டுக்குள்ளே மிக ஜாக்கிரதையுடன் நாலாபுறமும் உற்றுப் பார்த்துக்கொண்டு இருவரும் சென்றார்கள்.

கரிகாலரின் கையில் வில்லும் அம்பும் தயாராயிருந்தன.

வந்தியத்தேவன் தன் வேலையும் புலியின் பேரில் எறிவதற்கு ஆயத்தமாக வைத்துக்கொண்டிருந்தான்.

திடீரென்று, காட்டில் சாதாரணமாகக் கேட்கும் சப்தங்களை அடக்கிக் கொண்டு ஒரு பெண்ணின் 'கிறீச்' என்ற குரல், "அம்மா! அம்மா! புலி!" என்று கதறுவது கேட்டது.

மணிமேகலை மரக்கிளையின் மீது சிறுத்தையைப் பார்த்த அதே சமயத்தில் வஸந்த மண்டபத்தில் சமையல் வேலையில் ஈடுபட்டிருந்த தோழிப் பெண் ஒருத்தியும் அந்தப் புலியைப் பார்த்துவிட்டு அவ்விதம் அலறினாள்.

அந்தக் குரல் இரு நண்பர்களின் செவிகளிலும் விழுந்து ரோமாஞ்சனத்தை உண்டுபண்ணியது.

குதிரைகளை வேகமாகச் செலுத்திக் கொண்டு குரல் வந்த திசையை நோக்கி அவர்கள் சென்றார்கள்.

ஏரிக்கரையின் ஒரு திருப்பம் திரும்பியதும் அவர்கள் கண்ட காட்சி இருவரையும் திடுக்கிட்டுத் திகில் கொள்ளும்படி செய்து விட்டது.

நந்தினியும் மணிமேகலையும் படித்துறையில் குளிப்பதற்காக இறங்கிக் கொண்டிருந்த சமயத்தில், அருகில் சாய்ந்திருந்த மரக்கிளை ஒன்றின் மீது சிறுத்தை சிறிது சிறிதாக ஊர்ந்து மேலேறிக் கொண்டிருந்தது.

பன்றியோடு போட்ட சண்டையில் நன்றாக அடிபட்டுக் காயமுற்றிருந்த அந்தச் சிறுத்தை அப்போது தன் உயிரைக் காப்பாற்றிக்கொண்டால் போதும் என்ற நிலையில் இருந்தது.

ஆனால் அது அந்தப் புலியைத் தவிர வேறு யாருக்கும் தெரிந்திருக்கவில்லை.

அடுத்தகணம் சிறுத்தை தண்ணீரில் நின்ற பெண்களின் மீது பாயப் போகிறதென்று கரிகாலரும் வந்தியத்தேவனும் எண்ணினார்கள்.

வந்தியத்தேவன் வேலை உபயோகிக்கத் தயங்கினான். வேல் தவறிப் பெண்களின் மீது விழுந்து விட்டால் என்ன செய்வது என்று பயந்தான்.

கரிகாலருக்கு அத்தகைய தயக்கம் ஒன்றும் ஏற்படவில்லை. வளைத்திருந்த வில்லில் அம்பைக் கோத்து நன்றாகக் குறி பார்த்து இழுத்து விட்டார்.

அம்பு விர்ரென்று சென்று சிறுத்தையின் அடிவயிற்றில் பாய்ந்தது.

சிறுத்தை பயங்கரமாக உறுமிக்கொண்டு அப்பாலிருந்த பெண்களின் மீது பாய்ந்தது.

அடுத்தகணத்தில் என்ன நேர்ந்தது என்பதைத் தெளிவாகப் பார்க்க முடியாதபடி ஒரே குழப்பமாகிவிட்டது.

சிறுத்தையும் பெண்கள் இருவரும் திடீரென்று மறைந்துவிட்டார்கள்.

சில கணநேரம் கழித்து மூவரும் வெவ்வேறு இடத்தில் தண்ணீருக்குள்ளிருந்து வெளியே தலையை நீட்டினார்கள்.

ஏரியின் நீரோடு இரத்தம் கலந்து செக்கச் செவேலென்று ஆயிற்று.

## நாற்பத்தி நான்காம் அத்தியாயம்

# காதலும் பழியும்



ரு நண்பர்களும் மேற்கூறியவற்றையெல்லாம் திகிலுடன் பார்த்துக் கொண்டுதானிருந்தார்கள். குதிரைகள் மீதிருந்து குதித்தார்கள். தண்ணீர்க் கரையோரம் பாய்ந்து வந்தார்கள்.

இதற்குள் சிறுத்தை தண்ணீரிலே சிறிது தூரம் சென்று விட்டது! அது மிதந்த விதத்தைப் பார்த்தால் அது ஒருவழியாகப் பிராணனை விட்டு விட்டது என்று தோன்றியது.

பெண்மணிகள் இருவரும் புலியினால் எவ்வளவு காயப்படுத்தப்பட்டார்கள் என்பது ஒன்றும் தெரியவில்லை.

இருவரும் தண்ணீரில் குதித்துப் பெண்மணிகளை நோக்கிச் சென்றார்கள்.

முதலில் வந்தியத்தேவன் மணிமேகலையை அணுகிச் சென்றான். ஏனெனில் நந்தினியை நெருங்குவதற்கு அவனுக்கு அச்சமாக இருந்தது.

மணிமேகலைக்குக் காயம் எதுவும் ஏற்படவில்லை. புலி விழுந்த வேகத்தில் அவளும் தண்ணீரில் விழுந்து முழுகியதில் சிறிது மூச்சுத் திணறியதைத் தவிர வேறொன்றும் அவளுக்கு நேரவில்லை.

வந்தியத்தேவன் தன் அருகில் வருவதைப் பார்த்ததும் அவள் எல்லையில்லாத உள்ளக் கிளர்ச்சி அடைந்து கண்களை இறுக மூடிக் கொண்டாள்.

கரிகாலர் வந்தியத்தேவனுடைய கையைப் பிடித்து நிறுத்தி நந்தினியின் பக்கம் அனுப்பி விட்டுத் தன்னை நோக்கி வருவதை அவள் அறியவில்லை. இரண்டு கைகளினாலும் கரிகாலர் அவளைத் தூக்கி அணைத்துக் கொண்டு படித்துறைப் படிகளில் ஏறி மேலே போய்ச் சேர்ந்து தரையில் மெதுவாக அவளை வைக்கும் வரையில் கண்ணை விழித்துப் பார்க்கவில்லை. மூக்கில் சுவாசம் வருகிறதா என்று கரிகாலர் விரலை வைத்துப் பார்த்தபோதுதான் கண்களை மெள்ள மெள்ளத் திறந்தாள். திறக்கும்போதே வந்தியத்தேவனிடம் தன் கரை காணாக் காதலைத் தெரிவிக்கும் பொருட்டு, அன்பும் ஆர்வமும் ததும்பிய நோக்குடன் பார்த்தாள். அவளுடைய கண்ணின் முன் தெரிந்தவர் இளவரசர் கரிகாலர் என்று தெரிந்ததும் துள்ளி எழுந்து அப்பால் நகர்ந்து உட்கார்ந்துகொண்டாள்.

அவளுடைய முகத்தில் அச்சமயம் தோன்றிய ஏமாற்றத்தைக் கவனித்த கரிகாலர் கலீர் என்று சிரித்தார்.

"மணிமேகலை! இது என்ன துள்ளல்? என்னைக் கண்டு இவ்வளவு அருவருப்பு ஏன்?" என்றார்.

"ஐயா! வேற்று மனிதர் கைபட்டால்

பெண்களுக்குக் கூச்சமாயிராதா?" என்றாள் மணிமேகலை.

"பெண்ணே! என்னை வேற்று மனிதனாக்கி விட்டாயா? எனக்கும் உனக்கும் கலியாணம் செய்து வைக்க ஏகப் பிரயத்தனம் நடக்கிறதே?" என்றார் கரிகாலர்.

"சுவாமி! அந்தப் பிரயத்தனம் பலித்த பிறகுதானே சொந்தமாக முடியும்? அதுவரையில் தாங்கள் வேற்று மனிதர்தானே?" என்றாள் மணிமேகலை.

"ஆனால் அது உனக்கு இஷ்டமா என்பதை நீ சொல்லலாம் அல்லவா?"

கடம்பூர் இளவரசி சற்று யோசித்துவிட்டு, "ஐயா! தாங்கள் சோழகுலத் தோன்றல்; எல்லாம் அறிந்த புத்திமான். சிறு பெண்ணாகிய என்னிடம் இவ்விதம் பேசலாமா? என் தந்தையிட மல்லவா கேட்க வேண்டும்?" என்றாள்.

"பெண்ணே! உன் தந்தை சம்மதித்தால் நீ சம்மதிப்பாயா?"





"என் தந்தை சம்மதித்த பிறகு அவர் கேட்டால் சொல்லுவேன். தங்களிடம் இதைப் பற்றிப் பேசவே எனக்குக் கூச்சமாயிருக்கிறது. புலி என்னைக் கொல்லாமலும் நான் தண்ணீரில் முழுகிப் போகாமலும் என்னைக் காப்பாற்றினீர்கள். அதனால் தங்களிடம் எனக்கு ஏற்பட்டுள்ள நன்றி காரணமாக இத்தனை நேரமும் பொறுமையாக இருக்கிறேன்..."

கரிகாலர் சிரித்துவிட்டு, "மணிமேகலை! நீ வெகு கெட்டிக்காரி; மிக அழுத்தமானவள். ஆனாலும் ஏமாந்து போனாய்! அதற்காக என்னை ஏமாற்றப் பார்க்க வேண்டாம்!" என்றார்.

"ஐயா! இது என்ன வார்த்தை? தங்களை இந்த அறியாப் பெண் ஏமாற்றுவதா? எதற்காக? எந்த முறையில்?"

"வீணாக ஏன் சுற்றி வளைத்துப் பேசுகிறாய்? எனக்குப் பதிலாக வந்தியத்தேவன் உன்னைத் தூக்கிக் கொண்டு வந்து கரை சேர்த்திருந்தால் இவ்வளவு கடூரமாகப் பேசுவாயா? வந்தியத்தேவன் என்று நினைத்துத்தானே நீ கண்ணை மூடிக் கொண்டாய்? அதே எண்ணத்துடனேதான் கண்ணைத் திறந்தும் பார்த்தாய்! பாவம்! ஏமாந்து போனாய்!" என்றார் கரிகாலர்.

மணிமேகலை வெட்கத்துடனே சிறிது பீதியும் அடைந்தாள். பின்னர் தைரியப்படுத்திக் கொண்டு, "அரசே! தங்களுக்குத்தான் என் மனம் தெரிந்திருக்கிறதே! அப்படியிருக்கும்போது, இந்தப் பேதைப் பெண்ணை எதற்காகச் சோதிக்கிறீர்கள்?" என்றாள்.

"மணிமேகலை! உன் மனம் எனக்குத் தெரிந்திருக்கிறது. அது போலவே வல்லவரையனுடைய மனமும் எனக்குத் தெரிந்

திருக்கிறது. உன்னுடைய பரிசுத்தமான அன்புக்கு அவன் பாத்திரன் அல்லவே என்றுதான் யோசிக்கிறேன். அதோ பார்! இளையராணி நந்தினியும் வந்தியத்தேவனும் சல்லாபம் செய்வதை! நந்தினியின் முகத்தில் குடிகொண்டிருக்கும் குதூகலத்தைப் பார்!" என்றார்.

மணிமேகலை அவர் காட்டிய திசையைப் பார்த்தாள். அந்தக் கணத்தில் 'அசூயை' என்னும் விஷம் அவளுடைய பால் போன்ற நெஞ்சில் ஏறிவிட்டது.



அதே சமயத்தில் வந்தியத்தேவனும் நந்தினியும் பேசிக் கொண்டிருந்தார்கள். நந்தினியின் தோள் ஒன்றில் புலி நகம் பட்டு இரத்தம் கசிந்து கொண்டிருந்தது.

மணிமேகலையைப் போல் நந்தினி கண்ணை மூடிக் கொள்ளவும் இல்லை. வந்தியத்தேவன் கைகளிலிருந்து விடுவித்துக் கொள்ள அவசரப்படவும் இல்லை. வந்தியத்தேவனோ, தன் கையைச் சுட்டுக் கொண்டிருந்த நெருப்புத் தணலைக் கீழே போடுவது போல் அவசரமாக இளையராணியைக் கரையில் இறக்கி விட்டான். தண்ணீரில் மூழ்கி இருந்தபோதிலும் நந்தினியின் உடம்பு உண்மையிலேயே சுட்டுக் கொண்டிருந்தது.

வந்தியத்தேவன் உள்ளத்தில் இனந் தெரியாத பீதி குடி கொண்டது. அவன் உடம்பு பதறியது.

நந்தினி புன்னகையுடன், "ஐயா! ஏன் இவ்வளவு பதற்றம்? என்னைப் புலி என்று நினைத்துக் கொண்டீரா? அல்லது புலியைக் காக்க நினைத்துத் தவறாக என்னைக் கரை சேர்த்து விட்டதற்காக வருத்தப்படுகிறீரா?" என்றாள்.

"அம்மணி! இவ்வளவு கொடூரமான வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம். தங்களைத் தொட்டு எடுத்து வரும்படி நேர்ந்து விட்டதை நினைத்து நெஞ்சு சிறிது கலக்கம் அடைந்தது..."

"குற்றம் உள்ள நெஞ்சு அல்லவா? அதனால் கலங்குகிறது!"

"தேவி! நான் ஒரு குற்றமும் செய்யவில்லையே!"

"குற்றம் செய்யவில்லையா? தஞ்சைக் கோட்டைக்குள் பிரவேசிப்பதற்கு என் உதவியை நாடினீர். முத்திரை மோதிரத்தைக் கொடுத்து உதவினேன். பிறகு என் அந்தப்புரத்தில் திருட்டுத்தனமாகப் பிரவேசித்தீர். அப்போதும் உமக்குத் தீங்கு நேராமல் காப்பாற்றினேன். அதற்குக் கைம்மாறு என்ன செய்தீர்? எனக்குத் தெரியாமல், என்னிடம் சொல்லிக் கொள்ளாமல், திருடனைப் போல் தப்பி ஓடிப் போனீர். பழையாறை இளையபிராட்டியைச் சந்தித்த பிறகு என்னிடம் திரும்பி வருவதாகச் சொன்னீர். அந்த வாக்குறுதியை நிறைவேற்றவில்லை. இவையெல்லாம் குற்றமல்லவா?"

"அந்தக் குற்றங்களை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அவை ஒவ்வொன்றுக்கும் காரணம் இருக்கிறது. நான் பிறரிடம் சேவகம் செய்பவன். ஆதித்த கரிகாலருடைய கட்டளைக்குக் கட்டுப்பட்டவன். இதைத் தாங்கள் எண்ணிப் பார்த்தால் என் பேரில் குற்றம்சாட்ட மாட்டீர்கள்..."

"ஆமாம்; புலியின் வாயிலிருந்து ஒரு பெண்ணைக் காப்பாற்ற வேண்டுமென்றால் கூடக் கரிகாலரின் கட்டளை உமக்கு வேண்டும். தண்ணீரில் முழுகும் பெண்ணைக் கரை சேர்ப்பதற்கும் அவருடைய அனுமதி வேண்டும். நான் கவனித்துக் கொண்டுதானிருந்தேன். அடடா! மணிமேகலையைக் காப்பாற்றுவதில் இளவரசர் எத்தனை பரபரப்புக் காட்டினார்? நான் நீரில் முழுகிச் செத்துப் போயிருந்தால் சந்தோஷப்பட்டிருப்பார், அவருடைய மனத்தை அறியாமல் நீர் என்னைக் கரைசேர்த்து விட்டீர்..."

"அம்மணி! அவ்வாறு சொல்ல வேண்டாம்! தாங்கள் ஓலை அனுப்பிய படியால்தான் கரிகாலர் காஞ்சியிலிருந்து இவ்வளவு தூரம் வந்திருக்கிறார்..."

"ஆனால் அவர் இங்கு வராமல் தடை செய்வதற்காக நீர் அவசர அவசரமாக ஓடி வந்தீர். இளையபிராட்டியின் செய்தியுடன் வந்தீர். ஆனால் உம்முடைய முயற்சி பலிக்கவில்லை. என்னுடைய காரியத்தில் நீர் தலையிடுவதற்குச் செய்யும் முயற்சியெல்லாம் இவ்வாறுதான் தோற்றுப் போகும்!"

நந்தினியின் இந்த வார்த்தைகள் வந்தியத்தேவனின் மனக்குழப்பத்தை அதிகமாக்கின. அந்த வார்த்தைகளின் உட்கருத்தை நந்தினியின் முக பாவத்திலிருந்து தெரிந்து கொள்ளும் நோக்கத்துடன் அவளை உற்றுப் பார்த்

தான். ஆனால் நந்தினியின் முகம் எவ்வித மாறுதலும் இன்றி வழக்கம் போலப் புன்னகை பூத்து விளங்கியது.

நந்தினி தொடர்ந்து, "உம்முடைய குற்றத்தை உம்முடைய முகத் தோற்றமே ஒப்புக் கொள்கிறது. அமாவாசை இராத்திரி பள்ளிப்படைக்கு அருகில் நீர் என் வசம் அகப்பட்டீர். என் ஆட்களிடம் ஒரு சமிக்ஞை செய்திருந்தால் போதும், உம்மைக் கொன்றிருப்பார்கள். அப்போதும்



உம் உயிரைக் காப்பாற்றி அனுப்பினேன். அதற்குக் கூட உமக்கு நன்றி இல்லை. உம்மைப் போல் நன்றி கெட்ட மனிதரை இந்த உலகத்தில் நான் பார்த்ததே யில்லை..."

"தேவி! என் மனத்தில் தங்களிடம் பரிபூரண நன்றி குடிகொண்டிருக்கிறது. சத்தியமாகச் சொல்கிறேன்."

"ஆனால் இந்த ஊருக்கு நாம் வந்து இத்தனை நாளாகியும் உமது நன்றியைத் தெரிவிப்பதற்கு நீர் ஒரு முயற்சியும் செய்யவில்லையே? உமது வார்த்தையை நான் எப்படி நம்புவது?"

"தங்களைத் தனியாகச் சந்திக்கும் போது தெரிவித்துக் கொள்ளலாம் என்றிருந்தேன். அதற்குரிய சந்தர்ப்பம் கிடைக்கவில்லை..."

"சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொள்ள நீர் ஒருவித முயற்சியும் செய்யவில்லை. முகத் தோற்றத்தினால், கண் பார்வையினால் ஒரு குறிப்பு வெளியிடக் கூடவில்லை. ஏன்? இத்தனை நாளாக என் பக்கம் நீர் ஒரு தடவையாவது திரும்பிப் பார்க்கக் கூடவில்லை..."

"தேவி! தாங்கள் சோழ நாட்டுத் தனாதிகாரி பெரிய பழுவேட்டரையரின் தர்ம பத்தினி..."

"அதாவது கிழவனைக் கலியாணம் செய்து கொண்டவள் என்று என்னைப் பரிகசிக்கிறீர்; இல்லையா?"

"ஐயோ! தங்களை நான் பரிகசித்தால் கொடிய நரகத்துக்குப் போவேன்..."

"வேண்டாம், வேண்டாம்! எது எப்படியிருந்தாலும் சரி, பழுவேட்டரையரின் 'தர்மபத்தினி' என்று என்னைக் குறிப்பிட வேண்டாம். நான் அவருடைய மனைவியே அல்ல..."

"ஐயோ! இது என்ன சொல்லுகிறீர்கள்?"

"உண்மையைத்தான் சொல்கிறேன். பலவந்தமாக ஒரு பெண்ணைப் பிடித்துக் கொண்டு வந்து வைத்திருந்தால், அவள் மனைவி ஆகி விடுவாளா?"

"தேவி! தாங்கள் தமிழ்நாட்டுப் பெண் குலத்தில் வந்தவர். பெண் குலத்தின் தர்மத்துக்கு மாறாகத் தாங்கள் எதுவும் செய்ய மாட்டீர்கள்!"

"பெண் குலத்தின் தர்மத்தை நான் அறிந்துதானிருக்கிறேன். பழந்தமிழ் நாட்டுப் பெண்கள் மனத்தினால் யாரைக் காதலித்தார்களோ, அவரையே கணவனாகக் கொண்டார்கள், பலவந்த மணத்துக்கு அவர்கள் உடன்படுவதில்லை!"

"ஆனால் தாங்கள்...?"

"நீர் சொல்லப் போவது எனக்குத் தெரியும். பழுவேட்டரையருடைய பலவந்த மணத்துக்கு நான் எப்படி உடன்பட்டேன் என்று கேட்கிறீர். ஒரு முக்கிய நோக்கத்துக்காகவே உடன்பட்டேன். பழந்தமிழ் நாட்டுப் பெண்களுக்கு மற்றொரு சிறப்பியல்பும் உண்டு. அவர்கள் தங்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிக்குப் பழிக்குப் பழி வாங்கியே தீர்வார்கள். ஐயா! நீர் எனது காதல் நிறைவேறுவதற்குத்தான் உதவி செய்யவில்லை. என் விரோதிகள் மீது பழிவாங்குவதற்காகவாவது உதவி செய்வீரா?"

கடைசியாக நந்தினி கூறிய மொழிகள் ஏக காலத்தில் வந்தியத்தேவனுடைய நெஞ்சை வஜ்ராயுதத்தினால் பிளப்பது போலவும் அவன் தலையில் இடிரென்று பேரிடி விழுவது போலவும் அவனைத் திணறித் திண்டாடச் செய்தன.

"தேவி! தேவி! இது என்ன?.... காதலாவது? பழியாவது? எனக்கும் தங்கள் காதலுக்கும் என்ன சம்பந்தம்? காதலுக்கும் பழிவாங்குவதற்கும் என்ன சம்பந்தம்?...."

"சம்பந்தம் உண்டு. ஆனால் அதைப் பற்றிச் சொல்வதற்கு இப்போது நேரம் இல்லை. அதோ இளவரசரும் மணிமேகலையும் நெருங்கி வந்து கொண்டிருக்கிறார்கள். நாளை நள்ளிரவு நேரத்தில் நான் இருக்கும் அறைக்குத் தனியாக வந்தால் சொல்லுகிறேன்...."

"அது எப்படிச் சாத்தியம், தேவி! தாங்கள் அந்தப்புரத்தில் இருக்கிறீர்கள். நான் எப்படி அங்கே இரவில் தனியாக வர முடியும்?"

"அதே அந்தப்புர அறையிலிருந்து ஒரு நாள் நீர் யாரும் அறியாமல் தப்பித்துக் கொண்டு செல்லவில்லையா? போன வழியாகவே அங்கே திரும்பி வரலாம் அல்லவா? உமக்கு மனம் மட்டும் இருந்தால்...."

வந்தியத்தேவனுடைய திகைப்பு இப்போது பரிபூரணமாகி விட்டது.

ஆனால் நந்தினியின் முகத்தில் எவ்வித மாறுதலும் இல்லை. எப்போதும் போலப் புன்னகை தவழ்ந்தது.

(தொடரும்)

# கொம்மடிக்கோட்டை எமி!

தூத்துக்குடி மாவட்டம் சாத்தான்குளம் வறட்சியின் பிடியில் சிக்கிய பகுதிதான். சமீப காலங்களாக இங்குள்ள தாமிரபரணி கருமேனி மற்றும் துவப்பார் ஆற்றுப்படுகைகளில் மணல் கடத்தல் பலருக்குத் தொழிலாகி இருக்கிறது. கடத்தலில் ஈடுபடுபவர்கள் வசதி படைத்தவர்கள். 'இந்த மணல் கடத்தலை தடுக்க வேண்டும்' என்று துணிந்து களத்தில் இறங்கினார் அந்தப் பெண்மணி. அரசு அங்கீகாரம் கொடுக்காத இடங்களில் மணல் எடுத்ததை வெளிச்சத்துக்குக் கொண்டு வந்தார் அவர்.

கடத்தல் கூட்டத்துக்குப் பயங்கர ஷாக். பெண்மணியிடம் நேரடியாக பேரம் பேச வந்து விட்டார்கள். அவர்களை எச்சரிக்கை செய்து வெளியே அனுப்பினார் அவர். 'ஏதாவது பொய்க் குற்றச்சாட்டு சொல்லி பெண்மணியை ஜெயிலில் தள்ளி விடுவது' என்று முடிவு செய்து பக்கத்து போலீஸ் ஸ்டேஷனுக்கு விரைந்தது கும்பல்.

பெண்மணி தாக்கியதாக புகார் பதிவு செய்யப்பட்டது. கள்ளச் சாராயத்தை ஒழித்துக் கட்டியதில் லோக்கல் போலீஸுக்கு மாமூல் போய்விட்டது. அந்தக் கோபத்தில் இருந்த போலீஸ்காரர்கள் உடனடியாக கடத்தல் கும்பலின் புகாரை ஏற்றுக் கொண்டு எஃப்.ஐ.ஆர் போட்டு விட்டார்கள். கைது செய்ய வருகிறார்கள் என்று தெரிந்ததும், புத்திசாலித்தனமாக வீட்டிலிருந்து எஸ்கேப் ஆகி, டி.ஐ.ஜி சவானியிடம் ஓடினார் அந்தப் பெண்மணி. கடத்தல் கும்பலின் சூழ்ச்சிகளைப் பற்றி நன்கு அறிந்து வைத்திருந்த டி.ஐ.ஜி., புகார் கொடுத்தவனைக் கூப்பிட்டு 'விசாரிக்க' அவன் உண்மையை ஒப்புக் கொண்டான். பெண்மணி பெருமூச்சு விட்டார். அந்தப் பெண்மணி... கொம்மடிக் கோட்டை எமி!



> “என்னைக் கொலை செய்யவும் அவர்கள் துணிந்து விட்டார்கள்...”

## “பயப்பட மாட்டேன்!”

"சவானி போன்ற நல்ல அதிகாரிகள் இருப்பதால்தான் எங்களைப் போன்றவர்கள் பொதுவாழ்வில் இன்னமும் இருக்க முடிகிறது' என்று அந்த 'திக்' சம்பவத்தை நினைவு கூர்கிறார் தூத்துக்குடி மாவட்ட பஞ்சாயத்து கவுன்சிலரான எமி. "பொய்ப் புகார் கொடுத்தது மட்டுமல்லாமல், என்னைக் கொலை செய்யவும் அவர்கள் துணிந்து விட்டார்கள். இரண்டு மூன்று நாட்கள் காரிலேயே தான் சுற்றிக் கொண்டிருந்தேன். ஆனால் இதற்கெல்லாம் பயப்படமாட்டேன்" என்கிறார்.

முறைகேடுகள், மோசடிகள் எந்தத் துறையில் நடந்தாலும் அதை அம்பலப்படுத்தும் எமி இன்று தென் மாவட்டங்களில் மிகவும் பாப்புலர்.



''ஞாபகமறதி அநியாயத்துக்கு இருக்கு டாக்டர்.''

''எவ்வளவு நாளா?''

''கரெக்டா சொல்லணும்னா ஒரு மாதம், ரெண்டு வாரம், மூணு நாள், அஞ்சு மணி நேரமா அப்படி இருக்கு டாக்டர்!''

– சீர்காழி வி. ரேவதி

---

அக்கிரமங்கள், அநியாயங்கள் நடப்பது தெரியும்போது 'எமியிடம் சொன்னால் ஏதாவது முடிவு கட்டுவாரே' என்று கொம்மடிக் கோட்டையில் இவர் வீடு தேடி மக்கள் வருகிறார்கள்.

''எங்க ஊரில் ஏழாவது வரைப் படித்தவுடன் கோயமுத்தூர் பி.எஸ்.ஜி. கிருஷ்ணம்மாள் கல்வி நிலையத்தில் சேர்ந்தேன். விளையாட்டுத் துறையில் இளம் வயதிலேயே பயிற்சி கொடுக்க தமிழக அரசின் சிறப்புத் திட்டம் ஒன்று அந்தக் கல்வி நிலையத்தில் செயல்பட்டு வந்தது. தடகளத்தில் தடை தாண்டும் ஓட்டத்தில் பயிற்சி பெற்றேன். தில்லியில் நடந்த தேசிய ஜுனியர் போட்டியிலும் முதலாவதாக வந்தேன். தொடர்ந்து பட்டப் படிப்பு படித்தேன். முடிப்பதற்கு முன்னரே நெல்லை கட்டபொம்மன் போக்குவரத்தில் இளநிலை உதவியாளர் வேலை கிடைத்தது. அரசு வேலை கிடைத்தாலும் சமூக சேவை ஆசை விடவில்லை. 1996ல் பஞ்சாயத்து தேர்தல்கள் நடந்தபோது வேலையை உதறிவிட்டு த.மா.கா.வில் இணைந்தேன். மாவட்ட பஞ்சாயத்து கவுன்சிலராக தேர்ந்தெடுக்கப்பட்டேன்'' என்று தனது பயோ- டேட்டாவை சுருக்கமாகச் சொல்கிறார்.

அரசியலுக்கு வந்ததும்தான் அதனுடைய சூழ்ச்சியும், சுழல்களும் எமிக்கு புரிந்தன.

''மாவட்டத்தில் உள்ள த.மா.கா.காரர்கள் உட்பட – எல்லோரும் சேர்ந்து கூட்டு ஊழல் செய்வதைப் பார்த்தவுடன் எனக்கு வெறுத்து விட்டது. மூப்பனார் நல்ல மனிதர்தான். ஆனால் மாவட்ட அரசியலை மனத்தில் கொண்டு காங்கிரஸில் இணைந்து விட்டேன்'' என்கிறார் எமி. தன் சொந்த தம்பி காண்ட்ராக்டராக இருந்தும் அரசு சம்பந்தப்பட்ட வேலைகள் ஏதும் செய்யக் கூடாது என்று அவருக்கும் தடா போட்டிருக்கிறார். இதுவரை 3000 முதியோர்களுக்கு அரசு உதவித்தொகை வாங்கிக் கொடுத்திருக்கிறார். காதல் கல்யாணங்கள் உட்பட நூற்றுக்கணக்கான கல்யாணங்களை நடத்தி வைத்திருக்கிறார்.

வருமானத்திற்கு அதிகமாக சொத்து சேர்த்து புறம்போக்கு நிலத்தில் கடைகள் கட்டியது என்று தூத்துக்குடி எம்.எல்.ஏ. பெரியசாமி மீது ஐந்து வழக்குகள் போட்டிருக்கிறார்.

1974 உள்ளாட்சி சட்டப்படி மேயர் சொத்துக் கணக்கை காண்பிக்க வேண்டும் என்று குறிப்பிட்டு ஸ்டாலின் சொத்துக்கணக்கையும் நீதிமன்றம் மூலமாக கேட்டிருக்கிறார் எமி! மணல் கடத்தல் விவகாரத்தில் மாவட்ட ஆட்சித் தலைவரின் நடவடிக்கையைக் கேள்வி கேட்டு நீதிமன்றக் கதவைத் தட்டியிருக்கிறார். நீதிமன்ற விவகாரங்களில் இவருக்கு வழிகாட்டியாக இருப்பவர் பி.ஹெச். பாண்டியன். ''இப்படிப் பல பொதுநல வழக்குகள் நான் போட்டிருந்தாலும் இப்போது நான் எடுத்துக் கொண்டிருக்கும் ஒரு பணியில் என் உயிருக்கே ஆபத்து வரலாம்'' என்கிறார் எமி.

அது என்ன விவகாரம்?

தூத்துக்குடி கடற்பகுதியில் கார்னட், சிலிகான் இல்மனைட், மோனோசைட் என்று பல அரிய வகை மணல் கிடைக்கிறது. நமது அணுசக்தி துறைக்கு தேவையான இந்த கனிம வளத்தை திருட்டுத்தனமாக வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து கோடிக்கணக்கான ரூபாய் சம்பாதித்துக் கொண்டிருக்கிறது ஒரு கும்பல். இதே கும்பல் போதை மருந்து கடத்தலும் செய்து வருகிறது. இந்தக் கும்பலின் தேச விரோத செயல்களைப் பட்டியலிட்டு தில்லியிலிருந்து உள்ளூர் அதிகாரிகள் வரை புகார் அனுப்பியிருக்கிறார் எமி. அது தவிர, இந்த அரிய மணலை கடத்திய லாரிகளை போலீஸில் பிடித்துக் கொடுத்திருக்கிறார். இவரது நடவடிக்கைகளால் கொதித்துப் போயிருக்கிறது அந்தக் கும்பல். பணம், பதவி என்று பல வழிகளில் இவரை தாஜா செய்யப் பார்த்திருக்கிறது. ''ஆனால் அவர்களால் என்னை விலைக்கு வாங்க முடியவில்லை. நான் இன்னமும் திருமணம் செய்யாமல் இருப்பதால், என்னைப் பற்றி கீழ்த்தரமான முறையில் போஸ்டர்கள் போடுகிறார்கள். இதையெல்லாம் நினைக்கும் போது திடீரென்று அழுகைகூட வந்து விடும். ஆனால் அநீதிக்கெதிரான போராட்டத்தை எந்தக் காரணம் கொண்டும் நிறுத்தக் கூடாது என்று புத்துணர்ச்சியோடு மீண்டும் புறப்பட்டு விடுவேன்'' என்கிறார் எமி!

சந்திப்பு: ப்ரியன்

படங்கள்: ராஜன்



• ரோஹித், அஷோக், ஹரிநாயர், மாதவன், மேதா, சுமதி

# 'மெட்ராஸ் கொசுவெல்லாம்'

**இடம்: மணிரத்னத்தின் 'மெட்ராஸ் டாக்கீஸ்' ஆபீஸ். 'அலை பாயுதே' படத்தின் ஹீரோ மாதவன் உட்பட அதில் நடித்த அரை டஜன் பேர் கொண்ட சிறு குரூப். அலைபாயுதேவில் நடித்தபோது ஏற்பட்ட அனுபவங்களை அசைபோட்டார்கள்:**

ஹீரோ மாதவனின் ஆபீஸ் நண்பர்களுள் ஒருவராக நடித்த இளைஞர் உள்ளே நுழைகிறபோதே, "ரோஹித்! அசோக் வரான்! அவனுக்கு அந்தமானில் செப்டம்பர் மாதம் பாட்டுக்காக ஒரு ஸ்பெஷல் டிரஸ் தயார் பண்ணச் சொன்னாரே மணி சார்! அதைக் கொண்டு வா! மாட்டிக் கொண்டு, அரட்டை அடிக்கட்டும்" என்று மாதவன் சொன்னதும் உள்ளே நுழைந்த இளைஞர் முகத்தில் வெட்கம்!

"அந்தமான்ல, வெறுப்பேத்தினது போதாதா? விடவே மாட்டீங்களாடா பாவிகளா?" என்றார்.

அதன் பின்னணி இதுதான்: அந்தமானில் எம்.டீ.வி.சோபியா டான்ஸ் ஆடும் செப்டம்பர் மாதம் பாடலில், மாதவனின் ஆபீஸ் நண்பர்களும் ஆடுவது போல வருமில்லையா? அந்தக் காட்சி, படம் பிடிக்கப்பட்டபோது, உனக்கு ஸ்பெஷலாக, வெறும் இலைகளை மட்டுமே வைத்து தயாரித்த டிரஸ் ஒன்று இருக்கிறது. அதை மாட்டிக் கொண்டு வா" என்று மணிரத்னம் சொன்னதும், அசோக் மிரண்டு விட்டார்.

காஸ்டியூமரிடம் போய், இலை டிரஸ் எங்கே என்று அசோக் கேட்க, "அவர் இலை டிரஸ்ஸா? அப்படி எதுவும் இங்கே இல்லையே!" என்றதும், குழப்பம். மணிரத்னம், "என்ன அசோக்! காஸ்டியூம் மாட்டவில்லையா? ஷூட்டிங்கிற்கு நேரமாகிறது" என்றவுடன், பயந்து போய் ஹீரோ மாதவனிடம் வந்து கவலையுடன் நொந்து கொள்ள, கடைசியில் மாதவன், 'கவலைப் படாதே, உன்னை சும்மா டீஸ் பண்ண மணிசார் பண்ணின ஐடியா!' என்று மாதவன் சொன்ன பின்தான் அவருக்கு உயிரே வந்தது.

இதை மாதவன் நினைவூட்டியதும் அனைவரும் 'கொல்' என்றார்கள். (அதாவது சிரித்தார்கள்)

மாதவனின் மற்றொரு நண்பராக வரும் ரோஹித், இவர் மாடல் பிளஸ் சட்டக் கல்லூரி மாணவர். பரம்பரையாய் வக்கீல் குடும்பம். அலைபாயுதே படத்தில் மாதவன் பெயர்க் குழப்பம் பற்றிச் சொன்னார்.

ஹீரோ மாதவன், தவிர அவரது ஆபீஸ் நண்பர்களுள் ஒருவர் பெயரும் மாதவன். இவர் பி.காம் முடித்த மாடல். இந்த இருவர் தவிர ஒரு புரொடக்ஷன் அசிஸ்டென்ட் பெயரும் மாதவன். ஆக மூணு மாதவன்கள் என்பதால், பெயர்க் குழப்பம் ஏற்படாமல் இருக்க, நண்பராக வரும் மாதவனுக்கு மணிரத்னம் அசோக் என்று பெயர் சூட்டிவிட்டார். ஆனாலும் கூட படப்பிடிப்பின் போது, மணிரத்னம் "மாதவன்" என்றால், மூவரும் அவர் முன் போய் நிற்பார்கள்.

எதற்கு வீண் பெயர்க் குழப்பம் என்று இந்த பட்டாளம் தாங்களாகவே ஒருவருக்கொருவர் பட்டப் பெயர் சூட்டிக் கொண்டு விட்டனர். ஹீரோ மாதவனுக்கு "maddy", மற்றவர்களுக்கு நரி, ஓநாய், யானை இப்படிப் பல பெயர்கள்.

மத்தியப் பிரதேசத்தில் மகேஸ்வர் என்ற இடத்தில் படப்பிடிப்பின் போது, ஏற்பட்டது





# தண்டக்காய்!"

இவர்களுக்கு மறக்கவே முடியாத அனுபவம் என்கிறார்கள்.

இரவில், ஒரு படகை எடுத்துக் கொண்டு, ஆற்றின் நடுப் பகுதிக்குப் போய், மங்கிய லைட் வெளிச்சத்தில் டின்னர் சாப்பிட்டது மறக்க முடியாத, மகிழ்ச்சியான அனுபவம்" என்கிறார் மாதவன்.

"ஆனாலும் அஷோக் முதல் ஏழுநாள் ஷூட்டிங்கில் உன் நடிப்பைப் பார்த்து நான் அசந்துட்டேன், அதுக்கு உனக்கு அவார்டே தரலாம்" என்று மாதவன் சொன்னதும், மீண்டும் சிரிப்பு. காரணம், முதல் ஏழுநாளும், அஷோக்கிற்கு ஒரு ஷாட் கூட இல்லை. வெறுமனே ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு வந்து ஷூட்டிங் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க வேண்டியதுதான்.

அஷோக்கும், ரோஹித்தும், ஒரு நாள் பீச்சில் நின்று கொண்டு எதைப் பற்றியோ கன்னாபின்னாவென்று கமெண்ட் அடித்துக் கொண்டிருந்திருக்கிறார்கள். சிறிது நேரம் கழித்து, திரும்பியவுடன் மணிரத்னம், அவர்கள் பேசிய சில வார்த்தைகளை மேற்கோள் காட்டிப் பேசினதும், இவர்களுக்கு ஆச்சரியம். "உங்களுக்கு எப்படி எங்கள் பேச்சு தெரியும்?" என்று கேட்டதும் மணி சொன்னார்: "நீங்கள் ரொம்ப தூரம் தள்ளித்தான் நின்று கொண்டிருந்தீர்கள். ஆனால் உங்களைத் தாண்டி நான் இருந்த இடம் நோக்கி காற்றடித்ததால் உங்கள் பேச்சு முழுவதையும் நான் கேட்டு விட்டேன்" இரண்டு பேர் முகத்திலும் அசடு வழிந்தது.

"மகேஸ்வரில், கொசுக்கடி பற்றிச் சொல்லலாமா? என்று அஷோக் கேட்டவுடன், "கண்டிப்பாய் என்றார் ரோஹித். அந்த ஊரில் கொசு ஒவ்வொன்றும் கட்டெறும்பு சைஸ் இருக்கும். கொசு கடி தாங்கமுடியாது. நாலு


Invitation – BCC style

## இப்படியும் ஓர் அழைப்பிதழ்!

**பெங்களூர்** மாநகராட்சி அண்மையில் துப்புரவு வாரம் கொண்டாடியது. ''பெங்களூரைச் சுத்தமாக்குவோம்!'' என்று இந்த இயக்கத்திற்குப் பெயர்.

துவக்க விழா அழைப்பிதழில், ஒரு புதுமை. முக்கியப் பிரமுகர்கள், பத்திரிகை அலுவலகங்களுக்கு அனுப்பப்பட்ட அழைப்பிதழில் ஒரு சிறிய துடைப்பமும் இணைக்கப்பட்டிருந்தது!

— வீ.எஸ். ராஜகோபால்

நாட்களும் ரொம்பவே நரக வேதனை. மெட்ராஸ் கொசுவெல்லாம் கண்டைக்காய்!''

"சரி! உங்களில் யார் அதிகம் மணிரத்னத் திடம் திட்டு வாங்கினீர்கள்?" என்றவுடன், கோரஸாக, அந்தப் பெருமை அஷோக்கிற்குத் தான் என்றனர். காரணம்? அஷோக், அடிக்கடி ஹேர் ஸ்டைலை மாற்றி முடிவெட்டிக் கொண்டு வந்து விடுவார். மணிரத்னம் முன்னால் அஷோக் வந்து நின்றதும், "உன்னை யார் முடிவெட்டிக் கொண்டு வரச் சொன் னது?கன்டினியூடி கெடாதா?" என்று கத்து வார்.

"சோபியா கூட வந்த கேடி பற்றிச் சொல் லலையே?" என்று அஷோக் சொன்னதும், ரோஹித் ஆரம்பித்தார்:

"சோபியா கூட, ஒரு நாயும் வந்திருந்தது. பெயர் பேபி. ஆனா அது சரியான கேடி! பார்த்தாலே பயங்கரமாக இருக்கும்! பந்தைத் தூக்கிப் போட்டு அதனிடம் பந்தை எடுத்துக் கொண்டுவரும்படி நாங்க சொன்னால் கேட் காது. ஆனால் சோபியா சொன்னதும் வாலை ஆட்டிக் கொண்டு போய் எடுத்துக் கொண்டு வரும்! சரியான ஜொள்ளு பார்ட்டி!

"என்ன சுமதி, வாயை மூடிக்கிட்டு சும் மாவே இருக்கே!" என்று அஷோக் கேட்டதும் "போப்பா! நான் இன்று காலை, காலேஜுக்குப் போய் ஹால் டிக்கெட் வாங்கியாகணும். லேட் ஆகிக் கொண்டிருக்கிறது" என்றார்.

"இருப்பா! கொஞ்ச நேரத்தில் போயிட லாம்" என்ற மேதா, "நானும் பி.சி. ஸ்ரீராம் சாரும் ஒரு விளையாட்டு விளையாடினோம்! என் கையில் மூன்று × குறிகளைப் போட்டு, இவர்கள் மூன்று பேர். ஒருவர் ஊமை. இன்னொருவர் நொண்டி, மூன்றாமவர் செவிடு. மூவரும் ஓட்டப் பந்தயத்தில் கலந்து கொள்ளுகிறார்கள். ஸ்டார்ட் சொன்னதும், ஊமை கிடுகிடுவென்று ஓடுகிறார். நொண்டி, மெதுவாக நடக்கிறார், ஆனால் செவிடு, இடத்தைவிட்டு, நகராமல் உட்கார்ந்து கொண்டே இருக்கிறார். ஏன்? என்று கேட் டார்..."

விடை: அவர்தான் செவிடாயிற்றே! ஸ்டார்ட் சொன்னது காதில் விழவில்லை.

மேதா தொடர்ந்தார்: ஆச்சரியமான விஷயம். அரவிந்தசாமியின் நினைவாற்றல். ஒன்றுமுதல் இருபத்தி ஐந்து வரை வரிசையாக எழுதிவிட்டு, அவைகளுக்கு எதிரே, ஒவ்வொரு பொருளின் பெயரை எழுதுவார். அதை இரண்டு நிமிடம் பார்த்துக் கொண்டால் போதும்! எந்த எண்ணைச் சொன்னாலும், அந்த எண்ணுக்குரிய ஐட்டத்தை சட்டென்று சொல்லிவிடுவார். எனக்கும், குஷ்புவுக்கும் இதைப் பார்த்து ஆச்சரியமான ஆச்சரியம். 'எப்படி இத்தனை கரெக்டாய்ச் சொல்லுகிறீர் கள்? எனக்குச் சொல்லிக் கொடுங்கள்' என்று கேட்டபோது 'இது சொல்லிக் கொடுத்து வரும் விஷயமில்லை! இங்கே (மூளையைத் தொட்டுக் காட்டி) விஷயம் இருக்கணும் என்று சிரித்த படி சொல்லிவிடுவார்."

**ம**ணிரத்னம் தன்னை அலைபாயுதே படத்தில் நடிக்கத் தேர்ந்தெடுத்தவுடன் என்ன உணர்வு ஏற்பட்டது என்பதை ஆக்ஷனுடன் விவரித்தார் மாதவன். ''ஸ்கிரீன் டெஸ்ட் எடுத்த அன்று மதியமே, 'நாம் இருவரும் சேர்ந்து படம் பண்ணறோம்' என்று சொல்லி விட்டார் மணி. அதற்கப்புறம் அவர் என்ன சொன்னார் என்று என் மண்டைக்குள் ஏறவே இல்லை. நேரே ஓட்டலுக்குப் போய், பாத்ரூமில் நுழைந்து, ஷவரைத் திறந்து விட்டேன். ஆ... ஊ... என்று இஷ்டம் போல, கத்தி, ஒரே மஜாதான்!

அனைவரும் ஒருமித்த கருத்தாய், தெரிவித்த ஒரே வருத்தம்: "ஷூட்டிங் முடிந்த தினம்! இந்த ஜாலியான அனுபவம் இனி எங்கே கிடைக்கும் என்று ரொம்ப வருத்தமாக இருந்தது!"

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**
படங்கள்: **ஸ்ரீஹரி**

# வெற்றிக்கு வழி

ஆம்! அதிர்ஷ்டமான பெயர் அமைத்தால் நீங்களும் கோடீஸ்வரர் ஆகலாம். பணம், பதவி, யாவும் கிட்டும். வெற்றிமேல் வெற்றிகளைக் குவிப்பீர்கள். இவ்வுலகில் அனுபவிக்கத்தக்க அனைத்து சுகபோகங்களையும் அனுபவிக்கலாம் என்று ஆணித்தரமாக அடித்துக் கூறுகிறார் கோவை மாவட்டம் அன்னூர் பு.புளியம்பட்டி அருகில் உள்ள கணுவக்கரையில் வசிக்கும் ஜோதிட விஞ்ஞானி கே.ஆர். பிரபாகர்ராஜ் அவர்கள். இவரது கருத்துக்கள் பின்வருமாறு:-



ஒரு மனிதனின் வெற்றிக்கும் தோல்விக்கும் மூலகாரணமாக இருப்பது பெயரும், கையெழுத்துமே ஆகும். ஒருவருடைய பெயரை முழுவதுமாக மாற்றத் தேவை இல்லை. சிறு திருத்தம் மட்டும் செய்தால் போதும். அதிர்ஷ்டப் பெயரால் மனித வாழ்வில் ஏற்படும் அனைத்துப் பிரச்சினைகளுக்கும் மிக நல்ல முறையில் தீர்வுகாண முடியும்.

அதிர்ஷ்டப் பெயர் அமைக்க நியூமராலஜி, நேமாலஜி, சைன், தொழில் வசியம், சிக்னேச்சராலஜி பெயர் வசியம், ஆர்க்கோலஜி, கிராபாலஜி, ப்யூசராலஜி போன்ற 9 வகையான காரணிகளையும் 12 வகையான இயக்கங்களையும் ஆதாரமாக வைத்து பெயர் சூட்டினால் பிரபலம் உண்டாகும். இது பூரணமாக விஞ்ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட சாஸ்திரமாகும். அதிர்ஷ்டப் பெயர் எண் சாஸ்திரப்படி முறையாகப் பெயரை மாற்றினால் உடனே அதிர்ஷ்டம் உண்டாகும்.

உங்கள் வெற்றிக்கு வழிகாட்டும்
**ஜோதிட மாமேதை கே.ஆர். பிரபாகர்ராஜ்**
**நியூமராலஜி-நேமாலஜி-சைன்-தொழில் வசியம்**



அதிர்ஷ்டப் பெயரை அமைத்துக் கொண்டால் அன்பான மனைவி (நல்ல மனைவி) அறிவுள்ள குழந்தைகள் வசதிமிக்க வீடு, வளமான தொழில், குறைவில்லாச் செல்வம் ஆரோக்கியமான உடல், இன்பகரமான வாழ்வு போன்ற அனைத்து அதிர்ஷ்டங்களையும் அள்ளித் தரும். தொழில் முடக்கம் வியாபார மந்தம் உத்தியோகத்தில் இடையூறு, கணவன் மனைவியர்க்கிடையே ஒற்றுமை இல்லாமை, செக்ஸ் கோளாறு, மனக்குழப்பம், போதைப் பொருளுக்கு அடிமை ஆகுதல், செய்வினை மாந்திரீக பாதிப்பு, தீய சக்தியால் பாதிப்பு திருமணத்தடை, குழந்தைபாக்கியம் இல்லாமை, முன்னேற்ற தடை, புகழ் இல்லாமை, மனநோய் போன்ற எண்ணற்ற வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கும் இக்கலையின் மூலம் நிரந்தரத் தீர்வு காண முடியும்.

பெயர் மாற்றத்தால் பெருஞ்செல்வர் ஆகலாம். பெயரை எந்த வயதிலும் அதிர்ஷ்டமாக மாற்றி வெற்றிகளைப் பெறலாம். முறையாகப் பெயர் அமைத்தால் முன்னேற்றம் உண்டாகும். சிலர் கடைகளில் விற்கும் பல வகையான புத்தகங்களை வாங்கி தாங்களே பெயர் மாற்றி குழம்பி வாழ்வில் பெருந்துன்பத்தை அடைந்தவர்கள் ஏராளம். RAJINI KANT (ரஜினிகாந்த்) என்ற பெயரையோ RAMBA (ரம்பா) என்ற பெயரையோ எல்லோருக்கும் வைக்க முடியாது. இது பொருந்தி வருபவர்களுக்கு மட்டுமே வைக்க வேண்டும். அப்போதுதான் அதிர்ஷ்டம் தரும்.



AJITH(அஜித்) என்ற பெயரையும் SIMRAN(சிம்ரன்) என்ற பெயரையும் ஆய்வு செய்தால் இதில் வசியம் இருக்கும். யாருக்கு எந்தப் பெயர் பொருந்தும் என்று நன்கு ஆய்வு செய்து பெயர் அமைத்தால் அதிர்ஷ்டம் உண்டாகும். செய்கின்ற தொழில் எதுவாக இருந்தாலும் அத் தொழிலில் வசியம் இருக்க வேண்டும். அப்படி தொழில் வசியம் இருந்தால் தான் தொழிலில் பெரும் பணம் சம்பாதிக்க முடியும்.

ஒரு மனிதனுக்கு விடாமுயற்சி, அயராத உழைப்பு, தர்ம குணம், தன்னம்பிக்கை போன்ற குணங்கள் இருந்தும் வாழ்வில் வெற்றி பெற முடியவில்லையெனில் அதிர்ஷ்டம் இல்லை என்பது நன்கு தெரிகிறது. இல்லாத அதிர்ஷ்டத்தை பெற இக்கலை வழிகாட்டும்.

வெற்றிபெற துடிப்பவர்களுக்கு இது ஒரு சிறந்த வழிகாட்டியாகும். இதை பயன்படுத்துபவர்கள் அனைவரும் வெற்றியுடன் வாழலாம். என்னால் சவால்விட்டு நிரூபிக்க முடியும். இக்கலையின் மூலம் எம்மிடம் அதிர்ஷ்டப் பெயர் அமைத்தவர்கள் அனைவரும் இன்று வெற்றி பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். உடலின் காந்த சக்தி உயிர்ப்பு சக்திக்கு தக்கவாறு பெயரையும் கையெழுத்தையும் அமைத்தால் அபரிமிதமான அதிர்ஷ்டங்கள் கிட்டும்.

எம்.ஜி.ஆர்., சிவாஜி கணேசன், ரஜினி காந்த், பாக்கியராஜ், விஜய், சூர்யா, குஷ்பு, ரம்பா, சிம்ரன், ரோஜா, விஜயகாந்த் போன்ற சினிமா துறையினர்களும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும். பெயரில் வசியம் கோபுராம்சம் இருக்க வேண்டும்.

அரசியலில் வெற்றி, சினிமாவில் புகழ், விளையாட்டில் சாதனை, தொழிலில் மேன்மைகிட்டும். அந்த கால இராஜ ராஜ சோழன், அக்பர், புத்தர், மகாவீரர், அசோகர், பொற்கை பாண்டியன், நெப்போலியன், பாரதியார், பாரதிதாசன், கண்ணதாசன், இந்திராகாந்தி, வீரமாமுனிவர், செல்வேல் சேரன், ஆதிசங்கரர், காஞ்சி பெரியவர் போன்றோரும் பெயர் மாற்றத்திற்குப் பின்பு பிரபலமானவர்களே ஆகும்.

அதிர்ஷ்டப் பெயர் சாதாரண மனிதனையும் பெரிய சாதனையாளராக ஆக்கக் கூடியது. கையெழுத்தால் தலை எழுத்தை வெல்லலாம்.

ஆண்-பெண் எந்த தேதியில் பிறந்தவராக இருந்தாலும் அவர்கள் திருமணம் செய்த நாளின் கூட்டு எண், திருமணத் தேதி, மாதம், வருடம் மூன்றையும் கூட்டி வரும் எண் 2,4,5,7,8 வரும் நாளில் கண்டிப்பாக திருமணம் செய்யக் கூடாது. அப்படி செய்தால் சோதனைகளும், போராட்டங்களும் நடக்கும். இதிலிருந்து விடுபட மறு மாங்கல்ய பூஜை அதிர்ஷ்ட நாளில் செய்து கொண்டால் குடும்ப வாழ்க்கை சந்தோஷமுடனும், வெற்றியுடனும் இருக்கும்.

அதிர்ஷ்டப் பெயர், எண் சாஸ்திரம் எக்காலத்திலும் மாறாத சக்தி கொண்டது. பெயரையும் இடும் கையெழுத்தையும் வளமாக்கிக் கொண்டால் என்றென்றும் வெற்றிகள்தான். இக்கலையின் மூலம் நான் சவால்விட்டு நிரூபித்துக் காட்டிய அறிவியல் விஞ்ஞான சாஸ்திரமாகும்.

இவர் எழுதிய (உலகின் No:1 நியூமராலஜி நூல்)

**"அதிர்ஷ்ட பெயர் எண் சாஸ்திரம்"**

என்னும் புத்தகத்தை வாங்கிப் படியுங்கள். எல்லா ஊர் புத்தக கடைகளிலும் கிடைக்கும். (தபால் மூலம் பெற ரூ. 300/- M.O. செய்யுங்கள். வெளிநாட்டினர் ரூ.1000/- அனுப்புங்கள்.)


**அதிர்ஷ்ட விஞ்ஞான ஜோதிடர்**
கே.ஆர். பிரபாகர்ராஜ் எம்.ஏ.,
நல்லாந்தோட்டம், கணுவக்கரை (அஞ்சல்),
புஞ்சைபுளியம்பட்டி (வழி) - 638 459.
கோவை மாவட்டம்.
போன்: (04254) 87258, (098422)-13566.
விடுமுறை: செவ்வாய், வியாழன்


**நீங்களும் அதிர்ஷ்டம், புகழ், வெற்றி பெறலாம்.**

# குறையொன்று

'புவியும் இரு விசும்பும் நின் அகத்த' - எல்லாவற்றையும், சமஸ்தத்தையும் எம்பெருமான் தன்னுள்ளே அடக்கி வைத்துக்கொண்டிருக்கிறான். அப்படிப்பட்ட எம்பெருமான் உன் பிரபாவத்தைக் கேட்டுக் கேட்டு நீ என் செவியுள் வழி புகுந்து என்னுள்ளே இருக்கிறாய். உன்னை நான் கேட்டுக் கேட்டு, உள் வாங்கியதிலே அப்படியே என்னுள்ளே இருக்கிறாய். எல்லாவற்றையும் தாங்குபவனே! உன்னை நான் என்னுள்ளே அடக்கியிருக்கிறேன் இப்போது!

இப்போது சொல்! 'யான் பெரியன் நீ பெரியை என்பதனை யார் அறிவர்?' - ஹே நாராயணா! விஷ்ணோ! நீ சொல்லு! நான் பெரியவனா? நீ பெரியவனா? என்று பகவானையே கேட்கிறார் ஆழ்வார்!

ஆகையினாலே இங்கே என்ன தெரிகிறது? பகவானைக் காட்டிலும் அவனைத் திருவுள்ளத்திலே தேக்கி வைத்துக்கொண்டிருக்கிற அந்த உத்தமோத்தமர்களான பாகவதோத்தமர்கள் இருக்கிறார்களே, அவர்கள் ஏற்றமுடையவர்கள்.

அதனாலே விஷ்ணுவினுடைய ஆராதனத்தைக் காட்டிலும் அந்த விஷ்ணுவினுடைய பாதாரவிந்தத்திலே அசஞ்சல பக்தி படைத்த பாகவதோத்தமர்கள் - விஷ்ணுவையே தியானம் பண்ணிக்கொண்டிருக்கிற மகான்கள் - இவர்களே உயர்ந்தவர்கள்.

இப்படிப்பட்ட உயர்ந்தவர்களின் திருவடியை ஆச்ரயிப்பது உயர்ந்தது என்கிறார்கள்.

கம்ப ராமாயணத்திலே பாகவதோத்தமர்களுடைய ஏற்றத்தை அழகாக எடுத்துக் காட்டுகிறார். அதிலே, கதையினூடே நாம் பார்த்துக்கொண்டே வந்தோமானால், அந்த பாகவதோத்தமர்களின் உயர்வை கம்பன் காட்டுகிற அழகே அழகு.

ராமனுக்குப் பட்டாபிஷேகம் நடக்காமல் போய், அவன் கௌசல்யையைப் பார்க்க அந்தப்புரத்துக்கு வருகிறான்.

எப்படி வருகிறான்...?

குழைக்கின்ற கவரியின்றி கொற்ற
வெண் குடையுமின்றி
இழைக்கின்ற விதிமுன் செல்ல தர்மம்
பின் இரங்கி ஏக
மழைக்குன்றம் அனையான்...
போகிறான்!

ஒருவனாக - ஒரு ராஜ உபசாரம் இல்லாமல் போகிறான். வெண் கொற்றக் குடை இல்லை. சாமரம் வீசப்படவில்லை; ராஜ விருதுகளெல்லாம் சொல்லப்படவில்லை. தான் தனி ஒருவனாக, ராமன், கௌசலைக்கு எதிரிலே வந்தான்.

பட்டாபிஷேக சித்தனாக, அழகாக வருவான் என்று எதிர்பார்த்தவள், ராமனைப் பார்த்து, 'அப்பா ராமா! பட்டாபிஷேகம் நடக்கவில்லையா?" என்றாள்.

அப்போது ராமன் பதில் சொல்கிறான்.

"ஒரு கெட்ட குணமும் சொல்ல முடியாத பரதனுக்குப் பட்டாபிஷேகம்" என்றான்.

அதைக் கேட்டவுடனே ராம மாதா கலங்க வேண்டாமோ? தசரதனின் திருவடியிலே போய் விழுந்து கதற வேண்டாமோ?

ஆனால் அவன் என்ன சொல்கிறாள், பாருங்கள்...

"இதுவரைக்கும் இக்ஷ்வாகு வம்சத்திலே மூத்தவனிருக்க இளையவனுக்குப் பட்டம் கட்டியது கிடையாது. அந்த ஒரு சின்ன தோஷம் சொல்லலாமேயொழிய, தீர ஆராய்ந்து பார்த்தால், உன்னைக் காட்டிலும் பரதன் ரொம்ப நல்லவன்" என்று கூறிவிட்டான்!

ராமனைக் காட்டிலும் பரதன் ரொம்ப நல்லவன். எவ்வளவு மடங்கு நல்லவன்...?

'மும்மையில் நிறை குணத்தான்' - மூன்று மடங்கு உயர்ந்தவன் என்றாள் கௌசல்யை.

ராமனுக்குப் பட்டாபிஷேகம் ஆவதற்கு முன் கௌசல்யை சொன்ன விஷயம் இது! இப்படியே ராமாயணத்தைச் சொல்லிக்

கொண்டு போவோம். – குகனுக்கு எதிரே பரதன் நிற்கிறான். 'வந்தெதிரே தொழுதானை வணங்கினான்.' ஒருத்தருக் கொருத்தர் வணங்கிக் கொள்கிறார்கள். அப்புறம் குகன் பரதனைப் பார்த்துக் கேட்கிறான்:

''மூத்தண்ணா ராமன் பித்ருவாக்ய பரிபாலனம் என்று காட்டுக்கு வந்தான். நீ எதற்கு வந்தாய்?''

''இதுவரைக்கும் மூத்தவன் இருக்க இளையவனுக்குப் பட்டாபிஷேகம் நடத்தியது கிடையாது. அது இப்போது மாறிப் போய் விட்டதே. அதனால் ராமனை அழைத்துக்கொண்டு போய் பட்டாபிஷேகம் பண்ணி அழகு பார்க்க வேண்டும் என்பதற்காக வந்தேன்...''

– பரதன் இப்படிச் சொன்னவுடனே

# மிலிலை



குகன் அப்படியே அவன் திருவடியில் விழுந்து, சிரஸைத் திருவடியிலே வைத்து, பரதனைப் பார்த்து ஸ்தோத்திரம் பண்ணுகிறான்.

''பித்ரு வாக்ய பரிபாலனம் என்று காட்டுக்கு வந்த ராமனைக் காட்டிலும் வம்ச

# 67

# அருள்வாக்கு

இயற்கையாக ஒருத்தனுக்கு அந்திமத்தில் ஏதாவது கன்னாபின்னா நினைப்புக்களே வரலாம். ரொம்பப் பேருக்கு அப்படித்தான் வருகிறது- அல்லது ஸ்மரணையே தப்பிப் போய்விடலாம். ஆனால் இந்த மாதிரி ஸமயத்தில் பக்கத்தில் இருக்கிறவர்கள் பகவந் நாமாவையே கோஷித்துக் கொண்டிருந்தால் அது அவனை மற்ற நினைப்பிலிருந்து இழுத்துக் கொண்டே இருக்கும். ஸ்மரணை ஏதோ லவலேசம் ஒட்டிக் கொண்டிருந்தால்கூட, அந்த உள்பிரக்ஞையில் ஒரு வேளை ஈச்வர நாமா சுரீல் என்று ஒரு தைப்பு தைத்தாலும் தைக்கும். அவனுக்குத் தானாக பகவான் நினைவு வராமல், வாழ்நாள் முழுதும் நினைத்த விஷயங்கள்தான் அந்திமத்திலும் நினைவுக்கு வந்தாலும், மற்றவர்கள் இப்படி நாமோச்சாரணம் பண்ணி அதனால் அவனுக்கு மற்ற நினைவுகள் அமுங்கி பகவானின் நினைப்பு ஏற்படும்படிப் பண்ணலாம்.



நாம் எங்கேயோ ஒரு பீச்சுக்குப் போகிறோம்; அல்லது சினிமாவுக்குப் போகிறோம். கண்டதை நினைத்துக் கொண்டு அரட்டை அடித்துக் கொண்டுதான் போகிறோம். ஆனால் போகிற வழியில் ஏதாவது ஒரு ஸத்ஸங்கத்திலிருந்து ''ஹர ஹர மஹாதேவா'', ''ஹரேராம ஹரேராம ராமராம ஹரேஹரே'' என்கிற மாதிரி ஒரு கோஷம் வந்தால், சட்டென்று நம்முடைய கன்னபின்னா நினைப்புப் போய், பகவந்நாமா க்ஷண காலம் மனஸுக்குள் போய் நம்மைக் கொஞ்சம் உருக்கி விடுகிறது. நாமாவுக்கு அப்படி ஒரு சக்தி இருக்கிறது ஆனதால் வாழ்க்கைப் போராட்டத்தின் முடிவிலே ஒரு ஜீவாத்மா உயிருக்காகப் போராடிக் கொண்டு மனஸ் நாலா திசையிலும் அலைபாய்கிறபோது, அல்லது ஸ்மரணை தப்பிக் கொண்டிருக்கிறபோது பக்கத்திலே இருக்கிறவர்கள் பகவந்நாமாவை கோஷித்துக் கொண்டிருந்தால், அது அந்த ஜீவாத்மாவை அதன் மூலமான பரமாத்மாவிடம் இழுப்பதற்கு ரொம்பவும் சக்திகரமான (effective) வழியாக இருக்கும். ஒருத்தன் எத்தனை துன்மார்க்கத்தில் போனவனாயிருந்தாலும், அந்தக் கடைசி நாழியில் இந்த ஸம்ஸாரத்திலிருந்து தப்புவதற்கு பகவானைப் பிடித்துக் கொள்ளத் தவிக்கத்தான் செய்வான். அவனுக்குத் தானாக அந்தத் தாபம் வராவிட்டால்கூட நாம் உண்டாக்கித் தந்து விட்டால் பிடித்துக் கொண்டு விடுவான்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

முறை கெடுகிறது என்று ராமனை அழைத்துப் போக வந்திருக்கிறாயே, உன்னுடைய நிலையைப் பார்த்தால் ஆயிரம் ராமன் உனக்குச் சமானம் ஆவரோ? ஆக முடியுமா?'' என்றான்.

கௌசல்யை, 'மூன்று ராமனுக்கு நீ சமம் என்றாள். குகனோ 'ஆயிரம் ராமன்' என்கிறான். அதற்கடுத்து பாருங்கள்... கதையை அப்படியே தள்ளிக்கொண்டு போனோமானால், பரதன் ராம பாதுகையை வாங்கிக்கொண்டு விட்டான். ராமனைப் பார்த்துச் சொல்கிறான்: ''பதினான்கு ஆண்டுகள் கழித்து சரியாக வந்து ராஜ்யத்தை அன்றைய தினம் ஏற்கவில்லையானால் அக்னியிலே விழுந்து விடுவேன்'' என்றான்.

'அதே பிரகாரம் வந்து விடுகிறேன்' என்றான் ராமன்.

ரொம்ப சந்தோஷம் பரதனுக்கு. சந்தோஷத்தோடு உயர்ந்த பாதுகைகளை சிரஸிலே எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சத்ருக்னனோடு நந்தி கிராமத்துக்குப் புறப்பட்டுப் போய்விட்டான்.

விசேஷ ஆராதனம் பண்ணினான் பரதன். 14 ஆண்டு ஓடிப் போய்விட்டது! அன்றைக்கு வந்து ராமன் ஏற்றுக் கொள்ள வேண்டும் பொறுப்பை. ஏற்றுக் கொள்ளவில்லையானால் தீயிலே விழுந்து விடுவதற்காக என்ன பண்ணினான்... பிராத: காலமே பெரிய ஹோமம் – அக்னி குண்டத்திலே வளர்த்து விட்டான். அதைச் சுற்றி சுற்றி வருகிறான் பரதன்! அக்னிப் பிரவேசம் பண்ணுவதற்குத் தயாராகிவிட்டான்.

அயோத்தியா காண்டத்தில் பேசிய அதே கௌசல்யை, அக்னியைப் பிரதக்ஷிணம் பண்ணிக் கொண்டிருக்கிற பரதனைப் பார்த்து ஓடி வந்து, "அப்பா, பரதா! நீ என்ன காரியம் செய்யத் துணிந்தாயடா! 'எண்ணில் பல்கோடி ராமதிருந்தென்னில், அண்ணலே நின் அருளுக்கு அருகாவரோ? புண்ணியம் எனும் நின்னுயிர் போயினால் மண்ணும் விண்ணும்

உயிர்களும் வாழுமோ?' என்றாள்.

'பல கோடி ராமர்கள் இருந்தாலென்ன போனாலென்ன!' என்று கூறி விட்டாள் கௌசல்யை.

'எண்ணில் பல் கோடி!' - நூறு போய், ஆயிரம் போய், "கோடிக்கணக்கான ராமர்கள் இருந்தாலென்ன? நீ ஒருத்தன் இல்லையானால், புண்ணியம் என்னும் நின் உயிர் போனால் இந்தப் பூமி நிலைக்குமாடா? அந்தரிக்ஷம் நிலைக்குமா? என்ன காரியம் பண்ணத் துணிந்தாய்? நிறுத்து! நிறுத்து!" என்கிறாள்.

உபநிஷத் இருக்கிறதே - தைத்ரிய உபநிஷத், அது நூறு நூறாகப் பெருக்கிக் கொண்டே போகிறது - பரப்பிரும்மத்தினுடைய ஆனந்தத்தைச் சொல்ல வேண்டும் என்பதற்காக மனிதர்களுடைய ஆனந்தத்தைச் சொல்லி, அதற்கு மேல் தேவ - கந்தர்வர்களுடைய ஆனந்தத்தைச் சொல்லி, அதற்கு மேல் இந்திரனுடைய ஆனந்தத்தைச் சொல்லி, அதற்கு மேல் பிருஹஸ்பதியினுடைய ஆனந்தத்தைச் சொல்லி, அதை நூறாலே பெருக்கினால், அது பரப்பிரும்மத்தினுடைய ஆனந்தம் என்று சொல்லி, மறுபடியும் அந்தப் பரப்பிரும்பத்தினுடைய ஆனந்தத்தைக் கொண்டு வந்து மனித ஆனந்தத்திலே வைத்து, மறுபடியும் நூறு நூறாக, நூறு நூறாகப் பெருக்கி, பெருக்கி... இன்றைக்கு வரைக்கும் பெருக்கிக் கொண்டிருக்கிறது! அப்படியும் அந்தப் பரப்பிரும்மத்தினுடைய ஆனந்தம் எது என்று சொல்லவே முடியவில்லை. 'ஆனந்த மயோப்யாஸா' - அப்யாஸம் என்றால் திரும்பத் திரும்ப அளந்து கொண்டேயிருப்பது. பெரிய பெருக்கல் வாய்ப்பாடு! அதைப் பண்ணிக் கொண்டேயிருக்கிறது உபநிஷத். அப்படியும் முடிவை எய்த முடியவில்லை.

ஆக, வேத வாக்கினாலேயே அவனுடைய ஆனந்தத்தின் பெருமையைச் சொல்ல முடியாமல் திரும்பி வந்து கொண்டிருக்கிறது.

அப்படி வேதத்தில் சொல்கிற மாதிரி, இங்கே ஒரு அழகான விஷயம். கம்பராமாயணத்திலே - நாம் ஒரு ஜவுளிக் கடைக்குப் போகிறோம் - கடைக்குப் போய் இத்தனை மீட்டர் துணி என்று கேட்கிறோம். உடனே கடைக்காரர் என்ன பண்ணுகிறார்... பெரிய 'பண்டிலை' எடுத்து, கீழே வைத்து, மீட்டர் ஸ்கேல் இருக்கிறது' பாருங்கள், அதை வைத்துக் கொண்டு இந்தத் துணியை இழுத்துப் போட்டு அளக்கிறார்.

அங்கே நாம் காணும் காட்சி என்ன...?

அளவுகோல், அளக்கப்படும் பொருள் என்று இரண்டு. அளக்கப்படும் பொருள் பெரியது. அளவுகோல் சிறியது.

சிறியதான அளவுகோலைக் கொண்டு, பெரிய பொருளை அளத்தல்.

அந்த மாதிரி ராமாயணத்திலே அளக்கப்பட்டவன் ஒருவன். அளவுகோல் ஒருவன். அளவுகோல் சிறியது; அளக்கப்படும் பொருள் பெரியது.



பாபன்காளின் புகழ் பெற்ற 'அ தார்கி பஞ்சே' என்னும் மேடை நாடகம் கடந்த 35 வருடங்களாக 10,000முறைக்கும் மேல் மேடை ஏறி உலக சாதனை புரிந்துள்ளது. அன்றிலிருந்து இன்று வரை இவரது ஷர்வானி, டிபன் காரியர், குடை இந்த மேடை நாடகத்தில் மாறாத அத்தியாவசமான பாத்திரங்கள் ஆகிவிட்டது குறிப்பிடதக்கது. இந்த நாடகம் இந்தியாவில் பல இடங்களிலும் பல்வேறு நாடுகளிலும் நடிக்கப்பட்டுள்ளது. கின்னஸ் சாதனையிலும் இடம் பெற்றுள்ளது.

— மஞ்சுதேவன்

அளக்கப்பட்டவன் யார்...? - பரதன்.

அளவுகோல் யார்...? ராமன்.

ராமன் சிறியவன்; பரதன் பெரியவன்! நூறு ராமன், ஆயிரம் ராமன், பலகோடி ராமன் என்று ராமனாலல்லவோ பரதன் அளக்கப்பட்டான்!

பகவத் பிரபாவத்தைக் கொண்டு பாகவத பிரபாவம் அளக்கப்பட்டது என்று அர்த்தம். எத்தனை நாள் அளந்தாலும் பாகவத பிரவாவத்தை அளக்க முடியுமோ? அவனைக் காட்டிலும் எத்தனையோ மடங்கு. அவனாலேயே சொல்ல முடியாத அளவு பெருமை மிக்கவர்கள் பாகவதோத்தமர்களான அவனது அடியவர்கள்.

(தொடரும்)

‘தாய்’ பத்திரிகை நின்று போனவுடன் வேறு பல பத்திரிகைகளில் வேலைக்காக முயற்சி செய்தேன். முழு நேரப் பத்திரிகையாளனாக பணியாற்ற வேண்டுமென்பதே என் ஆசை. பிரபல வாரப் பத்திரிகை ஒன்றில் பிழை திருத்தும் வேலை கிடைத்தது.

# கல்லில் கவிதை!



முதல்நாள் வேலை பார்த்து வெளியே கிளம்ப கேட்டுக்கு வந்தபோது சட்டைப் பைகளை சோதனை போட்டார்கள். ‘மனிதனை மனிதன் நம்பாத இந்த இடத்தில் வேலை செய்வதா’ என்று அந்த வேலைக்கு டாடா சொல்லி விட்டேன். அப்புறம் ஒரு தினப் பத்திரிகையில் நிருபர் வேலைக்கு மனு போட்டேன். பரீட்சை வைத்தார்கள். இதுவரை முடிவு தெரியவில்லை. சினிமா பிரமுகர் நடத்தும் வாரப் பத்திரிகையில் வேலை கிடைத்தும் ‘இலக்கியவாதிகளுக்கு அங்கு என்ன பண்ண முடியும்’ என்ற சந்தேகத்தில் அந்த வேலைக்குப் போகவில்லை. Pressல் (பத்திரிகை) வேலை செய்யாவிட்டாலும் அச்சகங்களை (Press) பார்த்துக்கொள்ளும் பொறுப்பு வந்தது. இந்த நிலையில்தான் டைரக்டர்கள் விக்ரமன், சுந்தர்.சி ஆகியோரது ஆதரவுடன் திரையுலக கவிஞனாக வலம் வரத் துவங்கினேன். ஆனால் பத்திரிகையாளன் என்ற கனல் நெஞ்சில் இன்னமும் அணையாமல் இருக்கிறது.

காகிதத்தில் கவிதை வடிக்கும் நான் வேறு ஒருவரின் விருப்பம் நிறைவேறி இருந்தால் கல்லில் கவிதை வடித்திருப்பேன். என் பெற்றோருக்கு நான் ஐந்தாவது குழந்தை. என்னை தத்து கேட்டார் தந்தையின் நண்பரான அந்தப் பிரமுகர். ஆனால் என் தாயார் அதற்கு ஓ.கே சொல்லவில்லை. பின்னர் என் திருமணத்திற்கு வந்து தாலி எடுத்துக் கொடுத்தார் அந்த பிரமுகர். அந்தப் பிரமுகரின் விருப்பப்படி அவருக்கு தத்துப்பிள்ளையாகச் சென்றிருந்தால் வள்ளுவர் கோட்டத்தை நிர்மாணித்தபோது என் உளியின் சத்தமும் கேட்டிருக்கும். ஆமாம்! என்னை தத்தெடுக்க விரும்பியவர் பிரபல சிற்பி கணபதி ஸ்தபதிதான்.

— ரமா

**வி.ஐ.பி. விருப்பம்!**

# ஸ்ரீ சங்கராலயா டிரஸ்ட், தேவகோட்டை.



ஜகத்குரு ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாச்சார்யாருக்கு சிவகெங்கை மாவட்டம் தேவகோட்டை நகரில் (திருப்பத்தூர் ரோடு, பஞ்சாயத்து யூனியன் அலுவலகம் அருகில்) தனி ஆலயம் நிர்மாணம் செய்யப்பட்டு 30.6.1999 தேதியன்று ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் முன்னிலையில் விக்ரக ப்ரதிஷ்டையும் நூதன மஹா கும்பாபிஷேகமும் நடைபெற்றன. ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களுடைய அருளுரையில் ஆதிசங்கரரின் ஜோதி இந்த ஆலயத்தில் வந்து அமர்ந்திருப்பதாகக் கூறினார்கள். ஆலயத்தைச் சுற்றி ஆதிசங்கரரின் க்ரந்தங்களிலிருந்து சில பகுதிகள் கிரானைட் கற்களில் பொறிக்கப்பட்டிருக்கின்றன. மண்டபத்தின் மேல் ஷண்மத ஸ்தாபனத்தைக் குறிக்கும் வகையில் சூர்யன், அம்பாள், விஷ்ணு, கணேசர், மஹேசர், சுப்பிரமணியர் ஆகியோரின் சுதை விக்கிரங்களும் முகப்பில் நான்கு சீடர்களுடன் ஆதிசங்கரரின் உருவமும் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆலய விமானம் ஸ்ரீ காசி க்ஷேத்திரத்திலுள்ள விஸ்வாநதர் ஆலயபாணியில் அமைந்துள்ளது. தென் தமிழகத்திலேயே ஆதிசங்கரருக்காக அமைந்துள்ள திருக்கோவில் இது ஒன்றேயாகும்.

இந்த ஆலயத்தை பக்தர்கள் தரிசித்து ஸ்ரீ ஆசார்யாரின் அருட்கடாட்சத்தைப் பெற அழைக்கிறோம். ஆலயத்தில் விஸ்தரிப்புப் பணிகள் மேற்கொள்ள வேண்டியிருப்பதில் ரூ. 5 லட்சம் வரை தேவைப்படுகிறது. பக்தர்கள் கணிசமாக நிதியுதவி செய்யுமாறு கோருகிறோம். நன்கொடைகள் **"ஸ்ரீ சங்கராலயா கமிட்டி, தேவகோட்டை"** என்ற பெயருக்கு காசோலை அல்லது டிராப்ட் மூலம் அதன் தலைவருக்குப் பின்வரும் முகவரிக்கு அனுப்பலாம்.

**எஸ். ராமச்சந்திர அய்யர், அட்வகேட்,**
**"சத்யா"**
**ஆஸ்பத்திரி ரோடு,**
**தேவகோட்டை – 630 302.**

** நித்ய பூஜை நிதிக்காக ரூ. 1000/- அனுப்பினால் ஒவ்வொரு ஆண்டும் நன்கொடையாளர் குறிப்பிடும் தேதியில் விசேஷ பூஜை செய்து பிரசாதம் அனுப்பி வைக்கப்படும்.



# வட்டமேஜை

✉ நடுநிலையான மக்கள் த.மா.காவிடம்தான் நிறைய எதிர்பார்த்தார்கள் என்ற தங்களின் கேள்வி என் போன்ற பல்லாயிரக்கணக் கானவர்களின் எண்ணத்தின் பிரதிபலிப்பு. அதற்கு சோ.பா. அளித்த பதில் விநோதமானது. எப்படி அவரது தலைவர் மூப்பனார் அரசியலில் சறுக்கினாரோ அது போலவே இவர் பதில் சொல்கிறார்.

மயிலாடுதுறை,
ஆர். பழனிவேல்.




✉ ஐந்து பாடல்களுக்கு அமர்க்களமாய் மெட்டமைத் துள்ள ஏ.ஆர். ரகுமான் பற்றி, 'அலைபாயுதே' விமர்சனத்தில் ஒரு வரி கூடக் குறிப்பிடாத உமது சினிமா விமர்சகரைப் பாகிஸ்தான் சிறைக்குத்தான் அனுப்ப வேண்டும்!

சூரம்பட்டி,
டி.என். சத்யா முருகவேல்.

✉ வி. ராஜகோபாலனின்

ஆங்கிலமே அருகில் வா! ஆரம்பமே படு அசத்தல்.

சாத்தியாகுளம், க. பாக்யமலர்.

✉ தலையங்கம் அருமை. கிரிக்கெட் மூலம் வீரர்களுக்குக் கிடைக்கும் கோடிக்கணக்கான பணத்தில் பெருமளவு அரசுக்குச் சேரும்படி செய்ய வேண்டும். மேலும் நமது அணி தோற்று விட்டால் வீரர்களுக்குப் பணமே அளிக்கக் கூடாது. அப்போது தான் இவர்கள் நோட்டுக்காக விளையாடாமல் நாட்டுக்காக ஆடுவார்கள்.

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ 'கல்கி'யில் வெளியாகும் கவிதைகள் அருமையாக உள்ளன. ஆனால் என்னைப் போன்ற கவிதைப் பிரியர்களுக்கு ஒரு ஆதங்கம். இரண்டு அல்லது மூன்று பக்கங்களாவது கவிதைகளுக்காக ஒதுக்கப் பட்டால் மிகவும் நன்றாக இருக்கும்.

மதுரை, கே. எஸ். ரிது.

✉ முறையா? தகுமா? தர்மம்தானா? படித்தேன். 'குளம் கழிப்பிடமாக இருப்பதை விட மக்களின் களிப்பிடமாக அதை மாற்றுவது நல்ல விஷயம்தானே? வருமானம் தரக்கூடிய ஐடியாவும் கூட!' என்ற சீர்காழி சிவசிதம்பரத்தின் பதிலைப் படித்ததும் சீர்காழியின் புதல்வர், ஆளுங்கட்சியின் சார்பில் சட்டமன்றத் தேர்தலில் போட்டியிடலாம் என்று தோன்றியது. அந்தத் தகுதி அவருக்கு வந்து விட்டது.

கும்பகோணம், டி.எஸ். சீதாராமன்.

✉ நேர்மை, நாணயம், தர்மம் போன்றவை அரசியல் வாதிகளுக்கு மட்டுமில்லைதான். ஆனால் பீட்டர் அல்போன்ஸ் போன்றோர் இவற்றைக் கடைப்பிடித்து மக்களுக்கு முன்னுதாரணமாகத் திகழலாமே!

காரைக்குடி, பாலு.

✉ விஜயவாடா மேயர் அனுராதாவின் பேட்டி அருமை. ஆந்திர முதல்வர் சந்திரபாபு நாயுடுவை நிச்சயம் பாராட்ட வேண்டும். வேட்பாளர் தேர்வில் பொது அறிவைச் சோதித்து சீட் வழங்கிய முறை பாராட்டுக்குரியது. கல்வித் தகுதியும் பொது அறிவும் படைத்தவர்கள் பதவிக்கு வந்தால் நாட்டுக்கு நல்லது.

கட்டணாச்சம்பட்டி, எஸ்.பி. சண்முகம்.

✉ எல்.கே.ஜி. அரசியல்வாதி என்று தலைப்பிட்டிருந்தபோதிலும் அனுராதாவின் நேர்காணலில் தெரிந்தது 'P.G.'யின் முதிர்ச்சி! வித்தியாசமான அரசியல்வாதி; அரசியல் வானில் ஜொலிக்கட்டும் என்று வாழ்த்தத் தோன்றியது.

நெய்வேலி, சாந்தி சுந்தர்.

✉ அறிமுகமான முதல் படத்திலேயே புகழின் உச்சியை அடைந்த ஹிர்த்திக் ரோஷனின் பேட்டி இனிமையாக இருந்தது. அதோடு நம் தமிழ்நாட்டு நடிக - நடிகையரின் பேட்டியைப் படித்துப் படித்து அலுத்துப் போன மனத்திற்கு 'ஹிர்த்திக்கின்' பேட்டி மாறுதலையும் வழங்கியது.

ஈரோடு - 1, எஸ். ரஜினிப்ரியன்.



வாழ்க்கையைச் சிலர்
கதை என்பார்கள்- நாங்கள்
கவிதை என்கிறோம்...

மின் பிம்பங்களின்

ஜன்னலில்

# மரபுக் கவிதைகள்

எண்ணம்
எழுத்து
இயக்கம்

கே.பாலசந்தர்
வேதம் கே.கண்ணன்



மே 5 முதல் வெள்ளி தோறும்
இரவு 9.00 மணிக்கு உங்கள் RAJ TV யில்

# ராஜகாளி அம்மன்



கோயில் நகைகளைத் திருடிய கரணின் குடும்பத்தைத் தண்டிக்கக் கூடப் பிடிக்காமல் வெறுத்துப் போய் ஊரைவிட்டு வெளிநடப்பு செய்து விடுகிறார் ராஜகாளி அம்மன். அவர் குடிபுகும் ஊரில் அவருக்கு உணவளித்து அவரின் பூரண அனுக்கிரஹம் பெறுகிறார்கள் அண்ணன் - தங்கை ஜோடி வடிவேலு - கௌசல்யா. கௌசல்யாவால் தனக்கு இறப்பு என்று ஜோசியர் சிவசந்திரன் மூலம் அறிந்துகொள்ளும் கரண், கௌசல்யாவைத் தீர்த்துக் கட்ட மந்திரவாதி நிழல்கள் ரவியின் உதவியை நாட, எல்லா முயற்சிகளையும் முறியடிக்கிறார் அம்மன். கரண், கௌசல்யாவைத் திருமணம் செய்து கொண்டு அவரை அம்பாளிடமிருந்து பிரிப்பதுதான் இதற்கு ஒரே வழி என்று ஜோசியர் ஐடியா கொடுக்க, திருமணம் நடக்கிறது. அடுத்த நொடியிலிருந்து கௌசல்யா கேவலமாக நடத்தப்பட, வடிவேலு கொல்லப்பட, கௌசல்யாவைக் கொல்ல கரண் நாள் பார்க்க, அவரைக் கொல்ல அம்மன் நாள் பார்க்க, கடைசியில் கௌசல்யாவின் தாலி பாக்கியம் கரணைக் காப்பாற்றுகிறதாம்!

கதை இவ்வளவு தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது போலும் என்று சப்புக் கொட்டிக் கொண்டு அடுத்த ஷோவிற்கு ரிசர்வ் செய்து போனீர்களோ, தொலைந்தீர்கள்! இது, யாம் பிரம்மபிரயத்தனம் செய்து உங்களுக்காகச் சேகரித்த ஸ்டோரி-லைன். 'அம்பாள் பிராமிஸ்' ஆக சொல்லுகிறேன் சேகரிப்பதற்குள் நுரை தள்ளிவிட்டது போங்கள்.

கல்யாணத்தை பர்சனலாக அடெண்டு செய்ய முடியாவிட்டால் அம்மனால் அதைத் தடுத்து நிறுத்த முடியாது என்று கரண் ஒரு பேத்தல் கணக்கைப் போட்டு வடிவேலுவை பிரெயின் வாஷ் செய்ய, வடிவேலு, "திருமணத்திற்கு வராதே!" என்று அம்பாளுக்கு அன்புக் கட்டளையிட, அம்பாள் கைகளைப் பிசைந்து கொண்டு நிற்க, உண்மையில் பேத்தல் பார்ட்டி கரணா, டைரக்டரா, இதைத் திறந்த வாய் மூடாமல் பார்க்கும் நாமா, அந்த அம்பாளுக்கே வெளிச்சம்!

கரணின் அத்தைப் பெண் காயத்ரியாகதான் அவதாரம் எடுத்திருப்பது திருட்டுக் குடும்பத்தைத் தண்டிக்க என்கிறார் அம்மன் ஓர் இடத்தில். பக்தன் வடிவேலுவைக் கொலை செய்த பாவத்திற்குத் தண்டிக்க என்று பிளேட்டையே திருப்புகிறார் இன்னொரு இடத்தில். சரி, எதற்கோ இருந்துவிட்டுப் போகட்டும் என்று பார்த்தால் எல்லா இடங்களிலும் தன்னுடைய சூப்பர் நாச்சுரல் பவர்களைத்தான் பயன்படுத்துகிறாரே தவிர மானிட அவதாரத்தைத் துளிக் கூட யூஸ் பண்ணக் காணோமே, பின் இந்த அவதார பிஸினஸ் எதற்காக?

இருக்கிற கடுப்பு போதாதென்று யாகம் செய்கிறேன்; தெய்வத்தைத் தோற்கடிக்கிறேன் என்று ரிப்பன் விட்டுக் கொண்டு மந்திரவாதி நிழல்கள் ரவி ஒரு நீள கஃப்தானையும் போட்டுக் கொண்டு 'ஆ, ஊ' என்று வந்து விடுகிறார்.

அம்பாள் என்றால் முதலில் கண்களில் காருண்யம் வேண்டும். ரௌத்ரம் எல்லாம் அதற்கு அப்புறம்தான். அப்படியிருக்க, ஆளை வீழ்த்தும் கண்களைக் கொண்ட ரம்யா கிருஷ்ணனை அம்பாளாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள் என்று இராம நாராயணன் நம்மை 'கன்பாயிண்ட்டி'ல் மிரட்டுவது அநியாயம்!

— கிருஷ்ணா சிதம்பரம்



# நான் உங்கள் பயணி!

ஆட்டோவில் ஏறி அமர்ந்த அந்தப் பிரமுகர் கேட்டார். "நான் இப்போது யார்?'' ஓட்டுநர் பெண்மணிக்கு ஒன்றுமே புரியவில்லை. பிரமுகரே தொடர்ந்தார். "நான் இப்போது உங்களுடைய பயணி; எங்கே சவாரி கிளம்புங்க பார்க்கலாம்'' வண்டியை ஸ்டார்ட் செய்யப் பார்க்கிறார். பதற்றத்தில் வேர்த்து விறுவிறுக்கிறது அவருக்கு. கொஞ்சம் வழக்கமான தகராறு செய்துவிட்டு கிளம்புகிறது வண்டி. போலீஸ்காரர்கள் பின்னாலேயே ஓடுகிறார்கள். அவர்களை வர வேண்டாம் என்று கை காட்டுகிறார் பிரமுகர். நூறு மீட்டர் தூரம் சென்று மீண்டும் புறப்பட்ட இடத்துக்கே வருகிறது ஆட்டோ. எந்த ஆட்டோ ஓட்டுனருக்கும் நாட்டின் பாதுகாப்புத் துறை அமைச்சரை வைத்துக்கொண்டு ஆட்டோ ஓட்ட வாய்ப்பு கிடைக்காது. அந்த வாய்ப்பு காந்திமதிக்கு கிடைத்தது. சென்னை அடையாறில் சமதா கட்சி (தமிழ்நாட்டிலும் இருக்கிறதா?) நடத்திய லோஹியா பிறந்த நாளின்போது ஆட்டோ ஓட்டுனர் பயிற்சி பெற்ற தலித் பெண்மணிகளுக்கு ஆட்டோக்கள் வழங்கும் விழாவில் தான் பாதுகாப்புத் துறை அமைச்சர் பெர்னான்டஸ் எல்லோரையும் இப்படிக் கலக்கினார்.

ஒரு சிறிய கல்யாண மண்டபத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது நிகழ்ச்சி. மேடையில் ஒரே கூட்டம்; தள்ளுமுள்ளு. எல்லோரும் வேர்வையில் தொப்பலாக நனைந்து போய் விட்டார்கள். அமைச்சரை அன்பால் மூழ்கடித்த தொண்டர்களைக் கட்டுப்படுத்த போலீஸ் யாரும் மண்டபத்துக்குள் வரவில்லை. "போலீஸ் உடன் வந்து பந்தா செய்தால் அமைச்சருக்குக் கோபம் வந்து விடும். அதனால் தான் போலீஸ் விலகியிருக்கிறார்கள்'' என்று சொன்னார் சமதா கட்சிப் பிரமுகர் ஒருவர்.

"நமக்குத் தேவை ஒழுக்கம். கட்டுப்பாடு'' என்று பேசத் துவங்கினார் ஜார்ஜ். "பதவியையோ சலுகைகளையோ எதிர்பார்த்து அரசியலுக்கு வராதீர்கள். என் 53 வருட அரசியல் அனுபவத்தில் பதவியில் இருந்த நான்கு வருடங்களை விட, சிறையில் இருந்த காலங்கள்தான் அதிகம்'' என்ற ஜார்ஜ், காங்கிரஸை ஒரு பிடி பிடித்தார். "அரசியல் சட்டத்தின் செயல்பாடுகளைத் திருத்த நினைத்தால் காங்கிரஸார் எதிர்க்கிறார்கள். அவசர நிலையின்போது நிரந்தர பிரதமராக இந்திராவைக் கொண்டுவர சட்டத்தைத் திருத்திய காங்கிரஸுக்கு இப்போது எதிர்க்கும் உரிமை கிடையாது'' என்றார். எமர்ஜென்ஸி கொடுமைகளை இன்றைய இளைஞர்களுக்கு விளக்க அவசர நிலையின் வெள்ளிவிழாவை நடத்த இருக்கிறாராம் ஜார்ஜ்.

— கௌசி

படம்: ராஜன்

# நடக்குமென்பார், நடக்கும்!



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

சாதகமான நிலைல கிரகங்கள் உலவற தால உங்க சஞ்சலங்கள் விலகி, வெளிச்சம் பிறக்கற நேரம் இது. இதுவரைக்கும் தொழில்ல போட்டியா, பொறாமையா இருந் தவங்களெல்லாம் ரூட்டை மாத்திக்கிட்டுப் போயிடுவாங்க. புகழும் பாராட்டும் வந்து குவியப் போவுது. கடிதங்கள் மூலம் சில நல்ல செய்திகளை இப்ப எதிர்பார்க்கலாம். சட்டம், காவல் துறையினருக்குப் பிரமோ ஷனோ, சம்பள உயர்வோ உறுதி. உடல் நலன்ல மட்டும் எச்சரிக்கையா இருங்க. உணவு விஷயத்துல கட்டுப்பாடு அவ சியம்.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருக சீரிஷம் 2-ம் பாதம் வரை)*

எதைத் தொட்டாலும் எதிர்ப்பு, தடைன்னு ரொம்பவே பிரச்னைகளை சந் திப்பீங்க. புதிய திட்டங்களைத் தள்ளிப் போடறது நல்லது. அலைச்சல், தூக்கமின் மையால சில கோளாறுகள் ஏற்படலாம். தலைவலி, கண் எரிச்சல்னு கொஞ்சம் மருத் துவச் செலவு வரைக்கும் இழுத்துட்டுப் போகும். கணவன் - மனைவி உறவுல சில மனஸ்தாபங்கள் ஏற்பட்டு விலகும். பெற் றோர் உடல்நலத்துலயும் எச்சரிக்கை அவ சியம்.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

தெய்வபலம் கூடியிருக்கு. உங்க காரியங்கள் எல்லாம் படு வேகத்துல நடக் கும். எதிரிகள் பணாலாயிடுவாங்க. வெளி நாட்டு வேலை வாய்ப்புகள் இடைக்கும். நல்லவர்கள் தொடர்பால சில லாபங்கள் உறுதி. உல்லாசப் பயணம், கேளிக்கைன்னு என்ஜாய் பண்ணுவீங்க. கையிருப்பும் போதுமான அளவுக்கு இருக்கும். சிலருக்கு ஃபிளாட், பர்ஸனல் கம்ப்யூட்டர் மாதிரி ஏதாவது வாங்கற யோகம் இருக்கும். வியாபாரிகள், விஞ்ஞானிகள் எல்லாருக்குமே வருமானம் கொழிக் கற நேரம் இது.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

இந்த வாரம் சில முக்கியமான முடிவுகள் எடுத்து செயல்படுத் தறவங்களுக்கு வெற்றி உறுதி. அரசுப் பணி யாளர்களுக்கு எதிர்பாராத வருமான அபி விருத்தி இருக்கு. உங்க நீண்ட நாள் கனவு ஒண்ணு நனவாகப் போகுது. அது, வெளிநாடு சான்ஸாகவோ, பிரமோஷனாகவோ இருக்க லாம். சட்டம், காவல்துறைல இருக்கற பெண் களுக்கு சவாலான காரியங்கள் காத்திருக்கு. இளைஞர்களுக்குத் திருமண யோகம் கூடி வரும். கலைஞர்களைப் பத்தி கேக்கவே வேண்டாம். இது அவங்களுக்குப் பொற் காலம்.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

புத்திசாலித்தனம் வெளிப்படும் வாரம். கடினமான காரியங்களைக் கூட சுலபமா முடிப்பீங்க. ஆபீஸ்ல உங்க சொல்லுக்கு நல்ல மதிப்பு உண்டாகும். வர்த் தகத் தொடர்புகள் லாபகரமா அமையும். எண்ணெய் வியாபாரிகளுக்கு அமோகமான பண வரவு உறுதி. கலைஞர்களும் எழுத்தா ளர்களும் புதிய வாய்ப்புகள்; பரிசுகள் பெறுவார்கள். வீட்டுல ஏதாவது விசேஷ காரி யத்தை முன்னிட்டு கொஞ்சம் கையிருப்பு கரையும். வயசானவங்களுக்கு ஏதாவது உடல்நலக் கோளாறு வரலாம்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

அவசரத்துல காரியம் செய் துட்டு மாட்டிக்கற அவஸ்தை ஏற்படும். எதை யும் அவசரப்படாம ஆற அமர யோசிச்சு செயல்படறது நல்லது. இப்ப உங்க நண்பர் களை எந்த விஷயத்திலும் எதுவும் நம்ப வேணாம். முக்கியப் பொறுப்புகளிலிருந்து நழு வறது, பின்னால சில பிரச்னைகளை உண்டு பண்ணலாம். மகான்கள் தரிசனம் சிலருக்குக் கிடைக்கும். தெய்வப் பணிகளில் நாட்டமேற் படும். செலவு நிறைய ஆகும். ஆனா தவறிக் கூட யாரிடமும் கடன் வாங்கிடாதீங்க.

**அக்னிசர்மா பக்கம்**



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

போட்டி, பந்தயங்களில் வெற்றி உறுதி. ஆனா சிறு விபத்துகள் நேரலாம். கவனம். அரசு ஊழியர்கள், கம்ப்யூட்டர் விஞ்ஞானிகள், இரும்பு வியாபாரிகளுக்கு வளமான நேரம் இது. பணம் தாராளமா வரும். நல்லா செலவும் செய்வீங்க. உல்லாச உலாக்கள் சிலருக்கு அமையும். டி.வி சேனல்களுக்கு அப்ளை பண்ணியிருக்கற காலேஜ் பெண்களுக்கு வாய்ப்பு ஓர்க் அவுட் ஆகும். பொதுவாவே மீடியாகாரங்களுக்கு விசேஷமான பலன்கள் கைகூடும் வாரம் இது.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

அதிக உழைப்பு, அலைச்சலைத் தவிர்க்க முடியாது. ஆனா, உங்க சம்பந்தப்பட்ட எந்தக் காரியமும் தடங்கலே இல்லாம நடக்கும். குறிப்பா கவிஞர்களும் எழுத்தாளர்களும் புகழேணியின் உச்சியில ஏறப் போற வாரம் இது. இரும்பு வியாபாரிகள், விளையாட்டுத் துறையினருக்கும் ஓஹோதான். வீட்டுக்குத் தேவையான பல பொருட்கள் வாங்குவீங்க. லக்ஷரி இட்டம்ஸ் வாங்கும் போது கொஞ்சம் கவனமா இருங்க. எலக்ட்ரானிக்ஸ் சம்பந்தப்பட்ட வகையில எதுவும் முதலீடு செய்யாம இருக்கறது நல்லது. பெண்களுக்கு இது புதுப் புடைவை வாரம்!



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

அவசரப்பட்டு எதையும் செய்துட்டு பின்னால அவஸ்தைப் படுவீங்க. பேச்சுல பதற்றம்; அதனால கெட்ட பேர் ஏற்படும். புதிய மனிதர்களிடம் எச்சரிக்கையா பழகுங்க. உணவு விஷயத்துலயும் கவனம். வயிறு உபாதைகள் ஏற்பட வாய்ப்பு இருக்கு. செலவு அதிகமா இருக்கும். சிலருக்கு பிக்பாக்கெட் ராசியும் கூடி வர்றதால டபுள் எச்சரிக்கை அவசியம். இளைஞர்களுக்கு வெளிநாட்டு வேலை வாய்ப்புகள் ஏற்படலாம். கம்ப்யூட்டர் துறையினருக்கும் இது ஆதாயமான காலகட்டம்.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

தடையில்லாத வளர்ச்சி உறுதி. போட்டிகளில் வெற்றி வாய்ப்பு ஏற்படும். தொழில் முன்னேற்றம், வியாபார வளர்ச்சின்னு எல்லாமே ஜெயம்தான். எதிர்பாராத பணவரவு சிலருக்கு இருக்கும். மனைவி வழில சில பூர்வீகச் சொத்துகள் கிடைக்கலாம். வழக்குகள் சாதகமா தீர்ப்பாகும். இளைஞர்களுக்குக் காதல் அனுபவம் சூப்பரா அமையும். வேலைக்குப் போகும் பெண்களுக்கு மேலிட நெருக்கடியால பணிச்சுமை அதிகமா இருக்கும். மத்தபடி எந்தப் பணியும் தடையில்லாம ஜோரா நடக்கற வாரம் இது.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

ஆன்மிகத்துல நாட்டம் உள்ளவங்களுக்கு இந்த வாரம் ரொம்ப மகிழ்ச்சிகரமா அமையும். திருவிழாக்கள், உற்சவங்கள்ல கலந்துப்பீங்க. ஆபீஸ்ல ப்ரமோஷன் சிலருக்குக் கிடைக்கும். வழக்குகள் சாதகமாத் தீர்ப்பாகும். எழுத்தாளர்களுக்கு பல புதிய வாய்ப்புகளும் கூடுதல் வருமானமும் உறுதி. சினிமாகாரங்களுக்குக் கொஞ்சம் கஷ்டமான காலகட்டம். வாய்ப்புகள் கைநழுவி, கவலைப் படுத்தும். வாகன யோகம் சிலருக்கு உண்டு. ஆனா பயணத்துல எச்சரிக்கை அவசியம்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

ரொம்பப் பிரமாதமான வேளை வந்திருக்கு. துணிஞ்சி உங்க புது முயற்சிகளைத் தொடங்கினா அபாரமான வெற்றியைக் காண்பீங்க. பெரியவங்க ஆதரவு, நண்பர்கள் உதவி, வங்கிக் கடன் - எது வேணும்னாலும் கேட்டதும் கிடைக்கும். சிலருக்கு வெளிநாட்டுப் பயண யோகம் இருக்கும். விஞ்ஞானிகளுக்குப் புகழ் கூடும். ராணுவத்தினர், விளையாட்டு வீரர்களுக்கு எல்லாமே வெற்றி, வெற்றிதான்! பெண்களுக்குப் பதவி உயர்வு, வெளியூர்ப் பயணம், நகை சேர்க்கைன்னு அமர்க்களமா இருக்கும். மத்த யாரையும் விட புத்தாண்டு உங்களுக்குப் படு ஜோரா ஆரம்பிச்சிருக்கு!



மீன ராசிக்காரரான குட்டிப்பத்மினி புது முயற்சிகளை துணிந்து தொடங்கலாம்!



# ஜீனா

**சோ**மனை மொத்த காந்தி பார்க்குமே திரும்பிப் பார்த்தது. பனைமரத்தில் பாதியும், தென்னை மரத்தில் மீதியுமாக ஒரு மனித உருவம் 'கெக்கரே – பிக்கரே' என்று நடந்து வந்தால் பார்க்காமல், இருக்க முடியுமா என்ன?

அதிலும், 'அன்பு... அன்பு' என்று மனது பினாத்தி எழவெடுக்கும் போது நடையில் மிடுக்காவது ஸ்டைலாவது?

''தள்ளி உக்காரு அசோக்... வந்துடிச்சி ஷாக்! இந்த நிமிஷம் நீ யாரோ... நான் யாரோ...'' என்றாள் அன்பு மிக வேகமாய்.

அசோக்கும் அவள் அப்படிச் சொன்ன நொடி அரண்டு போனான். பாரதி ராஜா படத்து ஃபேமஸ் ஷாட் போல ஆடாமல் அசையாமல் அவளை வெறித்துப் பார்த்தான்.

'ஐய்யோ, இனி தாடி வளர்த்து ஜோல்னாப்பை சுமந்து கவிதை எல்லாம் எழுத வேண்டுமே' என்பது வரை நினைத்தானோ என்னவோ?

"முடியாது... மாட்டேன்... அது மட்டும் நடக்காது'' என்று டயலாக் வசப்பட்டு, "அன்பு நான் யாரோவா நான் உன் டார்லிங் இல்லையா?'' – என்றான் பரிதாபமாக.

"ஹைய்யோ, அ.கெசு... அந்தப் பக்கம் பார்'' என்றாள் சோமன் வந்து கொண்டிருக்கும் திசையைக் காட்டி.... (அ.கெசு = அறிவு கெட்ட சுப்பன்)

''அட நம்ம உயர்ந்த மனிதன்... இவனைப் பார்த்து தான் தள்ளி உட்கார்ந்தியா டார்லிங்...?'' என்றான் அசோக்கும் தெனாவெட்டாக.

"டார்ஜிலிங் ஒண்ணும் பாகிஸ்தான்ல இல்ல... அது நம்மகிட்டேதான் இருக்கு."

"என்ன அன்பு நீ... என்கிட்ட முழுசா நூறு ரூபா இல்ல. டார்ஜிலிங்கே இருக்குங்கறே நம்மகிட்ட. என்ன ஆச்சு?"

"உம் குழந்தை அழுதுது."

''அப்ப கிரைப் வாட்டர் கொடுக்க வேண்டியதுதானே? ஆனா சத்யமா எங்கம்மா எனக்கு அதைக் கொடுக்கலை. ஓமத் தண்ணின்னு ஒரு எழவு. எங்க பாட்டியோட தயாரிப்பு. அதைத்தான் கொடுத்தா''

**சுபா**



"அசோக்... ரொம்ப காமா இருக்கற இந்த சோமா உறவுமுறைல எனக்கு மாமா. சொல்லுங்க மாமா ஆமா..." - என்று வெட்கப்பட்டு அவனுக்கொரு அங்கீகாரம் கொடுப்பது போல நடிக்க, சோம்ஸ் டோட்டலி கொலாப்ஸ்! அங்கு வரும் வரை நிலவிய கோபதாபமும் கூட ஜூட் விடும் போல தோன்றியது.

"சோம்ஸ் நீ இவளோட மாம்ஸா... சொல்லவே இல்லையே?" என்று அசோக்கும் உடனே சுதாரித்து ஒரு ரீ ஆக்ட் கொடுத்தான்.

"அது சரி... இதையெல்லாம் என்ன நெத்தில எழுதிக்கிட்டா திரிய முடியும்?"

"ஆமாம் நான் வேற கன்டிஷனா சொல்லிருக்கேன் காலேஜ்ல வந்து உறவு கொண்டாடக் கூடாதுன்னு..."

"நிஜமாவே அன்புக் கட்டளை!"

"ஹை சோம்ஸ்! நீ கூட ஜோக் அடிக்கறே!"

"பீ சீரியஸ் கன்டின்யூ பண்ணலாமா...?" அன்பு பாடப் புத்தகத்தை விரித்து.

– இருவரும் சோமனை உள்ளங்காலை சொறிய விடுவது என்று சபதமெடுத்த மாதிரி (சிண்டைப் பிச்சுக்கற மாதிரிக்கு ஆப்போசிட்) கலாய்க்கத் தொடங்க சோமனும் நெருங்கி வந்து குழப்பத்தோடு அமர்ந்தான்.

"ஹாய் சோம்... மை டியர் மாம்... நீயும் பாடம் படிக்க பார்க்குக்குதான் வருவியா?" – என்றபடி வெகு சாதாரணமாக அவனை ஏறிட்டான் அன்பு. "படிக்கவா...? பார்க்குக்கா...? நானா?" என்று சோம்சும் பதில் கேள்வி எழுப்ப, ஒரு கேள்விக்கு ஒரு ரீ ஆக்ஷன் என்று அன்புவும் நிமிர்ந்து, சிலிர்த்து, விடைத்து அவனைப் பார்க்க, இந்த சிச்சுவேஷனுக்கு இளையராஜா இருந்தால் என்ன பேக்கிரவுண்ட் கொடுப்பாரோ அது அவர் இல்லாமலே அவர்கள் காதில் எதிரொலித்தது. அன்பு தொடர்ந்து அவனை கவுத்துப் போடும் நோக்கோடு,

4

## தங்கச்சங்கிலி பரிசு!

**இத்தொடர் கதையை வாரம் ஒரு எழுத்தாளர் என்று பத்து எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள். கவனமாகப் படித்து வாருங்கள். கடைசி வாரத்தில் கேள்வி ஒன்று உங்களுக்காகவே தயாராக இருக்கிறது. சரியாக பதிலளிப்பவர்களுக்குப் பரிசாகக் காத்திருக்கிறது தங்கச் சங்கிலி! பலர் சரியாக எழுதியிருந்தால் குலுக்கலில் ஒருவர்! பரிசளிப்பு விஷயத்தில் ஆசிரியர் தீர்ப்பே இறுதி.**

விட்ட இடத்திலிருந்து தொடர்வது போல் ஆரம்பிக்க, அசோக் அந்த நடிப்பில் மயங்க, சோம்ஸ் அந்தக் குரலின் தாலாட்டில் தூங்கினான்!

இதுதான் சாக்கு என்று அன்பும் அசோக்கும் மெல்ல நழுவத் தொடங்கினார்கள்!

அப்பாடா... ஒருவழியாக ஒரு ஏவு கணையை புஸ்ஸாக்கி திசைதிருப்பியும் விட்டாச்சு!

**ஹா**ஸ்டலுக்குள் நுழையும்போதே சிங்காரம் ஒரு முழி முழித்தான்.

"எங்க சுத்தியடிச்சுட்டு வரே?" என்று ஒரு தினுசாக வேறு கேட்டான்.

"சுத்தியடிச்சுட்டுத்தான்... ஆனா ஊரை இல்ல யந்திரத்தை..." என்று அன்பு தன் ஹேண்ட்பேக்கில் இருந்து ஒரு பக்திப் பத்திரிகை தந்த ஒரு யந்திரத்தை வெளியே எடுத்தான்.

"என்ன இது?"

"யந்திரம். சரஸ்வதியந்திரம். படிச்சா படிப்பு நல்லா வருமாம். இதைக் கீழே வெச்சு லட்சம் தடவை சுத்தினா எல்லா சப்ஜெக்ட்லயும் எம்பது மார்க் நிச்சயம். அதான் இதைச் சுத்திட்டு வரேன்."

"பொய் சொல்றே... தூர்கை கதை சொல்லி ஏமாத்தின மாதிரி இந்தத் தடவை என்னை ஏமாத்த நினைச்சா நீ ஏமாந்து போய்டுவே அன்பு. உண்மையைச் சொல்லு இது என்ன?"

சிங்காரம் சி.பி.ஐ. ஆபீசர் போல தன்னை பாவித்துக் கொண்டு அன்புவைப் பார்க்க அவனும் ராமர் பிள்ளையாட்டம் அழிச்சாட்டியம் பண்ணத்

# உலகின் முதல் விமான தபால்!



**உ**லகிலேயே முதன் முதலாக விமானத்தில் தபால்களை ஏற்றி – இறக்கிய பெருமை இந்தியாவுக்குத்தான் உண்டு.

1911 ஆம் ஆண்டு பிப்ரவரி 18ஆம் நாள்.

அலகாபாத் நகரில் இருக்கும் ஒரு மைதானத்தில் இருந்து கிளம்பிய அந்த விமானம் யமுனை நதியினைக் கடந்து நைனி என்ற ஊரை அடைந்து அங்கிருக்கும் மத்திய சிறைச்சாலையின் வெளிச்சுவருக்கு அருகே தரை இறங்கியுள்ளது. ஆறு மைல் தூரத்தை அந்த விமானம் கடந்து வர ஆன நேரம் பதினாறு நிமிடங்கள்!

அந்த விமானத்தில் இருந்த கடிதங்கள் ஆறாயிரத்து ஐந்நூறு. குட்டி விமானத்தின் பெயர் டிஹவிலன்ட். அதன் விமானி பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த ஹென்ரி பிக்கே.

இந்திய அஞ்சல் துறையினரால், முதல் உலக விமான தபால் என்னும் முத்திரை ஆறாயிரத்து ஐந்நூறு கடிதங்களில் மட்டும் குத்தப்பட்டு உடனே அந்த முத்திரை அச்சு உடைத்து அழிக்கப்பட்டிருக்கிறது.




உலகின் பல்வேறு திசைகளுக்கும் சென்ற அந்த புகழ் பெற்ற தபால்களில் இப்பொழுது உலவிக் கொண்டு இருப்பது பத்து அட்டைகள் மட்டும்தான் என்று கணக்கெடுக்கப்பட்டுள்ளது.

அந்தச் சிறப்பு மிக்க பத்து தபால் அட்டைகளில் ஒன்று திருச்சி அஞ்சல்தலை சேகரிப்போர் சங்கத்தின் தலைவரான ஸ்ரீரங்கம் பீ. சௌந்தரராஜனிடம் இருக்கின்றது!

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

தொடங்கினாள்.

"இது யந்திரம்தான். சந்தேகமா இருந்தா இதை நீ லட்சம் தடவை சுத்து. மார்க் வர லைன்னா கேள்..." என்றாள்.

"நான் பரீட்சை எழுதுனாத்தானே?"

"நீ எழுதலைன்னா என்ன... உன் பசங்க எழுதறாங்க இல்ல..."

"ஆமா..."

"அப்ப சுத்து. அப்புறம் பார்."

"சரி சுத்தறேன். மார்க் மட்டும் வரலை. உன்னைச் சும்மா விடமாட்டேன்" – என்ற படி அந்த யந்திரத்தை வாங்கிக் கொண்டு அப்பொழுதே போய்ச் சுற்றத் தொடங்கி விட்டாள்.

**அ**றைக்குள் நுழைந்தவளை மங்கள நாயகி ஒரு மாதிரி பார்த்தாள்.

"என்ன மங்கு எதுக்கு அப்படிப் பாக் கறே?"

"எங்க போய்ட்டு வரே?"

"கோவிலுக்கு..."

"எனக்கு எல்லாம் தெரியுண்டி..."

"மங்க்... என்ன சொல்றே?"

"எல்லாம் தெரியும்னு சொன்னேன்..."

"எல்லாம்னா... சப்ஜெக்டாவா இல்ல ஆப்ஜெக்டாவா?"

"நீ என்ன கேக்கறே – சப்ஜெக்ட் ஆப் ஜெக்ட்னு என்னைக் குழப்பாதே. நீ கோவி லுக்குப் போகலை. நான் அதைச் சொன் னேன்."

"ஹா!" – சிங்காரத்தை தொடர்ந்து இவ ளுக்கும் எப்படி அல்வா கொடுப்பது என்கிற சிந்தனையோடும் அதிர்ச்சியோடும் அன்புச் செல்வி அவளைப் பார்த்தாள்.

"என்னடி ஹா...? எந்திரத்தை சுத்தி நீ மட்டும்தான் எம்பது மார்க் வாங்குவியா? நான் வாங்கக் கூடாதா?"

மங்களநாயகி எனக்கெதுக்கு அல்வா நானே அல்வா அல்லவா? என்கிற மாதிரி கேட்ட கேள்வியைத் தொடர்ந்து அன்பு விட்டாள் பெருமூச்சு. ஹேண்ட்பேக்கைத் திறந்து எடுத்தாள் இன்னொரு யந்திரத்தை. (ரூபாய்க்குப் பத்து யந்திரம்னு வந்துடுச்சா?)

"பிடி. மங்க். இனி நீ முதல் ரேங்க்" என் றாள்.

கண்களில் ஒற்றிக் கொண்டு அதை வாங்கி வைத்துக் கொண்டாள் மங்கள நாயகி. உற்று வேறு பார்த்தாள்.

"என்னடி பார்க்கறே?"

"இல்ல எங்க வீட்டு வாசல் ஏக பெரிசு. அதுல ஒரு கோலம் போட்றதே எனக்கு பெரிய காரியம். ஆனா சின்ன இந்த தகட் டுல எவ்வளவு அழகா போட்ருக்காங்க... இல்ல?"

"அதான் சரஸ்வதி..."

"ஓ... அந்தக் கலைவாணியே போட்ட கோலமா இது?"

"பின்ன...?"

"எப்படிக் கிடைச்சுச்சு உனக்கு இது?"

"இது இப்ப கிடைக்கறது பெரிய விஷய மேயில்லை. மங்கா கிடைக்கலேன்னாதான் அது பெரிய விஷயம். சரி சரி... இதை ஜாக்ர தையா வெச்சு பூஜை பண்ணு. நீ அப்படிப் பண்ணும் போது யாரும் பார்த்துடக் கூடாது. அது ரொம்ப முக்கியம்."

"ஐய்யோ... இனி ரூம் கதவைத் திறக்கவே மாட்டேன். ஆமா நீ இருக்கியே – பரவா



"இன்னும் முயற்சி செய்தால் அதிக மார்க் கிடைத்திருக்கும்..."

"இதுக்கு மேலே கழுத்தை நீட்டிப் பார்க்க முடியலை சார்!"

– எஸ். மோகன்

யில்லையா?"

"மங்கா... உனக்காகவே நான் வெளியே போறேன் போதுமா?"

"அன்பு உனக்குத்தான் என் மேல எவ் வளவு அன்பு" – மங்களநாயகி அன்புச் செல்வியை கட்டிக் கொண்டாள்.

**எ**ன்னதான் தினமும் பார்க்கில் சந்தித் துக் காதலித்துக் கொண்டாலும் காதலில் கடிதத்துக்கு ஒரு முக்கிய இடம் உண்டாம். அதை மிஸ் பண்ணிவிடக்கூடாதாம். எனவே சந்தித்துக் கொள்ள முடியாத கேப் பில் கடிதம் பரிமாறிக் கொள்வோம் என்று சாப்பாட்டுக்கு முன், சாப்பாட்டுக்குப் பின் மூணு வேளை மருந்து சாப்பிடுகிற மாதிரி



"தலைவருக்குச் சிலை வச்சதுக்கா உங்களைக் கட்சியிலேர்ந்து நீக்கிட்டாங்க?"

"கையிலே சூட்கேஸோட நீக்கிற மாதிரி வச்சிட்டேன்..."

– தஞ்சை தாமு

மூணு வேளையும் கடிதம் எழுதி அதை ஒரு பந்து போல கசக்கி ஜன்னல் வழியாகவெல்லாம் விட்டெறிய, அன்புவும் விளக்குமாறு எடுத்துக் கூட்டுகிறேன் என்று அதைக் கலெக்ட் செய்து கொள்ள, ரூம் எப்பொழுதும் நாக்கால் நக்கிச் சுத்தப்படுத்தியது போல பளிச்சென்றிருந்தது.

அன்புவும் விளக்குமாறும் கையுமாகவே எப்பொழுதும் இருந்தாள். ஒருநாள் கொஞ்சம் அசந்து பாத்ரூம் போன போது ஒரு காகிதப் பந்து மங்களநாயகி மேல் வந்து விழுந்து அவளைப் பதறவைத்தது. எடுத்துப் பிரித்தவளுக்குத் தலை சுற்றியது.

'அன்பே அன்பு...

இன்றைக்கு இது நாலாவது கடிதம். ஆனால் நம் காதல் சரித்திரத்தில் இது 99வது கடிதம். இதை இப்படி கசக்கி எறிகிறோமே என்று நினைக்கும் போதுதான் கவலையாக இருக்கிறது. இருந்தாலும் இந்தக் காதல் கடிதப் பந்து தினம் பாடுகிறதே சிந்து? அதை நினைத்து மகிழ்ந்து நீ நம் காதலை அருந்து. ஆனாலும் உன் மாமன் சோமன் எனும் பருந்து நம் காதல் வானில் பறந்து – அதனால் நம் காதலும் முறிந்தால் நான் முடிந்து போய் விடுவேன் அன்பு. அவன் தொல்லையைத் தாங்க முடியவில்லை! 'நான் அன்பைக் காதலிக்கவில்லை. நான் அன்பைக் காதலிக்கவில்லை' என்று தினமும் 108 முறை எழுதிக் காட்டச் சொல்கிறான். காட்டா விட்டால் சந்தேகப்படுவானாம்.

நான் காதலிக்கிறேன் என்பதற்காக காதலிக்கவில்லை என்று காதலோடு எழுதும் கொடுமையை, காதலிக்கும் நீ காதலோடு யோசித்துப் பார். அந்தக் கொடுமை உனக்குப் புரியும்.

உன் தோழி மங்களநாயகி நம் காதலுக்கு மங்களம் பாடாத நாயகியாக யந்திர மங்கள நாயகியாகி விட்டதைப் பற்றி எழுதியிருந்தாய். வாட்ச்மேன் சிங்காரமே நமக்கு பங்காரமாகிவிட்ட நிலையில் மங்களநாயகி மட்டுமென்ன...? நம் காதல் பற்றித் தெரிந்தால் வாழ்த்தத்தான் செய்வாள். எனவே அவளுக்கு அல்வா கொடுத்தது போதும். அக்வா ஃப்ரெஷ் போன்ற நம் காதலைப் பற்றிச் சொல். மங்களம் மங்கலம் பாட நம் காதல் தொடரட்டும்.

செஞ்சுரி அடிக்கும் அடுத்த கடிதம் இன்னும் சில மணி நேரத்தில். அதுவரையில் உன்னிடமிருந்து விடைபெறுவது உன் அன்புக் காதலன்

அசோக்.

கடிதத்தைப் படித்த மங்களநாயகி பொதேல் என்று படுக்கையில் விழுந்தாள் என்றாலோ பற்களை நறநறவென்று கடித்தாள் என்றாலோ – எல்லாமே ஓல்ட் ஸ்டைல்.

அசோக்கின் கடிதத்தைத் திரும்பத் திரும்பப் படித்தாள். ஆஹா என்ன ஒரு அழகான கையெழுத்து. அசோக் நீதான் எத்தனை புத்திசாலி. காதலைப் பந்தாடுகின்ற உலகில் காதல் கடிதத்தையே பந்தாக்கி விளையாடுகிறாயே, கிரேட் அசோக். நீ ரியலி கிரேட்! என்றபடி பாத்ரூமில் இருந்து வெளியே வந்த அன்புவிடம் கடிதத்தைத் தந்தாள்.

"மங்க்...!"

"டோன்ட் ஒர்ரி அன்பு. நூறாவது கடிதம் வரும். அதையும் பொறுக்கி எடுத்துத் தரேன்."

"மங்க் மங்க்..."

"ஒண்ணு மட்டும் சொல்லிக்கறேன் அன்பு."

"ஒண்ணு என்ன மங்கா இரண்டு மூணு நாலு கூடச் சொல்லு.."

"இல்ல ஒண்ணுதான் சொல்வேன்."

"சரி சொல்லு."

"ஒண்ணு... நீயும் அசோக்கும் எப்பவும் இனி ஒண்ணு."

– மங்கள நாயகி சாதுர்யமாகப் பேசி விட்ட பாவனையோடு சிரித்தாள்.

நூறாவது கடிதப் பந்தும் வந்து உள்ளே விழுந்தது!

(தொடரும்)

● எம். குணசேகரன்,

வேலாயுதம்பாளையம்.

? காங்கிரஸ் கட்சியில் சோனியா எதிர்ப்பு அலை மீண்டும் தலைதூக்கி விட்டதாமே?

! நிலவும் வானும் மாதிரி, உடலும் உயிரும் மாதிரி, கடலும் அலையும் மாதிரி, கோஷ்டியும் காங்கிரஸும் இணை பிரியாதவை. இதில் சோனியா மட்டும் விதிவிலக்கா என்ன?

● சு. கந்தையா, நாகர்கோவில்.

? மக்களுக்கு ஆசிரம மோகம் எப்போது தீரும்?

! தங்களுக்கும் தெய்வத்துக்கும் நடுவில் இடைத் தரகர்கள் தேவையில்லை என்கிற 'ஞானம்' உண்டாகும் போது.

● எஸ். சரவணன், நாமக்கல்.

? ஐந்தாண்டு சிறைத் தண்டனை பெறக்கூடிய வழக்கில் ஒருவர் பேரில் குற்றச்சாட்டுப் பதிவுசெய்யப்பட்டாலே அவர் தேர்தலில் நிற்கக் கூடாது என்கிற அதிரடி திட்டத்தைத் தேர்தல் கமிஷன் அறிவித்திருப்பது பற்றி...?

! இது மட்டுமா? பெண்களுக்குக் குறிப்பிட்ட சதவிகிதம் தொகுதி ஒதுக்கீட்டைக் கட்சிகளே செய்துவிடலாம் என்றும் சொல்கிறது. இப்படி பிட் நோட்டீஸ் மாதிரி அவ்வப்போது அறிக்கைகள் விட்டு என்ன பயன்? தேர்தல் சீர்திருத்தம் என்று மசோதா தயாராகி, நாடாளுமன்றத்தில் விவாதம் நடந்து சட்டமாக நிறைவேறட்டும்; அப்புறம் பார்க்கலாம்!

● ப. லக்ஷ்மி நரசிம்மன், கோவை – 11.

? ஜனாதிபதி நாராயணனின் பிரான்ஸ் பயணத்தின்போது அவர் தீண்டத்தகாதவர் என்று ஒரு பத்திரிகை குறிப்பிட்டதாமே?

! 'இந்தியப் பத்திரிகைகள் ஜனாதிபதியின் பெருமை பேசுவதாக நினைத்துக் கொண்டு இதை அடிக்கடி சுட்டிக்காட்டுவதைத் தவிர்த்தால், அயல்நாட்டுப் பத்திரிகைகளும் இப்படிக் குறிப்பிடாது' என்று கே.ஆர். நாராயணனே சொல்லியிருக்கிறார்.

● கு. கணேசன், பணங்கோட்டூர்.

? 'அரசியலமைப்புச் சட்டத்தில் திருத்தம் செய்வது அம்பேத்கரையே அவமதிப்பதாகும்' என்று சோனியா காந்தி கூறியுள்ளாரே?

! பல திருத்தங்களை அம்பேத்கரே எதிர்பார்த்தார் – ஆதாரம் இவ்வாரம் 2-3-4 பக்கங்களில் வெளியாகியுள்ள பிரகாஷ் அம்பேத்கர் பேட்டி.

● ஆர். வானுமாமலைப்பெருமாள்,

தளக்கர்குளம்.

? இன்றைய சூழ்நிலையில் மாணவர்களுக்கு அரசியல் தேவையா?

! அரசியல் அறிவும், நோக்கும், கட்டாயம் தேவை. நேரடி ஈடுபாடு, கல்வி முடியும் வரை வேண்டாம்.

## நீங்கள் கேட்டவை – தராசு



• எதிர்ப்பு அலை



• ஃப்ரான்ஸ் அனுபவம்



• மகன் பதினாறடி!

● பாலு, காரைக்குடி.

? மேற்கு வங்க மகா கூட்டணி மகா விவஸ்தைகெட்டதனமல்லவா?

! மஹாஜோதி, ஏற்றப்படும் முன்னரே அணைக்கப்படும் போலிருக்கிறதே! ஆக, கம்யூனிஸ்ட் ஆட்சிக்கு ஆபத்து 'மஹாஜோதி'யிடமிருந்து இல்லை. ஆட்சியின் குறை-நிறைகளைப் பொறுத்தே அமையும்.

● பி. நடராஜன், அன்னூர்.

? சமீபத்தில் படித்து ரசித்த புத்தகம் எது?

! எம். யுவனின் 'வேறொரு காலம்' என்ற கவிதைத் தொகுப்பு. மிகச் சிக்கனமான சொற்களில் யுவன் காட்டும் உலகம் அற்புதமானது. சொற்களுக்கு அப்பால் வெளிப்படும் அனுபவங்களின் சாரத் தெறிப்பு, பிரமிப்பூட்டுமளவுக்குச் சிறப்பாகப் பதிவு

செய்யப்பட்டிருக்கிறது.

● ஆர். செல்வராணி, சீனிவாசபுரம்.

? ராப்ரி தேவியும் சிறைக்குப் போனால் தமது 25 வயது மகளை முதல்வராக்க லாலு முடிவு செய்திருக்கிறாராமே...?

! விமர்சித்துப் பேசிய எதிர்க்கட்சித் தலைவரை நோக்கி, 'முகத்தைப் பிராண்டி விடுவேன்!' என்று சட்டசபையில் எச்சரித்திருக்கிறார் ராப்ரி. மகள் 'முழியை நோண்டுவேன்' என்று மிரட்டும் ரகமாயிருக்கக் கூடும்!

● என். பாலகிருஷ்ணன், மதுரை -1.

? "என்னுடன் வாழப்பாடி சண்டை போடுவதை கருணாநிதி வேடிக்கை பார்க்கிறார்" என்று டாக்டர் ராம்தாஸ் கூறுகிறாரே?

! விடுங்க சார், இந்த குழாயடிச் சண்டை அலுத்துப் போச்சு!

● எஸ். கதிரேசன், பேரணாம்பட்டு. ❑

? 'அன்று ஒருமுறை 'தொண்டர்களுக்காகவே சசிகலா தொடர்பைத் துண்டிக்கிறேன்' என்று சொன்ன ஜெயலலிதா மீண்டும் சசிகலாவைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டார். தொண்டர்கள் முகத்தில் தம் விருப்பத்துக்கு ஏற்ப மூத்த தலைவர்களை நீக்கி விட்டு, தொண்டர்களுக்காகவே இதைச் செய்கிறேன் என்று மற்றொரு புளுகு மூட்டையை அவிழ்த்து விடுகிறாரே?

! ஜெ. கரி பூசினாலும் சந்தனம் தெளிப்பதாகவும், சேற்றை வாரி இறைத்தாலும் பன்னீர் தெளிப்பதாகவும் நினைத்துக் கொள்ளும் தொண்டர்கள் இருக்கும்போது நாம் சொல்ல என்ன இருக்கிறது!

● அஜார், சென்னை – 18.

? புத்திசாலி எப்போது முட்டாள் ஆகிறான்?

! லீவ் போட்டு விட்டு கிரிக்கெட் மேட்ச் பார்க்க உட்காரும்போது!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? 'டான்சி ஊழல் வழக்கு விசாரணையைப் பாதிக்கும்படி சென்னை உயர்நீதி மன்றம் அவசரத் தீர்ப்பு வழங்கியிருக்கக் கூடாது' என்று உச்சநீதிமன்றம் கூறியிருப்பது பற்றி...?

! அது மட்டுமல்ல; அந்த அவசரத் தீர்ப்பு வாசகத்தையே பதிவேடுகளிலிருந்து அழித்து நீக்கி விட்டது! நீதி தேவதையை அவ்வளவு சுலபமாக ஏமாற்றி விட முடியாது என்ற ஆறுதல் நமக்கு.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? வருங்கால மக்களின் முன்னேற்றம் எதன் அடிப்படையில் இருக்கும்...?

! திறமையின் அடிப்படையில்.

● ஆர். அஜிதா, கம்பம்.

? 'கிருஷ்ணா நீர் சென்னைக்கு வரவில்லையானால் என் மீது உரிமை மீறல் பிரச்னை கொண்டு வர முடியாது; ஆந்திர முதல்வர் மீதுதான் உ.மீ.பி. கொண்டுவர வேண்டும் என முதல்வர் கருணாநிதி பேசியிருக்கிறாரே?

! சென்னை மக்களுக்குத் தேவை உரிமை மீறல் தீர்மானமல்ல; தண்ணீர்! ஆந்திராவில் வறட்சியைக் காரணம் காட்டி கிருஷ்ணா நதி நீர் அனுப்புவதை நாயுடுகாரு மேலும் தாமதப்படுத்தி விடக் கூடாது. ◎

## ஆசிரம மோகம் எப்போது தீரும்?



• சேறும் சந்தனமும்



• ...'பேசர'!



• மகா....

| |
|---|
| ❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :<br>எஸ். கதிரேசன்,<br>157, எம்.ஜி.ஆர். நகர்,<br>பேரணாம்பட்டு - 635 810 |
| • ரூ. 25 பரிசு பெறுபவர் :<br>சு. கந்தையா,<br>183, சகோதரர் தெரு,<br>நாகர்கோவில் - 629 001. |

One & Only

# திரை

மலர்



அன்பு நிறைந்த அம்மா!

இங்கு மரங்களைப் பார்க்கும்போதெல்லாம் உன் ஞாபகம் வருகிறது. நீ கல்யாணக் கூரையை உடுத்திக் கொண்டு கார்த்திகை தீபம் ஏற்றும் காட்சி - இலைகளில் பேர்பாதி உன் புடைவையின் நிறத்துக்கு மாறி விட்டன. மற்றொரு பாதி பழுப்பு கலந்த மஞ்சள்.. எத்தனை அழகு! அழகைப் பார்க்க அலுப்பதில்லை. இந்த மாதிரி சமயங்களில், நீ பக்கத்திலேயே இருப்பது போல் நினைத்துக் கொள்கிறேன். அறைக்குத் திரும்பிய துமே எல்லாவற்றையும் அள்ளிக் கொட்டிக் கடிதம் எழுதிவிடுகிறேன்...

இப்போதும்தான் கடிதம் எழுதுகிறாள் ரம்யா. ஆனால் 'அன்பு நிறைந்த அம்மா' கிடையாது. அள்ளிக் கொட்டிப் பகிர்ந்து களிக்கும் துடிப்பெல்லாம் பழைய கதை. இடைத்தரகராக ஒரு இஷினி இயந்திரம் உட்கார்ந்து கொண்டு ரம்யாவைப் 'பதப்படுத்தி' அனுப்புகிறது. 'பாக்கேஜிங்' என்னவோ பிரமாதம்தான்! முயற்சியின்றிப் படித்துவிடக்கூடிய அச்செழுத்துக்கள். வேண்டுமானால் காகிதத்தில் ஒற்றியெடுத்துக் கொடுத்து விடுகிறது; இல்லாவிட்டால் திரையில் எழுத்துக்களைப் பெரிதுபடுத்திப் படிக்கக் கூட வசதி இருக்கிறது. அதனால் ரம்யா கையைப் பிடித்துக் கொண்டு நடக்கும் சுகம் கிடைத்து விடுமா? தோளில் கை போட்டு 'ஆனால் அம்மா!' என்று கன்னத்தைத் திருப்பி, கண்ணுக்குள் பார்த்து--

பசித்தவன் பழங்கணக்கு பார்த்த கதையாக, இரண்டு வருடத்துக்கு முந்தைய கடிதங்களைப் புரட்டி, அந்த சுகத்தைத் தேட வேண்டியிருக்கிறது. ஆனால் மகிழ்ச்சிக்குத் திரை போட்டது காலம் அல்ல; கருவி.

"இப்போ எதுக்கு கம்ப்யூட்டர்...?" கணவர் கேட்கவில்லை.

"செலவைப் பார்க்காதே. ரம்யாகிட்டே தினமும் ஈமெயில் மூலமா பேசிக்கலாம். 'சாட்'னு ஒரு வசதி இருக்கு...."

பி.எச்.டிக்காக உழைக்கும் பெண்ணுக்கு 'அரட்டை' அடிக்கவா நேரம்?

ஹாய் அம்மா!

உன் நீ...ண்ட கடிதம் கிடைத்தது.

வழக்கம்போல் இங்கே முதுகொடிக்கும் வேலை.

போன வாரம் உஷா கல்யாணம் நன்றாக நடந்திருக்குமே?

பாட்டிக்கு உடம்பு எப்படி...?

இந்தியாவில் தீவிரவாதம் குறித்து இங்கே பாலிடிக்ஸ் ஃபாகல்டியில் நேற்று செமினார்!

உடம்பை கவனித்துக் கொள். உனக்கும் வயதாகிறதே...

ரம்யா.

- எலக்ட்ரானிக் அன்பு!

அரட்டை வேண்டாம்... ஆனால், ஆத்மார்த்தமான உரையாடல்? உள்ளத்தில் ஏற்றி வைத்துப் போற்றிய ஒரு விளக்கைச் சட்டென்று ஊதி அணைத்த இருட்டு. பழகப் பழகக் குறையாத பாழ் இருட்டு.

ரம்யாவின் பழைய கடிதங்கள் அடங்கிய கோப்பைப் புரட்டினாள். எழுத்தும் மொழியும் உணர்வுக்கு வாகனமாகி மகளைப் பக்கத்தில் கொண்டு வந்து நிறுத்தின.

"ரம்யா! ரம்யா கண்ணு..." வாய்விட்டுக் கூப்பிட வேண்டும் போலிருக்கிறது...

"பத்மா!" ஏ.ஸி. அறையிலிருந்து தலை நீட்டி மாமியார் அழைக்கிறார்.

"கொஞ்சம் வாயேன்... டி.வி. பொட்டியிலே ரம்யா கடுதாசி வந்திருக்கா பார்க்கலாம்."

கண்ணீரை மறைத்துக் கொண்டு எழுந்திருக்கையில் பார்த்துவிட்டுக் கேட்கிறார் :

"அழுதியா என்ன...? அசடு!" ●



## நான் நாத்திகனில்லை - 17

எந்த கருத்துக்களையும் நான் பேச வேண்டும். அதேசமயத்தில் கேட்பவர்கள் மனம் புண்படாமலும் பேச வேண்டும் என்பதை நான் ஏற்கெனவே கற்று வைத்திருந்ததால், எனது பேச்சை சித்தர்களிலிருந்து ஆரம்பித்தேன்.

மறுபிறவி உண்டு என்று சொல்கிறார்கள். ஆனால், பதினெட்டுச் சித்தர்களில் ஒருவரான சிவவாக்கியர் என்ன சொல்லுகிறார் தெரியுமா?

பேராசிரியர் பெரியார்தாசன்

கறந்தபால் மடிப்புகா; கடைந்த
வெண்ணெய் மோர்ப்புகா
விரிந்தபூ உதிர்ந்த காயும் மீண்டும்
போய் மரம்புகா
உடைந்துபோன சங்கின் ஓசை
உயிர்களும் உடற்புகா
இறந்தவர் பிறப்பதில்லை; இல்லை
இல்லை இல்லையே!

என்கிறார் அவர்.

சிவவாக்கியர் யார்? பெரிய சித்தர். அவரே இப்படிச் சொல்லியிருக்கிறார் என்றால் அதில் உண்மையில்லாமல் இருக்க முடியுமா?

# கூவத்தில் தூக்கிப்போட்ட பெரியார்!

- இப்படி நான் ஆரம்பித்ததும் கூட்டத்தினர் ஆர்வத்தோடு என் பேச்சைக் கவனிக்க ஆரம்பித்தார்கள். அவர்களின் மனநிலையைப் புரிந்துகொண்ட நான் பாரதியாரைத் துணைக்கழைத்தேன். 'ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று தேடி அலையும் அறிவிலிகாள்!' என்ற பாரதியாரின் பாடலைச் சொல்லி தெய்வங்களைச் சாட ஆரம்பித்தேன். எனக்கு மேலும் வலு சேர்த்துக் கொள்ள 'மலத்துறு சிறு புழுக்களென மதித்தேன்...' என்று சிறு தெய்வங்களைப் பற்றி வள்ளலார் பாடியிருப்பதையும் எடுத்துச் சொன்னேன்.

இப்படி முதலில் சிறு தெய்வங்களை மறுத்து, பிறகு படிப்படியாக படைப்புக் கடவுளையும் மறுத்து, இந்திய தத்துவ தரிசனங்களைப்

பற்றி விரிவாகப் பேசினேன். சுமார் நான்கு மணி நேரத்துக்கு மேல் இப்படிப் பேசினேன்.

கூட்டத்தினர் மிகவும் ஆர்வத்தோடு எனது பேச்சைக் கேட்டனர். கூட்டம் முடிந்த பிறகும் என்னோடு மிகுந்த ஆர்வத்தோடு பேசினர். பல விளக்கங்கள் கேட்டனர். நானும் பொறுமையோடு எல்லாவற்றுக்கும் பதில் சொல்லி விட்டுப் புறப்பட்டேன்.

அப்புறமென்ன! அந்த ஊர் மக்கள் அனைவரும் எனது சொந்தக்காரர்கள்போல் ஆகி விட்டார்கள். என்னுடைய பெயர் போடாமல் அங்குள்ள எந்த வீட்டிலும் கல்யாணப் பத்திரிகைகள் அச்சடிக்கப் படுவதில்லை என்கிற நிலைதான் இன்றளவும். இதை விடப் பெரிய மாற்றம், அந்த ஊரிலுள்ள அனைத்து ஆண்களும் ஆண்டுதோறும் சபரிமலைக்குச் சென்று கொண்டிருந்த நிலை மாறி, இப்போது விரல் விட்டு எண்ணக்கூடிய அளவுக்கான மிகச் சிலரே செல்கிறார்கள் என்பதுதான் எனக்குப் பெரு மகிழ்ச்சி தருகிற மாற்றம்.

சென்னைக்கு அருகில் பனப்பாக்கம் என்கிற ஊரிலுள்ள சம்பந்த(முதலியார்)ம் என்னும் பெரியவர் ஒருவர் என்னை ஒரு முறை சந்திக்க நேர்ந்தபோது, "நீங்கள் பேசும் போது, நீங்கள் சொல்வதும் சரியாகத்தான் தெரிகிறது. வாரியார் சுவாமிகள் பேசுவதைக் கேட்கும்போது அவர் சொல்வதும் சரியாகத்தான் தெரிகிறது. எனவே ஏன் இரண்டு பேருமே எங்கள் ஊருக்கு ஒரே சமயத்தில் வந்திருந்து பேசக் கூடாது?" என்று கேட்டார்.

நான் தயார் என்று சொல்லி விட்டேன். அவரும் வாரியார் சுவாமிகள் கூட்டத்துக்கு ஏற்பாடு செய்துவிட்டார். நானும் அன்றைக்குச் சென்றேன். ஏற்கெனவே வாரியார் சுவாமிகளிடம் என்னைப் பற்றிச் சொல்லி, நான் ஏதாவது கேள்வி கேட்டால் பதில் சொல்லுமாறு சொல்லி விட்டார்கள். அவரும் சரியென்று சொல்லி விட்டார்.

நல்ல கூட்டம். வாரியார் சுவாமிகள் பேச ஆரம்பித்தார். நானும் அவர் அருகில் சென்று உட்கார்ந்து கொண்டேன். "சிவாய நம என்று சிந்தித்திருப்போர்க்கு அபாயம் ஒருநாளும் இல்லை..." என்றார்.

நான் உடனே, "ஐயா ஒரு சிறு விண்ணப்பம்!" என்றேன்.

"என்ன?" என்று என் பக்கம் திரும்பிப் பார்த்தார்.

"ஐயா, பக்கத்தில் கரண்ட் ஒயர் இருக்கு. அதை சிவாயநம என்று சிந்தித்துப் பிடிக்க முடியுமா? ஷாக் அடிக்காதா?" என்றேன்.

எனது கேள்வியைக் கேட்டதும் பெரிதாகச் சிரித்தார். "தம்பி! நல்லாத்தான் கேட்கிறே. ஷாக் அடிக்கும்தான். உடம்புக்குத்தான் அடிக்கும்; உயிருக்கு அடிக்காது!" என்று சொல்லிவிட்டு பெரிதாக ஒரு சிரிப்புச் சிரித்தார்.

முதலில் நான் கேள்வி



கேட்டபோது கொஞ்சம் டென்ஷனான கூட்டத்தில், இப்போது வானைப் பிளக்கும் கைதட்டல். நான் அங்கே மேடையில்தான் உட்கார்ந்திருந்தேன் என்றாலும், வாரியார் சுவாமிகள் தமது பதிலால் என்னைக் கூவத்தில் தூக்கிப் போட்டுவிட்டதுபோல் உணர்ந்தேன்.

உடனே நான் சுதாரித்துக்கொண்டு, "ஐயா! திருமூலர் பெரிய ஞானி இல் லீங்களா?" என்றேன்.

"ஆமாம். அதிலென்ன சந்தேகம். சிவ சிவ!" என்றார்.

"அப்படிப்பட்ட திருமூலரே, 'உடம்பார் அழியின் உயிரால் அழிவர்...' என்று சொல்லியிருக்கிறாரே. உயிருக்கு உடம்பு முக்கியமில்லையா!" என்றேன்.

வாரியார் சுவாமிகள் இப்போது ஒரு விநாடி யோசித்தார். மைக்கை மூடிக் கொண்டு "நமது விவாதத்தை அப்புறமாக வைத்துக் கொள்ளலாமே. இந்தக் கூட்டத் தில் வேண்டாமே!" என்றார். நானும் சரியென்று வந்து விட்டேன். (பிற்காலத்தில் சம்பந்தம் அவர்களும் பெரியார் கொள்கையாளராகி விட்டார்)

ஆனாலும் நான் அப்போது வாரியாரை மடக்கி விட்டேன் என்று கர்வம் கொள்ள வில்லை. உண்மையில், வாரியாரிடம் விவா திப்பதற்கு எனக்குத் திருமூலரின் துணை தான் தேவைப்பட்டது. நானாக எதையும் செய்துவிடவில்லை என்பதையும் நான் மனப்பூர்வமாக உணர்ந்தேன். ஆத்திகமும் நாத்திகமும் ஒரு காந்தத்தின் இரு துருவங் களைப் போல்தான். அதைத் தனித் தனியாக வெட்டியெடுத்து விட முடியாது என்பதை யும் புரிந்துகொண்டேன்.

முன்பு நான் அடி வாங்கிய கூட்டத் திலிருந்து, வாரியார் சுவாமிகள் கூட்டம் வரை என்னுள் நடந்த இரசாயன மாற்றம் என்னை மிகவும் பக்குவப்படுத்தியது. எப்படி தலைப் பிரட்டை கொஞ்சம் கொஞ்சமாகத் தனது வாலை இழந்து, வாலில்லாத ஆனால் முழுமையான தவளை யாக உருமாற்றம் கொள்கிறதோ, அது போலவே நானும், எனது வால் தனங்களை இழந்து பணிவுள்ள ஒரு மனிதனாக மாறினேன் என்றால் அது மிகையில்லை.

இந்த மாற்றம் என்னுள் பாசிடிவ் சிந்தனைகளைத் தூண்டியது. பார்ப்பன எதிர்ப்பு என்று பேசுவதைவிட, பார்ப்பனர் அல்லாதாரின் உயர்வு பற்றி ஏன் பேசக் கூடாது? கடவுள் மறுப்பு என்பதைவிட, மனிதர்களின் ஆற்றல் பற்றி ஏன் பேசக் கூடாது? ஜாதியொழிப்பு பற்றிப் பேசுவதை விட பேதமற்ற சமத்துவத் தன்மை பற்றி ஏன் பேசக் கூடாது? இட ஒதுக்கீடு பற்றி ஏன் பேச வேண்டியிருக்கிறது? ஒரு தொன்னை பொங்கலைப் பத்துப் பேருக்குப் பங்கிட வேண்டியிருப்பதால்தான் இட ஒதுக்கீடு தேவைப்படுகிறது. பத்துப் பேருக்கும் பத்துத் தொன்னை பொங்கலைச் சமைத்து விட்டால், இட ஒதுக்கீடு என்கிற பிரச் னையே எழ வாய்ப்பில்லையல்லவா! ஏன் பத்துத் தொன்னை பொங்கல் சமைப்பதற் கான வழிமுறைகளைப் பற்றியும் எல்லோ ருக்கும் கல்வி பற்றியும் பேசக் கூடாது? 'முட் டாள்கள் வோட்டுப் போட்டு அயோக் கியர்கள் ஆட்சிக்கு வருகிறார்கள்' என்று தடாலடியாகப் பேசுவதைவிட ஏன் உண் மையான மக்களாட்சி மலர்வதற்கான விழிப் புணர்வை மக்கள் பெறும் வகையில் பேசக் கூடாது?

இப்படிப்பட்ட உடன் போக்கான - பாசிடிவான - அணுகுமுறை என்னுள் தோன்றியபோது, வெறும் பொதுக்கூட்டங் களில் மட்டுமே பேசிக் கொண்டிருந்த நான், பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் பேச ஆரம் பித்தேன். முதலில் எனது பெயரைக் கேட்டு மிரண்டு போயிருந்த ஆசிரியர்கள், பிறகு தங்கள் பள்ளி, கல்லூரிகளில் பேசுவதற்கு என்னை ஆர்வத்தோடு அழைக்க ஆரம் பித்தார்கள். பள்ளி - கல்லூரி ஆண்டு விழாக்களுக்குத் தோரணம் எவ்வளவு முக் கியமோ, அதே அளவு பெரியார்தாசனின் பேச்சும் முக்கியம் என்கிற நிலை உரு வானது.

(தொடரும்)



"அந்தக் கடைல மட்டும் டீ.வி வியா பாரம் பிச்சுக்கிட்டுப் போகுதே, எப்படி?"

"திகில் தொடர் பார்த்துப் பயப்படா மல் இருக்க தாயத்து மந்திரிச்சு இல வசமா கொடுக்கறாங்களாம்!"

– வந்தவாசி பா. ஜெயக்குமார்

ஒரு பெரிய கிளிக்கூண்டு. அது எங்கள் அலுவலகம் மாதிரி இருக்கிறது. என்னுடைய அறையில் ஏர்கண்டிஷன்ட் குளுமையில் சுகமாக உட்கார்ந்திருக்கிறேன். என் உடம்பு பச்சையாக நீளவாக்கில் இருக்கிறது. திரும்பிப் பார்த்தால் சின்னதாக வால்கூட இருக்கிறது. வாயும் மூக்கும் இணைந்து சிவப்பு நிறத்தில் புதிய அவயமாகத் தோன்ற உடனடியாக என்னை ஒரு கண்ணாடியில் பார்த்தாக வேண்டிய ஆவல் ஏற்படுகிறது. தாகம் எடுக்கிறது. அறையில் மூலையில் வாயகன்ற பாத்திரத்தில் தண்ணீர் இருக்கிறது. இதை எப்படிக் குடிப்பது என்கிற சந்தேகத்துடனேயே அதன் அருகில் போகிறேன். நடக்கும்போது என் கால்கள் மிகக் குள்ளமாகத் தெரிகின்றன. தண்ணீரைக் குனிந்து ஒரு பறவைபோல் குடிக்கிறேன்.

"ராசா வெளியே வா ஒரு நிமிஷம்" என்றொரு குரல் அமானுஷ்யமாய் ஒலிக்கிறது. இன்டர்காமில் எம்.டி. அழைக்கிறார்.

எம்.டியின் அருகில் ஒருவர் உட்கார்ந்திருக்கிறார். எம்.டி. கேட்கிறார். "சாருடைய ஃபைல் என்ன நிலையில் இருக்கு. கொஞ்சம் பார்த்து சொல்லு ராசா..."

அவருடைய மேசை மீது பல ஃபைல்கள் இருக்கின்றன. அதில் ஒன்றை நான் எடுத்துக் கொடுக்க அதைப் பிரித்தவாறே எம்.டி என்னைப் பார்த்து புன்னகை புரிகிறார். "நீ பி.எஃப்ல லோன் அப்ளை பண்ணியிருந்தேல்ல? அப்ரூவ் ஆகி ஸாங்க்ஷன் ஆர்டர் வந்தாச்சு" என்று ஒரு காகிதத்தை என்னிடம் நீட்டுகிறார். அது தானியங்களின் வடிவில் என் எதிரில் சிதற நான் ஆவலுடன் பொறுக்கிக் கொண்டு தத்தித் தத்தி என் அறைக்கு வருகிறேன். கம்பிக் கதவு மேலிருந்து கீழாக சட்டென்று மூடுகிறது. எதிரே இருந்த நிலைக் கண்ணாடியில் நான் ஒரு கிளியாக உருமாறி இருக்கிறேன்.

"நோ" என்று அலறியவாறு எழுந்து உட்கார்ந்தேன்.

"என்னங்க, என்னாச்சு?" என்று கூடவே எழுந்து பதறுகிறாள் மனைவி.

நான் என் கைகால்கள் முகம் குறிப்பாக மூக்கு எல்லாம் தொட்டுப் பார்த்துக் கொண்டு நிம்மதிப் பெருமூச்சு விடுகிறேன்.

"என்ன விஷயம்? ஏதும் கெட்ட கனா கண்டீங்களா?" என்று என் நெற்றியில் கழுத்தில் கன்னத்தில் புற உள்ளங்கை வைத்துப் பார்க்கிறாள்.

அவளுக்குப் புரியவில்லை. எழுந்து போய் தம்ளரில் தண்ணீர் கொண்டு வந்து தந்தாள். "முருகா முருகான்னு சொல்லிட்டுப் படுங்க. எனக்குத் தூக்கம் வருது. நாளைக்கு தலைக்கு மேல வேலை இருக்கு" என்றபடி அவிழ்ந்திருந்த கூந்தலை அள்ளி முடிந்து கொண்டு படுத்து விட்டாள்.

எனக்கு தூக்கம் முழுவதுமாக விடை பெற்றுப் போய்விட்டது.

எங்கள் அலுவலக வாசலில் அந்த கிளி ஜோசியக்காரர் பல காலமாய் இருக்கிறார் என்றுதான் நினைக்கிறேன். பல விஷயங்கள் கண்ணின் பார்வை விளிம்புக்கு உட்பட்டு இருந்தாலும் கவனத்தில் நுழையாது தப்புகின்ற முக்கியத்துவ மற்ற பட்டியலில் தான் அவரும் இருந்தார் என்றுதான் நினைத்திருந்தேன். பெரும்பாலான சமயங்களில் அவரைக் கடந்து உள் செல்லும் போதும் வீடு திரும்பும் போதும் யாராவது அவர் முன் உட்கார்ந்திருப்பார்கள். ஒரே மாதிரியான மாறாத குரலில் ஏதாவது சொல்லிக் கொண்டிருப்பார். எதிரே இருப்பவர் பய பக்தியில் தலை அசைத்துக் கொண்டிருப்பார். கிளி ஜோசியம் சொல்பவர்கள், கூவிக் கூவி கூட்டம் சேர்த்து லேகியம் விற்பவர்கள் இவர்களிடமெல்லாம் இருக்கின்ற ஒரே மாதிரியான மாடுலேஷனுடனான பேசும் தன்மை எனக்கு பலமுறை வியப்பை அளித்திருக்கிறது. வாக்கியத்துக்கு வாக்கியம் முற்றுப் புள்ளியே இருக்காது. எல்லாம் அரைப் புள்ளிதான். பள்ளியில் படிக்கும்போது தமிழாசிரியர் அரைப்புள்ளியின் உபயோகம்

# மேல்தளம்

**பெ. நாயகி**




குறித்து சொல்லித் தருகையில் லேகியம் விற்பவனைத் தான் உதாரணம் சொன்ன ஞாபகம். வாக்கியம் இலக்கணப்படி முடிந்த மாதிரியும் இருக்கும். விஷயப்படி இன்னும் தொடர்ந்தால்தான் ஆயிற்று என்கிற நிலையும் இருக்கும் லேகியம் விற்பவனின் தொடர் பேச்சைப் போல். அதனை வரி வடிவத்துக் கொண்டு வருகையில் அரைப் புள்ளி இட வேண்டும் என்பார்.

நான் கண்டும் காணாமலுமாக இருந்தும் இந்த கிளி ஜோசியக்காரர் என் கருத்தில் ஆழப்பதிந்திருந்தார் என்பதன் அடையாளம் தான் அக்கனவோ? என் அப்பாவித் தனத்தை எல்லோரும் உபயோகிக்கிறார்கள் என்கிற காயம் புரையோடி சீழ் வடிக்கிறதோ?

"உனக்குள் ஏதோ அவஸ்தை இருக்குடா. உன் வேலை குறித்து உன் பிறப்பு குறித்து மணவாழ்க்கை குறித்து ஏதோ குறித்து இருக்கிறது. எதிலோ நீ சந்தோஷமாக

இல்லை. அந்தப் புழுக்கம் உன் ஆழ்மனதில் உள்ளது. அதன் வெளிப்பாடுதான் இந்த மாதிரியான கனவு'' என்றான் நண்பன். சைக்காலஜி அது இது என்று ஏதேதோ படிப்பவன்.

"வாழ்க்கை குறித்து இளவயதில் ஏதும் கற்பனை வைத்திருந்தாயா? எல்லோருக்கும் இருக்கும். பின்னாளில் நடைமுறை வாழ்க்கையுடன் சமரசம் செய்து கொள்ளும் பக்குவம் ஏற்பட்டு சாதாரணமாகி விடுவார்கள். நீ அதை ஏமாற்றமாக நினைத்து உள்ளுக்குள் புழுங்கிக் கொண்டிருக்கிறாய் என்று நினைக்கிறேன்.

இந்த விஷயத்தை இவனிடம் ஆரம்பித்ததே தவறோ என்றுதான் தோன்றியது எனக்கு. தான் படித்த விஷயங்களைப் பரீட்சித்துப் பார்க்க என்னை கேஸ் ஸ்டடி மாடலாக்கி விடுவானோ என்கிற பயமும் வந்தது.

ஆனால் விஷயம் அந்தக் கனவுடன் முடியவில்லை. அது குறித்த சிந்தனைகள் என் கடந்த கால வாழ்க்கை நிகழ்வுகளைத் தோண்டி நாற்றம் கிளப்புமோ என்கிற அச்சம் ஏற்படுத்தும் அளவுக்கு ஏற்பட்ட வண்ணம் இருந்தன. சிறகுகள் வளர்ந்தால் பறந்து விடும் துடிப்புகூட ஏற்படத் தொடங்கியது. பேருந்து நிலையத்தில் யாராவது மணி கேட்டால் கூட நான் கூண்டைத் திறந்து கிளியாக வெளிவந்து சீட்டெடுத்துக் கொடுத்து அதில் கடிகாரப் படம் வருவது போன்ற கற்பனைக் காட்சிகள் தோன்றி படபடக்க வைத்தன. நண்பனிடமே மீண்டும் தஞ்சமடைவதைத் தவிர்க்க இயலவில்லை.

"நீ உன்னை இறக்கை வெட்டப்பட்ட கூண்டுக் கிளியாக நினைத்து மருகுவதை தினசரிக் காட்சியான அந்த ஜோசியரின் கிளிக்கூண்டு உறுதி செய்துகொண்டே இருக்கிறது. நீ அவரிடம் பக்குவமாகப் பேசி அவரை இடம் மாறிப் போகச் சொல்'' என்றான் அவன்.

அதே முடிவுடன் அவர் எதிரில் போய் அமர்ந்தேன்.

"ஐயா பேரென்ன?''

சொன்னேன்.

"ஐயாவோட இறந்தகாலம் எதிர்காலம் கஷ்ட காலம் போகும் காலம் எல்லாம் குறிச்சுச் சொல்ல வெளியே வந்து ஒரு நல்ல சீட்டா எடுத்துக் கொடுப்பா ராசா...''

அவருடைய குரல் என் எம்.டி.யின் குரலாக ஒலித்தது.

கூண்டு திறக்கப்பட கிளி தத்தித் தத்தி வெளியே வந்தது.

எனக்கு அந்தக் கிளியின் பெயரைக் கேட்டு அதன் பெயருக்குச் சீட்டு எடுக்கச் சொல்லிப் பார்த்தால் என்ன என்று தோன்றியது.

"கிளியின் பெயர் என்னங்க?'' என்றேன்.

என்னுடைய பெயரையே சொன்னார்.

என் கவனம் முழுதும் அதன் மீதே பதிந்தது. அது தத்தி வந்து ஒவ்வொரு சீட்டாக தள்ளி விட்டபடி அவருடைய விரல்களின் மீது பார்வையை வைத்திருந்தது. அவருடைய விரலின் சமிக்ஞைக்குப் பணிந்து ஒரு சீட்டை எடுத்து அவர் முன் போட்டுவிட்டு தன் கூண்டுக்குள் போய்விட்டது.



"இருமிக்கிட்டே இருப்பாரே உங்க தாத்தா... அவர்கிட்ட ஆசீர்வாதம் வாங்கப்போனது தப்பாப்போச்சு.''

"ஏன்...?''

"பெஸ்ட் ஆஃப் 'லொக்'ங்கறார்.''

– மானாமதுரை குமார்ஜி

இந்த ஜோசியக்காரரை இடம் மாறச் சொல்வதற்கு பதில் இந்தக் கிளியையே வாங்கி சுதந்தரமாக வானில் பறக்கவிட்டால் என் மனம் லேசாகும் என்று தோன்றியது.

"இந்தக் கிளிக்கு இறக்கைகள் உண்டா?'' என்று கேட்டேன்.

"ம். இருக்கே'' என்றார். வெளியே அதை எடுத்துப் பிரித்துக் காண்பித்தார்.

"பொதுவா இறக்கைகளை வெட்டிடுவீங்கன்னு கேள்விப்பட்டிருக்கேன்.''

"சின்னக் குழந்தை வெளியே போய் அடிபட்டிடக் கூடாதுன்னு வீட்டுக்குள் பூட்டி வைக்கிறதில்லையா? அது மாதிரி தான். இப்போ வளர்ந்து விபரம் தெரிஞ்சாச்சு. இறக்கையோடதான் இருக்கும்.''

"இப்படி கிளியை சிறைப்படுத்தி கொடுமை பண்றீங்களே, பாவமில்லை? அதை சுதந்தரமா பறக்க விடமா அதன் பிறப்புரிமையை மூலதனமா வச்சு சம்பாதிக்கறது தப்பில்லையா?"

அவர் சிரித்தார். "பறந்து போய் என்ன செய்யும் சார்? அதுக்கு தேவை வேளைக்கு சாப்பாடும் தங்க இடமும். இரண்டும் நான் ஏற்பாடு செஞ்சிருக்கேன். அது தேடித் தேடி சாப்பிட அவசியம் இல்லாம நானே வேளைக்கு பழமும் தானியமும் தர்றேன். வேறென்ன வேணும் அதுக்கு?"

"அதது கூட்டத்தோட இருந்தா சந்தோஷமா இருக்கும் இல்லையா?"

"அப்படின்னு யார் சொன்னது? கிளிக்கு சந்தோஷம் எதுன்னு நாம எப்படித் தீர்மானிக்க முடியும்?"

எனக்கு பொட்டில் அடித்தது போல் இருந்தது.

"இருந்தாலும் சுதந்தரமா பறந்து திரியறது அதனுடைய பிறவிச் செயல்பாடு இல்லையா?"

"இறக்கை இருக்குங்கறதுக்காக பறந்திட்டே இருக்கக் கூடாது சார். கால் இருக்குன்னு நீங்க ஓடிட்டேவா இருக்கீங்க? சாயங்காலமானா வீடு திரும்பலையா? இறக்கைங்கறது கட்டுப்பாட்டுக்கான அடையாளம். எங்கே எவ்ளோ தூரம் எந்த திசையில் போகணுமோ அந்தளவு மட்டும் போறதுக்குத் தான் இறக்கை. வேணும்னா நீங்களே இதை பறக்க விட்டுப் பாருங்க" என்றவர் பளிச்சென்று கூண்டு திறந்து கிளியை வெளியே எடுத்து என் கைகளின் மீது வைத்தார்.

நான் தயங்க அது படபடவென இறக்கைகளை அடித்தது. நான் தூக்கிவிட பளிச்சென்று என் கைகளைக் கொத்தி விட்டு பறந்து போய் அவருடைய காலடியில் போய் உட்கார்ந்தது. தானே நடந்து கூண்டுக்குள் போனது.

நான் அது கொத்திய கையை உதறி விட்டுக் கொண்டிருந்தேன்.

"பறவை மிருகமெல்லாம் ரொம்பத் தெளிவு சார். இருக்கறதை விட்டுட்டு பறக்கறதை நினைத்து ஏக்கத்துலயே அழியறது மனித ஜாதி ஒண்ணுதான். என்னுடைய இந்தத் தொழிலுக்கு மூலதனமும் அந்த ஏக்கம்தான். இந்தக் கிளி இல்லை. புரியுதா சார்..."

தரையிறங்கினார் போல் உணர்ந்தேன். ●

# இங்கிலீஷ் அருகில் வா!

"விருந்தாளிங்க நாளைக்கு வராங்க. இந்தத் தலையணை உறையெல்லாம் எவ்வளவு டர்ட்டியா இருக்கு. எல்லாத்தையும் மாத்திடு."

தலையணை உறை டர்ட்டியா இருக்கு. இதை இங்கிலீஷ்ல எப்படிச் சொல்றது?

'dirty'ங்கறது இங்கிலீஷ் வார்த்தைதான். ஆனால் தலையணை உறைக்கு என்ன பேரு?

ம்... ஞாபகத்துக்கு வந்துடுச்சு. pillowன்னா தலையணை. அதாவது தலகாணி. coverன்னா உறை. pillow cover தலையணை உறை. இனிமே ஈஸிதான்.

The pillow cover is dirty ன்னு சொன்னாப் போதும்.

என்ன அது டம்ளர்ல மோரா? இதையா விருந்தாளிக்குக் குடுக்கப் போறே, வேற ஏதாவது குடு. "மோர் புளிக்குது" இதை இங்கிலீஷ்ல சொல்லணும்ன்னா butter milk. பட்டர் மில்க்னா மோர். சரி, புளிப்பா இருக்குங்கறதை எப்படிச் சொல்றது? "புளிப்பா"ங்கறதை மட்டும் எப்படிச் சொல்றதுன்னு தெரிஞ்சா ஈஸியா வாக்கியத்தை அமைச்சு பேசிடலாம். இல்லியா?

சரி, 'சவர்'ன்னா 'புளிப்பாக'ன்னு அர்த்தம்.

"The butter milk is sour" ன்னா மோர் புளிப்பா இருக்குன்னு அர்த்தம்.

"Sour" -ஐ சிலர் 'ஸோர்' என்று தவறாக உச்சரிப்பதுண்டு. (Four - ஃபோர் ஆனால் Sour சவர் - அதான் ஆங்கிலத்தோட குரங்குத் தன்மை!) "sour" என்பதை (சவர்) என்று உச்சரிக்க வேண்டும்.




அந்தத் தெரு ரொம்ப குறுகலா இருக்கு. கார் உள்ளே நுழையறதே கஷ்டம்.

"அந்தத் தெரு குறுகலா இருக்கு."

Street ன்னா தெரு. சரி, குறுகலாங்கறதை இங்கிலீஷ்ல எப்படிச் சொல்றது?

'Broad' ன்னா அகலமான்னு அர்த்தம்.

"குறுகலாக"ங்கறதை "narrow" ன்னு சொல்லலாம்.

"That street is narrow" - அந்தத் தெரு குறுகலாக இருக்கிறது.

"அந்தத் தண்ணி ரொம்ப கலங்கலா இருக்கு." Waterன்னா தண்ணீங்கறது நாம எல்லாருக்கும் தெரிஞ்ச விஷயம். ஆனா... கலங்கலா இருக்குங்கறத எப்படிச் சொல்றது?

தண்ணி ரொம்ப clear ஆ இருக்குன்னு நாம் சொல்றதுண்டு. ஆனா இந்த கலங்கலா இருக்குங்கறதைச் சொல்றதுக்கு சரியான வார்த்தை என்னன்னு தெரியலையே,

தண்ணீர் கலங்கலா இருக்குங்கறத எப்படியாவது இங்கிலீஷ்ல சொல்லணும். ஒரே ஒரு வார்த்தை கிடைச்சா ஈஸியா சொல்லிடலாம். என்ன செய்யாதுன்னு யோசிக்கிறீங்களா?

Murky (ம(ர்)கி)ன்னா கலங்க



லான்னு அர்த்தம்.

The water is murky ன்னு சொல்லுங்க.

Water

தலைப்பைப் பார்த்ததும் பிரச்னையைக் கிளப்பிய Water திரைப் படம் பற்றிய நினைவு வருகிறதா?

அதெல்லாம் இல்லை. தண்ணீரின் தன்மை பற்றி வர்ணிக்க உதவும் சில வார்த்தைகளைப் பற்றி கூறியுள்ளேன்.

மென்னீரை 'Soft Water' என்கிறோம்.

The water is soft

The water is hard. (கடின நீர்)

The water is clear (தெளிந்த நீர்)

The water is brackish (உவர்ப்புத் தன்மை கொண்ட நீர்)

The water is dirty.

என்றெல்லாம் தண்ணீரின் தன்மையை வர்ணிக்கலாம்.

நானும் ரொம்ப வருஷமா பார்த்துக்கிட்டுதான் இருக்கேன். அந்தத் தெருவுல அப்படி என்னதான் இருக்கோ தெரியலை. மனுஷன் உள்ளே நுழைய முடியலை. எப்பப் பார்த்தாலும் ஜேஜேன்னு ஒரே கூட்டம்.

அதாங்க, நம்ம ரங்கநாதன் தெருவைப் பத்திதான் சொல்றேன்.

"ரங்கநாதன் தெரு எப்பவும் ரொம்பக் கூட்டமாக இருக்கு." இதை சரியா இங்கிலீஷ்ல சொல்லிடலாம்.

Always ன்னா எப்பவும், crowd ன்னா கூட்டம். ஆனா, "கூட்டமாக"ங்கறதை 'crowded' ன்னு சொல்லணும்.

Ranganathan street is always crowded.

சரி, இதுவரைக்கும் நாம பார்த்த (பேசிய) விஷயங்களை வரிசையா எழுதிப் பார்த்துடலாமா?

1. The pillow cover is very dirty.

தலையணை உறை ரொம்ப அழுக்காக இருக்கிறது.

2. The butter milk is sour.

மோர் புளிப்பாக இருக்கிறது.

3. The street is narrow.




அந்தத் தெரு குறுகலாக இருக்கிறது.

4. The water is murky.

தண்ணீர் கலங்கலாக இருக்கிறது.

5. Ranganathan street is always crowded.

ரங்கநாதன் தெரு எப்பொழுதும் கூட்டமாக இருக்கிறது.

இப்போ வேறு சில வாக்கியங்களைச் சொல்றேன். எல்லாத்தையும் இங்கிலீஷ்ல எப்படிச் சொல்லணும்னு யோசிச்சு வைச்சுக்கங்க. அடுத்த வாரம் பார்க்கலாம்.

1. இந்த வீடு வசதியா இருக்கு.

2. அந்த அறை காற்றோட்டமில்லாம ரொம்ப அடைசலா இருக்கு.

3. வீடு ரொம்பக் காற்றோட்டமா இருக்கு.

4. அடுத்த வீடு காலியா இருக்கு.

5. அவங்க வீடு ரொம்ப சுத்தமா (கண்ணுல ஒத்திக்கற மாதிரி) இருக்கு.

இங்கிலீஷ்ல எப்படி கண்ணுல ஒத்திக்கிறதுன்றீங்களா? யோசிங்க!

(தொடரும்)

C

வி. ராஜகோபாலன்

ஸ்டாலின் (நம்ம மேயர்தான்) நடித்த 'சூர்யா' தொடரில் பாண்டியனின் கண் தெரியாதத் தங்கையாக வரும் அந்த சின்னப் பொண்ணுதான் இன்று பலத் தொடர்களின் கதாநாயகியாக நடிக்கும் தீபா வெங்கட்!

இப்போது எந்தச் சேனலைத் திருப்பினாலும் இவர் நடித்த தொடர்கள் வந்து 'ஹாய்' சொல்கின்றன:

படு பிஸியாக இருக்கும் அவரை ஒரு மாலைப் பொழுதில் சந்தித்தோம்.

“தூர்தர்ஷனில் வந்த 'சின்னஞ்சிறு உலகம்' தான் நான் நடிச்ச முதல் தொடர். அப்புறம் பாலச்சந்தர் சாரோட கவிதாலயா பிலிம்ஸ்ல, கையளவு மனசு, ரகுவம்சம், காதல் பகடைனு ஆரம்பிச்சது. குட்டுப் பட்டாலும் மோதிரக் கையால குட்டுப் படணும்னு சொல்வாங்களே அது மாதிரி பாலச்சந்தர் சார்ட்ட நிறைய கத்துக்கிட்டேன். என்னை நல்லா வெளியக் காண்பிச்சது பிரேமியும், ரகுவம்சமும்தான். அப்புறம் ஏவி.எம்.மோட 'ஆச்சி இன்டர்நேஷனல், 'நிம்மதி உங்கள் சாய்ஸ்' இப்படி சொல்லிகிட்டே போகலாம்'' என்று கண்களை சுருக்கி சின்னதாய் சிரிக்கும் தீபா, குழந்தை பருவத்தைக் கழித்தது மும்பையிலாம்.

''எட்டு வருஷத்துக்கு முன்னாலதான் சென்னைக்கு வந்தேன். முதல்ல பின்னணி குரல்தான் கொடுத்திட்டிருந்தேன். (இப்பவும்) தமிழ்ல கல்லூரி வாசல் படத்துல பூஜாபட் பேசும் தமிழ் என் குரல். சரத்குமார் சாரோட ரகசிய போலீஸ் படத்துல நக்மாவுக்குக் குரல் கொடுத்ததும் நான் தான். பின்னணி குரல் கொடுத்திட்டிருக்கும்போது நானே பேசி நடிக்கும் காலம் வரும்னு நினைக்கலை. அதை லக்குன்னு தான் சொல்லணும். அப்புறம் இந்தி, மலையாளம், ஆங்கில மொழி மாற்றுப் படங்களுக்கும் நான் பின்னணி குரல் கொடுத்திருக்கேன்'' என்ற தீபா வெங்கட், 'உல்லாசம்', 'பாசமலர்கள்', 'தினந்தோறும்' போன்ற படங்களில் சின்ன, சின்ன வேடங்களில் நடித்திருக்கிறார். கேரக்டர் ரோலில் நடிக்க ரொம்ப ரொம்ப ஆசையாம்.

யாராவது இருந்தால் சொல்லுங்க!

இப்போது என்னென்ன தொடர்



# பின்னணிக் குரல்; முன்னணி நடிகை!

களில் நடித்துக் கொண்டிருக்கிறீர்கள் தீபா, என்றால், சித்தி, 1936 லவ் ஸ்டோரி என்று ஆரம்பித்து மூச்சு விடாமல் நீண்ட பட்டியல் தருகிறார்.

"சின்னத்திரைக்கு எவ்வளவு சக்தி இருக்கிறதுங்கறதை நான் வெளியூர் ஷூட்டிங் போறப்ப பார்க்கிறேன். நிறைய பெண்கள் என்கிட்ட வந்து நல்லா நடிக்கிறீங்க. நீங்க அப்படி நடிச்சா என்ன, இப்படி நடிச்சா என்ன? புடைவையில நல்லா இருக்கீங்கன்னு சொல்லும்போது மனசு ரொம்ப சந்தோஷமா இருக்கு தெரியுமா?"

**"இவ்ளோ தொடர்ல நடிக்கறீங்களே... பெரும்பாலான தொடர்கள் ஒன்றுக்கொன்று பெரிய வித்தியாசம் இல்லாமல் இருக்கின்றன. இதனால உங்களுக்கு ஏதும் குழப்பம் ஆகலையா?"**

"ம்ஹூம்... அந்த மாதிரி எனக்கு ஏதும் தெரியறதில்லே.. எந்தத் தொடரானாலும் கதைகள் வேறு வேறாகத்தான் இருக்கு. கேரக்டரும் வெவ்வேறுதான். அப்படியிருக்கும்போது நீங்க எப்படிச் சொல்ல முடியும்? ஆனால் ஒண்ணு... ஒரே சேனல்ல ரெண்டு மூணு மெகா சீரியல் வருதுன்னா அதைத் தொடர்ந்து போடாம இரண்டு மணி நேரம், முன்னே பின்னே டெலிகாஸ்ட் பண்ணலாம். இல்லேனா அதுல நடிச்சிருக்கறவங்க இதுலயும் நடிச்சாங்கன்னா பார்க்கறவங்களுக்குக் குழப்பம் வரலாம்" என்று சிரிக்கிறார்.

ஷூட்டிங் இல்லாத சமயங்களில் தீபா மியூசிக் கேட்கிறார். சினிமா பார்க்கிறார். யார் யார் எப்படி நடிக்கிறார்கள் என்பதைப் பார்த்துக் கொண்டிருப்பாராம். "எனக்கு நடிகர்கள்ல கமல், பிரபு ரொம்ப பிடிக்கும். கமல் சாரோட ஆக்டிங் ரசிச்சிட்டே இருக்கலாம் போல இருக்கும். அதே போலதான் பிரபு சாரும், நடிகைகளைப் பொறுத்தவரை குஷ்புவை ரொம்ப பிடிக்கும். அவங்க டான்ஸ் பண்றதும், நடிக்கிறதும் ரியலி க்ரேட். அவங்களோட ஒவ்வொரு ஆக்ஷனும், சின்னச் சின்ன விஷயத்துல கூட கலக்கிட்டுப் போயிடுவாங்க..."

**"ஆமா தீபா... நீங்க மட்டும் நடிக்க வந்திருக்கலைன்னா...?"**



"கம்ப்யூட்டர்ல கலக்கிட்டு இருந்திருப்பேன். கம்ப்யூட்டர் படிச்சிட்டிருந்தேன். பாதியில விட்டுட்டேன். கனவா போச்சு. இதே போலதான் கர்னாடிக் மியூசிக்கும் பரதமும். இந்தப் பிஸியில பாதியிலேயே அதை விட வேண்டியதா போச்சு. நேரம் கிடைக்கும்போது திரும்பவும் ஆரம்பிக்கலாம்னு இருக்கேன்"

'கல்யாணம் எப்ப பண்ணிக்கப் போறீங்க தீபா?' என்று கேட்டால்,

"இப்பதான் வளர்ந்துட்டு வர்றேன். அதுக்குள்ளாகவா?" என்று நிஜமாக வெட்கப்பட்டார்.

— ஏக்ஜி

படங்கள்: ஜரிஸ்



# நாலு கால்... ஒரு வால்..!

**ம**க்களிடையே பிரபலமாகப் பேசப்பட்ட சில நாவல்களை திரைப்படமாகத் தயாரிப்பதில் சில அபாயங்கள் இருக்கின்றன. புத்தக வடிவில் வெளியான போது ஏகப்பட்ட எதிர்பார்ப்புகளைக் கிளப்பிவிட்டு, அதே எதிர்பார்ப்புகளோடு தியேட்டருக்குப் போனால், தலையில் குட்டி, காதைத் திருகி 'நீங்க அப்படியெல்லாம் நினைச்சுகிட்டா அதுக்கு நாங்களா பொறுப்பு?' - என்று கேட்காமல் கேட்கின்ற இயக்குநர்களின் கைவண்ணம்தான் அதிகம் வெளியாகும். ரொம்பவும் அரிதாக, எழுதப்பட்ட நாவல்கள் ஊசிமுனையளவு கூட சுவாரஸ்யம் குறையாமல் செல்லுலாய்டில் செதுக்கப்படுவதும் நிகழ்வதுண்டு. இப்போதும் ஹாலிவுட்டில் அப்படி நிகழ்ந்திருக்கிறது.

**ஸ்டூவர்ட் வீட்டில்... (STUART LITTLE)**

இ.பி.ஒயிட் என்ற நாவலாசிரியரால் எழுதப்பட்ட கதைக்குத் திரைக்கதை எழுதியிருப்பது 'தி சிக்ஸ்த் சென்ஸ்' படத்தின் இயக்குநர் மனோஜ் நைட் ஷியாமளன். இயக்கியிருப்பது 'தி லயன் கிங்' என்ற அனிமேஷன் திரைப் படத்தை இயக்கித் தூள் கிளப்பிய டைரக்டர் ராஃமின்கஃப். இதனாலேயே ஏகப்பட்ட எதிர்பார்ப்புகளைக் கிளப்பிவிட்டது. நல்ல வேளையாக படம் ஏமாற்றவில்லை.

லிட்டில் தம்பதிக்கு ஒரே மகன் எட்டு வயது ஜார்ஜ். அவனுக்குக் கம்பெனி கொடுக்க, ஒரு பையனைத் தத்தெடுத்து வளர்க்க முடிவு செய்கின்றனர். தத்தெடுக்கப் போன விடுதியில் 'ஸ்டூவர்ட்' என்கிற பொடியனின் பேச்சும், புத்திசாலித்தனமும் அவர்களை ரொம்பவே கவர, அவனையேத் தத்தெடுத்து அழைத்து வருகின்றனர். ஒரே ஒரு பிரச்னைதான். 'ஸ்டூவர்ட்' என்பது நாலுகால், ஒரு வால், புசுபுசுவென்ற ரோமம், சின்னக் கண்கள் எல்லாம் கொண்ட ஒரு எலி! (எலி எப்படிப் பேசும் என்றெல்லாம் லாஜிக்

இது சம்மர் ஸ்பெஷல்



பார்ப்பவர்கள், நம்மூர் சினிமாவில் வெள்ளைத் தேவதைகளோடு பாடல் காட்சிகள் உலா வருவதை கொஞ்சம் ரீப்ளே செய்து பார்த்துக் கொள்ளவும்!)

வீட்டில் ஒரு மெம்பராக வளைய வரும் ஸ்டுவர்ட்டை முதலில் ஜார்ஜ் ஏற்றுக்கொள்ள மறுக்கிறான். போதாக் குறைக்கு வீட்டில் சீனியர் செல்லப் பிள்ளையான 'ஸ்னோபெல்' என்கிற பூனை வேறு. ஸ்டுவர்ட்டைப் பிடித்து விழுங்க சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் காத்திருக்கிறது. இதற்கிடையில், ஸ்டுவர்ட்டின் நிஜ அப்பா அம்மா' என்று சொல்லிக்கொண்டு நுழையும் இரு எலிகள் ஸ்டுவர்ட்டை தங்களுடன் கடத்திக் கொண்டு போய்விட அப்புறம் அட்டகாசமான கார் சேஸிங், தேடல் என்று காலில் வெந்நீர் ஊற்றிக் கொண்ட மாதிரி படம் துறுதுறு வென்று க்ளைமாக்ஸ் வரை ஓடிக் கொண்டிருக்கிறது.

எது நிஜம், எது கம்ப்யூட்டர் கை வண்ணம் என்பதை எக்ஸ்பர்ட்டுகள் கூட இனம் காண முடியாது. அவ்வளவு தத்ரூபம். விதவிதமான உடைகளில் அந்த துறுதுறு எலி வளைய வருவதும், பேசுவதும், சிரிப்பதும் கண் கொள்ளாக் காட்சி. கூட வரும் மற்ற பூனைகள் கொஞ்சமும் சளைக்கவில்லை.

வீட்டுக்கு வந்த புதிதில், தன்னை லிட்டில் குடும்பத்தின் ஒரு மெம்பர் என்று சொன்னதும் பக்கத்து வீட்டுப் பூனை ஒன்று அதை நம்பாமல் கிண்டலடித்து, விழுந்து, புரண்டு வயிறு வலிக்கச் சிரிக்கும் காட்சி படத்தின் தரத்துக்கு ஒரு ஸாம்பிள். இது மாதிரி நிறையச் சொல்லலாம். டூர், ஐஸ்கிரீம், விளையாட்டுச் சாமான்கள்... இப்படி ஏதாவது ஒன்றுக்கு நச்சரிக்கும் உங்கள் குழந்தைகளை ஸ்டுவர்ட் லிட்டிலுக்கு அழைத்துப் போங்கள் படத்தின் பிரமிப்பு விடுமுறை முடியும்வரை அகலாது!

— ஜீவன்

# உணர்வை மதிக்கும் தீர்ப்பு!

**ப**தினைந்து வயதுப் பெண் ஒருத்தி கற்பழிக்கப்பட்ட வழக்கு ராஜஸ்தான் செஷன்ஸ் நீதிமன்றத்தில் விசாரணைக்கு வந்தது. குற்றவாளிக்கு ஏழு ஆண்டு கடுங்காவல் சிறையும், ரூபாய் இரண்டாயிரம் அபராதமும் விதித்து தீர்ப்பு வழங்கப்பட்டது. குற்றம் சாட்டப்பட்டவர் இதை எதிர்த்து, ராஜஸ்தான் உயர்நீதி மன்றத்தில் வழக்குத் தொடுக்க, வழக்கை விசாரித்த நீதிமன்றம் ஒரு வினோதத் தீர்ப்பை வழங்கியது. 'பெண்ணின் உடலில் காயம் ஏதுமில்லை' என்று கூறி தண்டனையை ரத்து செய்தது. இந்த தீர்ப்பைக் கண்டு கொதித்தெழுந்த ராஜஸ்தான் போலீசார் உச்சநீதி மன்றத்தில் மேல்முறையீடு செய்தனர்.



• திலகவதி

வழக்கை விசாரித்த உச்சநீதிமன்ற டிவிஷன் பெஞ்ச், 'பெண்ணுக்குப் பாலியல் கொடுமை இழைக்கும் குற்றங்கள் தொடர்பான வழக்குகளை நீதிமன்றம் உணர்வு பூர்வமாக அணுக வேண்டும். கற்பழிக்கப்பட்டப் பெண்ணின் உடலில் காயங்கள் ஏதும் இல்லாவிட்டால், அதை வைத்து குற்றம் நிரூபிக்கப்படவில்லை என்று கூறிவிட முடியாது. இந்த வழக்கில் ராஜஸ்தான் உயர்நீதிமன்றம் அளித்த தீர்ப்பு முற்றிலும் பிழையானது என்று எடுத்துக்காட்டி, செஷன்ஸ் நீதிமன்றம் அளித்த தண்டனையை உறுதி செய்துள்ளது.

'பெண் உடம்பில் காயமில்லாவிடில் கற்பழிக்கப்படவில்லை என ஆகாது'

உச்ச நீதிமன்றம் தீர்ப்பு



• கே.வி. சுபா

**இ**ந்தத் தீர்ப்பு பற்றி உயர்நீதிமன்ற வழக்கறிஞர் **கே.வி. சுபா**விடம் கேட்டோம்.

"ஒரு பெண் என்ற முறையில் ரொம்பவும் ஆறுதலான தீர்ப்பு. அதோடு கற்பழிப்பு குற்றத்தை எப்படி அணுக வேண்டும் என்பதற்கு இதுவே இனி முன்னுதாரணமாக

இருக்கும். ராஜஸ்தான் உயர்நீதிமன்றம் எந்த அடிப்படையில், இப்படி ஒரு படு முட்டாள் தனமான தீர்ப்பைக் கொடுத்தது என்று தெரியலை. ஒரு பொண்ணுக்கு மயக்க மருந்து கொடுத்து பாழ்படுத்தும்போது, அவளால் எப்படி எதிர்த்துப் போராட முடியும்? அப்புறம் எப்படி உடம்பில் காயம் இருக்கும்? துப்பாக்கியைக் காட்டியோ, இல்லே கொலை செய்திடுவேன்னு பய முறுத்தியோ பெண்ணைப் பணிய வைக்க லாம் இல்லியா?

ஒரு பெண் தன்னை ஒருத்தன் கற்பழிச் சுட்டான்னு வந்து புகார் சொல்றதே இன்றைய அமைப்பில் பெரிய விஷயம். பாலியல் பலாத்காரத்துக்கு ஆளாக்கப்படுகிற நூறு பெண்கள்ல நாலு பெண்கள்தான் வெளியே வந்து தைரியமா சொல்றாங்கன்னு சொல்லுது தேசிய பெண்கள் கமிஷன். இப்படியொரு சமூக அமைப்புல, ராஜஸ்தான் உயர்நீதி மன்றம் மாதிரி தீர்ப்பு வழங்கினா அந்த நான்கு பேரும் வர மாட்டாங்க. அப்புறம் பாலியல் குற்றங்களை என்ன செய்தும் குறைக்க முடியாது.

''கற்பழிப்புக்கு ஆளானவள்னு தெரிஞ்ச பிறகு, சமூகம் ஏற்கனவே அவளை புறக்கணிச்சுட்ட நிலையில நீதிமன்றமும் அவளை கைவிட்டுட்டா என்ன ஆகும்...? இதை பாதிக்கப்பட்ட பெண்ணோட நிலையில இருந்து அணுகணும். அதைத்தான் உச்ச நீதிமன்றம் செய்திருக்கு.

இதே தீர்ப்பு குறித்து கருத்து சொன்னார் காவல் துறை உயர் அதிகாரி **திலகவதி** :

"ராஜஸ்தான் உயர்நீதி மன்றத்தின் இந்தத் தீர்ப்பு குறித்து ஒரு கிராமத்து பெண்ணிடம் கருத்து கேட்டால்கூட, மூடநம்பிக்கையின் மொத்த உருவம் என்பதைத் தெளிவாகக் கூறி விடுவாள். பதினாறு வயது ஆதிவாசிப் பெண் மதுரா கற்பழிப்பு வழக்கில் கூட இப்படித்தான் தீர்ப்பு வழங்கப்பட்டது. அதன் பிறகு இந்தியா முழுவதும் இருந்த ஆயிரக்கணக்கான பெண் அமைப்புகள் எதிர்ப்பைத் தெரிவித்தன. பல நீதிபதிகள் ஆணாதிக்க மனப்பான்மை உள்ளவர்களாக இருக்கிறார்கள் என்பதற்கு இந்தத் தீர்ப்பு மட்டுமல்ல; இன்னும் பல்வேறு தீர்ப்புகளைப் பட்டியல் போட்டுச் சொல்லலாம். இத்தகைய ஆணாதிக்க மனப்பான்மை வேரூன்றுவதற்கு, பெரும் உறுதுணையாக இருக்கும் விஷயம் மீடியாதான். பெண்ணே வலிய சென்று ஆண் துணை தேடுவது போலவும், அவளுக்கு மட்டுமே பாலியல் உணர்ச்சிகள் அதிகமிருப்பதாகவும் சித்திரிக்கப்படுகிறது. பெண்ணை அப்பா அடிக்கலாம், தம்பி அடிக்கலாம், புருஷன் அடிக்கலாம். இது போன்ற அடிகளை அடக்குமுறைகளைத் தாங்கிக் கொண்டு அவள் எந்த எதிர்ப்பையும் காட்டக் கூடாது என்றுதான் சினிமாவும் தொலைக்காட்சியும் இன்றைய பெண்ணைச் சித்தரிக்கின்றன. இந்த நிலையை மாற்ற அரசின் கட்டுப்பாட்டில் இயங்கும் தணிக்கைக் குழு தவிர வேறு யார் கவலைப்பட முடியும். ஒரே ஆறுதல், உச்சநீதிமன்றத்தில் நீதி இன்னும் செத்துப் போய்விடவில்லை என்பதுதான். ராஜஸ்தான் உயர்நீதி மன்றத் தீர்ப்பை ரத்து செய்த உச்சநீதிமன்றத் தீர்ப்பு எல்லோராலும் வரவேற்கப்பட வேண்டியதே."

— மௌனி

படம்: வெங்கடேஷ்

## அம்மா பல்லவி?



'மங்கை' தொடரைத் தயாரித்த விஸ்டா விஷன் தமிழ்மணி இப்போது 'அம்மா' என்ற தொடரைத் தயாரிக்கிறார். அனுராதா ரமணனின் கதை இது. அம்மாவாக நடிக்கிறார் பல்லவி. என்ன 'அம்மா'னு தலைப்பு வச்சிருக்கீங்க என்று விசாரித்தால் 'சன் டி.வில வரும் 'சித்தி' பெயர் 'கபக்'குனு பெண்கள் மனசுல இடம் பிடிச்சுட்டுதுல்ல... அதான் அம்மானு வச்சோம்' என்கிறார்கள். 'என் மகள் கூட என்னை சித்தி என்றுதான் அழைக்கிறாள்' எனப் பேட்டியளித்திருந்தார் 'சித்தி' ராதிகா. அதுமாதிரி எல்லாரும் என்னை 'அம்மா'னுதான் கூப்பிடுறாங்க என்று பல்லவி சொல்லாமலிருந்தால் சரி.

– ஏக்



# “மனிதநேயம் செத்துப் போச்சு!”

காச்மூச் காச்மூச் காச்மூச் காச்மூச் காச்மூச் காச்மூச்

“எப்ப நெனைச்சாலும் எனக்குள்ளே பொங்கி வர்ற கோபம், ஒரு இடத்துல ஒரு விபத்து நடந்திருக்குன்னு சொன்னா அடிபட்டவரைச் சுத்தி நின்னு வேடிக்கை பார்க்கறாங்களே, அந்தக் கும்பல் மீதுதான்.

“அவன் குத்துயிரும், கொலையுயிருமா கிடப்பான். ஒருத்தன்கூட கைக்குடுத்துத் தூக்க மாட்டான். வேடிக்கை பாப்பான். என்ன கேவலமான செய்கை இது!

“இந்த லட்சணத்துல தமிழ் கலாசாரம், பண்பாடுன்னு நாம வாய்கிழிய பேசிக்கிட்டிருக்கோம்.

“ஒண்ணுமில்லை, ஒருத்தன் விபத்தில சிக்கி கை வெட்டப்பட்டு ரத்தம் வழியுதுன்னா வேற ஒண்ணும் செய்ய வேணாம், ஒரு துணியை எடுத்து அந்த இடத்தில அழுத்திக் கட்டுப் போட்டுட்டு, உடனே ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனா போதும். அதைக்கூட செய்ய மாட்டேங்கிறானே!



பி. ராமமூர்த்தி

“அரசியல்வாதிகளும், அரசும் சேர்ந்து ‘எல்லாத்தையும் நாங்க செய்வோம். நீ வாங்கிக்கோ. நீயே எதையும் செய்யக் கூடாது’ என்பது மாதிரி சொல்லிச் சொல்லி நம்ம ஜனங்களுக்குக் கையேந்த மட்டுமே தெரியுதே தவிர, தன் கையை மத்தவங்க உதவிக்காக நீட்டத் தெரியாமப் போயிட்டுதோன்னு நான் பயப்படறேன்.

“நான் இதுவரைக்கும் ஆயிரக்கணக்கில் விபத்து கேஸ்களைப் பாத்திருக்கேன். சின்னச் சின்ன உதவிகளைச் செஞ்சு உடனே ஆஸ்பத்திரிக்கு அழைச்சு வந்திருந்தாங்கன்னா அவங்கள்ல நூத்துக்கு முப்பது பேரைக் காப்பாத்தி இருக்க முடியும். சக மனிதனோட கையாலாகாத்தனத்தாலே அத்தனை பேரும் அநியாயமா செத்துப் போயிருக்காங்க.

“நடந்த சம்பவம் ஒண்ணு சொல்றேன்: ஒருத்தர் வண்டியில போயிட்டிருந்தார். வழியில ஒரு ஆக்ஸிடண்ட். ஒரே கும்பல். இந்த மனுஷனுக்கு அங்கே இறங்கி என்ன ஏதுன்னு பார்க்கணும்னு தோணல்லை. வீட்டில போனா ரொம்ப நேரமாகியும் பையன் வரலை. கடைசியில பார்த்தா இவர் வந்த வழியில கும்பலா இருந்ததே, அங்கே அடிபட்டுக் கிடந்தவன் அவரோட பையன். மனித நேயம் செத்துக்கிட்டே வர்றதினாலே ஏற்பட்ட நிலையைப் பாத்தீங்களா?

“ஒருத்தன் அடிபட்டுக் கிடக்கும்போது வேடிக்கை பார்க்கற ஜன்மங்களை என்னால மன்னிக்கவே முடியாது. இவங்க ஆண்மையற்றவங்க! உலகத்தில எந்த நாட்டிலேயும் இப்படிப்பட்ட அநியாயம் கிடையாது. இவங்களுக்கு மூளை இல்லையா? அல்லது இதயம் இல்லையான்னே தெரியலே.

“பெரியார் சரியா சொன்னார்; காட்டுமிராண்டிகள்னு. அந்த வார்த்தை இவங்களுக்குத்தான் பொருந்தும்.

“அட, மிருகங்ககூட, இன்னொரு மிருகத்துக்கு அடிபட்டா போய் மெதுவா நக்கிக் கொடுக்கும். மிருகத்தை விட கேவலமானவங்க, ஆக்ஸிடென்டை வேடிக்கைப் பாக்கிறவங்க.

இவங்களை நெனைச்சாலே எனக்கு ஆத்திரம் பொங்குது.”

சந்திப்பு: **ராணி மைந்தன்**

படம்: **வெங்கடேஷ்**

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர், (வழி) தாம்பரம், சென்னை-63.
Tel & FAX: 2376129
E.mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com
Please visit our website at: www.intamm.com/sspeetam

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர் ! வணக்கம், தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்திக்கின்றோம்.

தங்களின் அன்பினாலும், ஆதரவினாலும், குருகுலத்தில் 150 மாணவ, மாணவியர்கள் நல்ல முறையில் படித்து வருகின்றார்கள். குருகுல மாணவர்களின் முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு ஒரு உயர்நிலைப்பள்ளியும் மற்றும் கம்ப்யூட்டர் பயிற்சி மையமும் துவக்கப்பட்டுள்ளது.

✶ குருகுல மாணவர்களோடு உங்களுடைய மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளுங்கள்.

✶ குருகுல மாணவர்களின், உணவு மற்றும் இதர செலவுகளுக்கு, கல்வி கற்பதற்கு கம்ப்யூட்டர் பயிற்சி பெறுவதற்கு, கட்டிடம் கட்டுவதற்கு, மற்றும் நிரந்திர வைப்பு திட்டத்திற்கு தங்களின் மேலான நன்கொடைகளை அளிக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (150 பேருக்கு) | ரூ | 1000/- |
| • மதிய உணவு | ரூ | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ | 1,000/- |
| • பிஸ்கட், மற்றும் பால் வழங்குதல் | ரூ | 750/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ | 3,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ | 9,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ | 2,00,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/ DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

